• அனுராக் அதி சுத்திகரிக்கப்பட்ட சூர்யகாந்தி எண்ணெய் • அனுராக் அதி சுத்திகரிக்கப்பட்ட சூர்யகாந்தி எண்ணெய் •

# ஊட்டச்சத்து மிக்க உணவே நல்ல உடல் நலத்தின் ஆதாரம்



ஒரு சத்துணவு வல்லுநராக இருப்பதால் உடல் வலிமையாகவும் சீராகவும் இருப்பதன் முக்கியத்துவத்தைப் பற்றி எனக்கு தெரியும். அப்படி உடலை சீராக வைப்பது அது சுலபமான விஷயமில்லை என்றும் எனக்கு தெரியும்.

இந்த வடிவத்தை : பெற சிலவற்றை நீங்கள் விட்டுக் கொடுத்தே ஆகவேண்டும்- உங்களுக்குப் பிடித்தமான சாக்லேட்டுகள், ஐஸ் க்ரீம், கொழுப்புச் சத்துமிக்க உணவுவகைகள் இன்னும் பற்பல...



இனி நேரடியாக விஷயத்திற்கு வருவோம். உணவுக் கட்டுப்பாடு என்பது கடினமான விஷயம். ஆனால் நீங்கள் எல்லாம் சாப்பிடலாம் என்று சொன்னால் ஏராளமாய் சந்தோஷம்

ஆமாம்! நீங்கள் நினைத்த எது வேண்டுமானாலும் சாப்பிடலாம் அத்துடன் "சிக்" என்ற உடல் வாகுடன் விளங்கலாம் (அதற்கு சிறுசிறு உடற் பயிற்சிகளான அலுவலகத்திற்கு வாக்கிங் செல்லுதல், நடைபயிற்சி செய்தல்... போதுமானது).

ஆனால் இது நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள் என்பதைப் பொறுத்தது. மேலும், எதனால் உங்கள் உணவு செய்யப்பட்டுள்ளது என்பதெல்லாம் பார்க்கவேண்டும். உதாரணமாக சொல்லப்போனால் என்ன சமையல் எண்ணெய் நீங்கள் உபயோகிக்கிறீர்கள் என்பதை எடுத்துக் கொள்கிறேன். எண்ணெய் என்று சொன்னேன் அல்லவா ? நல்லது அதற்கு ஒன்றும் பிரத்தியேக யோசனை செய்யத் தேவையில்லை கொழுப்புச் சத்துமிக்க எண்ணெய் உபயோகப்படுத்துவதைத் தவிர்த்தல் உசிதமானது இப்படி எல்லா நலன்களையும் கருத்தில் கொண்டு பார்க்கையில் உடலுக்குப் பாதுகாப்பான, நம்பகமான எண்ணெய் சூர்யகாந்தி எண்ணெய் ஒன்றுதான்.

"அனுராக்" ஓர் அன்பளிப்பு

"அனுராக்" நான் உபயோகப்படுத்தும் சூர்யகாந்தி எண்ணெய். இது கொலஸ்ட்ராலை எதிர்க்கக் கூடிய வல்லமை வாய்ந்தது. எனவே உங்கள் இருதயத்திற்கு இது மிகவும் நல்லது மேலும் இதில் கொழுப்பின் அளவு மிகக் குறைவு. எனவே இது உடலுக்கு மிகவும் பாதுகாப்பானது. மேலும் அனுராக் வைட்டமின் E-ஆல் செறிவூட்டப்பட்டது.

அதிநவீன முறையில் சுத்திகரிக்கப்படுவதால் 'அனுராக்' மிகவும்



தூய்மையாகவும் தெளிவாகவும் கிடைக்கிறது. மேலும் இது உங்கள் உடல் நலத்தை பேணுவதோடு உங்கள் உணவினையும் ருசிகரப்படுத்துகிறது.

இத்தனை நலன்களுடன் மற்றொரு விஷயம் என்னவென்றால் "அனுராக்" மலிவான விலையில் கிடைக்கிறது. ஏனெனில் அனுராக்-ன் "பாக்கிங்" செலவுகள் குறைவு.

இப்போது உங்களுக்குத் தெரிந்திருக்கும் "ஊட்டச்சத்து மிக்க உணவே, நல்ல உடல் நலத்தின் ஆதாரம்" என்று உங்கள் நினைப்பு எனக்கு புரிகிறது.

'அனுராக்' உங்கள் வீட்டுக்கு அருகில் உள்ள மளிகைக் கடையிலும் கிடைக்கும்.

வைட்டமின் 'E' அடங்கியது

ANURAG
அதி சுத்திகரிக்கப்பட்ட
சூர்யகாந்தி எண்ணெய்
வைட்டமின்-E அடங்கியது

எஸ் & எஸ் இண்டஸ்ட்ரீஸ் & எண்டர்பிரைசஸ் லிட்-ன் தரமான தயாரிப்பு.
189, அண்ணாசாலை
சென்னை 600 006.



• அனுராக் அதி சுத்திகரிக்கப்பட்ட சூர்யகாந்தி எண்ணெய் • அனுராக் அதி சுத்தி... எண்ணெய் •

Imageads /TAM

# உங்கள் குழந்தை துறுதுறுவென இருக்க சமவிகித ஊட்டச் சத்து தேவை.

துறுதுறுவென இருப்பதற்குத் தேவையான சக்தியைப் பெறுவதற்கு, உங்கள் குழந்தைக்குச் 'சரியான' கலோரிகள் தேவை. புரோட்டீன்களும், கார்போஹைட்ரேட்ஸும், கொழுப்புச் சத்தும் சரியான சமச்சீர் விகிதத்தில் கலந்திருந்தால்தான் இந்தக் கலோரிகள் கிடைக்கும்.

இந்தச் 'சரியான' கலோரிகள் கிடைக்க வேண்டுமானால் இதற்குச் சிறந்த வழி ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த உணவைக் கொடுக்க வேண்டும்.

உங்கள் டாக்டரிடம் கேளுங்கள் சொல்லுவார், உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆன பிறகு பால் மட்டுமே போதாது. ஒவ்வொரு வேளையும், ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வாரமும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவை உங்கள் குழந்தைக்குத் தர வேண்டும்.

எனவேதான் தாய்மார்கள் செரிலாக்கைத் தேர்ந்தெடுக்கின்றனர். ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த உணவான செரிலாக்கில் புரோட்டீன்கள் செறிந்துள்ள இரண்டு முக்கிய பொருட்களான பாலும் கோதுமையும் உள்ளன. கொழுப்புச் சத்து, கார்போஹைட்ரேட்ஸ், இரும்புச் சத்து, கால்ஷியம் ஆகிய சத்துக்களும் சரியான அளவில் கலந்துள்ளன. மேலும் இதற்கு வைட்டமின்கள் A,D,E,B--காம்ப்ளெக்ஸ் மற்றும் C பலம் சேர்க்கின்றன.

இன்னுமொரு சிறப்பு, செரிலாக் இப்பொழுது நெஸ்லேயின் புரட்சிகரமான புதிய Z-லைன் எக்ஸைலேட்டிக் முறைப்படி தயாரிக்கப்படுகிறது. இதனால் தானியங்கள் எளிதில் ஜீரணமாவதற்காக முன்கூட்டியே பக்குவப்படுத்தப்படுகின்றன. செரிலாக் மிக எளிதில் ஜீரணமாகி விடுகிறது. மிருதுவாகவும், சுவையாகவும் இருக்கிறது.

எனவே, உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் செரிலாக் கொடுங்கள். ஏனென்றால், இதில் 'சரியான' அளவு கலோரிகள் உள்ளன. ஏனென்றால், உங்கள் குழந்தை துறுதுறுவென இருப்பதற்குத் தேவைப்படும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவு இது.






இலவசம். செரிலாக் பேபி கேர் புத்தகம்.

**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் செரிலாக் அனுகூலம்**




வெகு நாட்களுக்குப் பிறகு என் பள்ளித் தோழியின் வீட்டிற்குப் போக நேர்ந்தது. என்னைப் பார்த்த சந்தோஷத்தில் அவள் பூரித்துப் போனாள். வருடக்கணக்கில் பேசாமல் விட்டுப் போன விஷயங் களைப் பேசித் தீர்த்தோம். டிபன் காப்பி எடுத்து வர அவள் உள்ளே சென்ற போது நானும் அவளைத் தொடர்ந்து சென்றேன். திடீரென்று வரவேற்பறை பக்கத்திலிருந்து பெரிய கூச்சல் கேட்டது. பயந்து போய் இருவரும் சத்தம் கேட்ட இடத்திற்கு விரைந்தோம். தோழி யின் இரண்டு குழந்தைகளும் (இரண்டும் பையன்கள்) இருந்த நிலை எங்களை அதிர்ச்சிக்கு உள் ளாக்கியது.

ஒரு பையன் சோபாவின் மேல் நின்றிருந்தான். இன்னொருவன் கீழே படுத்திருந்தான். மேலே இருந்த பையன் கைகள் இரண்டை யும் உயரே தூக்கி பெரிய அலற லுடன் கீழே படுத்திருந்தவன் மேல் குதிக்க இருந்தான். நல்ல சமயத்தில் நாங்கள் இடையில் புகுந்தோம்.

''என்ன ஆச்சு உங்களுக்கு? எதற்கு சண்டை?'' என்று கோப மாகக் கேட்ட என் தோழியைப் பார்த்து குழந்தைகள் இருவரும் சிரிக்க ஆரம்பித்து விட்டனர்.

''சண்டையா? என்ன சண்டை, யாருக்கு சண்டை? மம்மி, நாங்கள் இருவரும் விளை யாடிக் கொண்டு இருக்கிறோம்'' என்றனர்.

''என்ன விபரீத விளையாட்டு இது?'' என்று தோழி கேட்டாள்.

ஹூ"ம் இது கூட உனக்குத் தெரி யாதா என்ற பாவனையுடன் அவ ளுடைய மகன் அவளைப் பார்த்து W.W.F. விளையாட்டம்மா. டீவில வருமே. ஸ்டார் டீவில. ஃபைட்

# வேண்டாம் இந்த

டிங் ப்ரோக்கிராம் நீ பாத்த தில்லையா மம்மி?'' என்று விளக்கினான். "W.W.F. ஆ?'' என்று நாங்கள் இருவரும் வாயைப் பிளக்க, அந்த இரண்டு சிறுவர்களும் ஒரு லெக்சர் டெமான்ஸ்ட்ரேஷன் நிகழ்த்திக் காட்டினார்கள்.

World Wrestling federation எனப்படும் சர்வதேச அமைப்பு நடத்தும் ஒரு கோமாளித்தனமான சண்டை நிகழ்ச்சிதான் ப்ரைம் ஸ்போர்ட்ஸ் என்ற விளையாட்டு நிகழ்ச்சிகள் ஒளிபரப்பும் சானலில் வருகிறது. மாமிச மலை போல் இரண்டு மனிதர்கள் அருவருக்கத்தக்க வகையில் ஒப்பனை செய்து கொண்டு ஒருவரை ஒருவர் கோரமாகத் தாக்குகிறார்கள். அடி, உதை, குத்து என்பவையெல்லாம் மிகவும் மிதமான வார்த்தைகள். காட்டுமிராண்டிகள் போல கத்திக் கொண்டு ஒருவர் மேல் ஒருவர் பாய்கிறார்கள். 'ரிங்' கைவிட்டு வெளியே தூக்கி எறிகிறார்கள். திரும்ப இழுத்து வந்து அடிக்கிறார்கள். ஒருவனை, இருவர் சேர்ந்து அடிக்கிறார்கள். தலைக்கு மேல் தட்டாமாலை சுற்றி தூக்கி எறிகிறார்கள். என்ன குரூரம். இதற்கு ரசிகர்கள் வேறு. இதில் வருத்தப்பட வேண்டிய விஷயம் என்னவென்றால் இந்த விளையாட்டின் பெரும்பான்மை ரசிகர்கள் குழந்தைகள் என்பதுதான்.

இந்தக் காட்சி ஒளிபரப்பப்படும்போது ஒரு அறிக்கையும் வருகிறது. 'இது வெறும் விளையாட்டு. இதில் அடிப்பவர்களும் அடி வாங்குபவர்களும் இதற்காக விசேஷ பயிற்சி பெற்றவர்கள். இதை நீங்கள் வீட்டில் செய்து பார்க்காதீர்கள்' என்கிறது அந்த அறிக்கை. ஆனால், இந்த அறிக்கை எத்தனை குழந்தைகளால் ஏற்றுக் கொள்ளப் படுகிறது? எத்தனை குழந்தைகளால் புரிந்து கொள்ளப்படுகிறது? பெரியவர்களே சிகரெட் பெட்டியின் மேலுள்ள அறிவுரையை அலட்சியம் செய்யும் போது இது போன்ற அறிக்கைகள் குழந்தைகள் மத்தியில் எடுபடுமா? வண்ண வண்ண வேஷங்கள் அணிந்து கண்முன் நடக்கும் சண்டை மட்டுமே பார்க்கப்படுகிறதே தவிர இது போன்ற எச்சரிக்கைகள் அவர்கள் கண்களில் படுவதே இல்லை.

குழந்தைகளின் மனவியலை வைத்துப் பார்த்தால் உடல் வலிமைதான் அவர்களிடத்தில் அதிக முக்கியத்துவம் பெறுகிறது. ஒரு மனிதனின் அறிவுக்கூர்மை, மனோதிடம் இவற்றைப் பாராட்டுவதைவிட உடல் வலிமையைத்தான் அவர்கள் உணர்ந்து பாராட்டுகிறார்கள். குழந்தைகளின் கணிப்புப்படி அதிக உடல் வளர்ச்சி உள்ளவர்கள்தான் பெரிய மனிதர்கள். இந்த பாவனை அவர்களிடத்தில் உள்ளவரை பலசாலிகள்தான் அவர்களின் 'ஹீரோ'க்கள். ஒரே மனிதன் பலரை அடித்து வீழ்த்தும் சாகஸம் அவர்களை வெகுவாகக் கவர்கிறது. நமது சினிமாவில் வரும் சண்டைக் காட்சிகளுக்குப் பெரும்பான்மை ரசிகர்கள் சிறுவர்கள்தான். கண்ணில் கண்டதை நிஜ வாழ்வில் செய்து பார்ப்பது அவர்கள் இயல்பு. இதுநாள்வரை அதிகம் சண்டைக் காட்சிகள் உள்ள திரைப்படங்களை குழந்தைகள் பார்க்காமல் தடுத்து வந்தோம். ஆனால், இப்போது அவை நம் வரவேற்பறையிலேயே காணப்படும் போது பெற்றோர்களாகிய நமது நிலைமை என்ன?

W.W.F. சண்டைகள் வாரத்தில் நான்கு நாட்கள் ஒளிபரப்பப்படுகின்றன. இவர்கள் சண்டைக்கு வரும் போது செய்து கொள்ளும் 'அலங்காரங்கள்' (அலங்கோலங்கள்?) தான் எத்தனை விதம். அப்பப்பா. உடல் முழுவதும் பச்சைக் குத்திக் கொண்டோ அல்லது பெயிண்ட் அடித்துக் கொண்டோ வருகிறார்கள். சிலர் விதவித சாயங்கள் தோய்த்து நீளமான முடி அல்லது குடுமி வைத்திருக்கிறார்கள். கண்களில் மை தீட்டி அல்லது வண்ணச் சாயம் பூசி, குரூரமாகக் காட்சி அளிக்க வைக்கிறார்



# பெண்கள் அவசியம் படிக்க வேண்டிய லேனா தமிழ்வாணனின் ஒரு பக்கக் கட்டுரைகளும் வாழ்வு முன்னேற்ற நூல்களும்!



லேனா தமிழ்வாணனின் ஒரு பக்கக் கட்டுரைகள் பாகம் - 1 17.00; பாகம் - 2 16.00; பாகம் - 3 12.00; பாகம் - 4 16.00; பாகம் - 5 19.00; பாகம் - 6 15.00; பாகம் - 7 16.00; பாகம் - 8 17.00; பாகம் - 9 19.00; பாகம் - 10 20.00; பாகம் - 11 16.00; பாகம் - 12 19.00; துன்பமே போ! 6.50; தந்தை மகனுக்குச் சொல்ல வேண்டிய விஷயங்கள் 18.00; நேரத்தை மிச்சப்படுத்துவது எப்படி? 23.00; துன்பங்களையும் வீண் பழிகளையும் சமாளிப்பது எப்படி? 13.00; அனைவரும் பாராட்டும்படி நல்ல காரியங்களைச் செய்வது எப்படி? 20.00; தோல்விகளைத் தவிர்க்க சில யோசனைகள் 9.50; மண வாழ்வின் பிரச்னைகளும் தீர்வுகளும் 13.00; வெற்றி நம் கையில் 17.00; உங்கள் மனமும் உங்கள் முன்னேற்றமும் 17.50; சாதனைகள் படைப்பது எப்படி? 8.50; திறமையை வளர்த்துக் கொள்வது எப்படி? 10.00; வெற்றி உங்களைத் தேடி வரச் செய்வது எப்படி? 12.00; நம் காரியத்தை நாம் சாதித்துக் கொள்வது எப்படி? 11.00; சாதிக்க முடியாததைச் சாதிப்பது எப்படி? 12.00; உங்கள் வளர்ச்சிக்குத் திட்டமிடுவது எப்படி? 16.00; எண்ணியதை அடைவது எப்படி? 14.50; செல்வாக்கைப் பெருக்கிக் கொள்வது எப்படி? 15.00; துணிவே துணை! 9.00; வீண் பயங்கள் வேண்டாம்! 10.50; பயப்படாதீர்கள், தைரியமாய் இருங்கள்! 20.00; தற்கொலை மனநிலையும், தவிர்க்கும் முறைகளும் 19.00; எதிர்ப்புகளைச் சமாளிப்பது எப்படி? 19.00; குற்ற உணர்வும், விடுபடும் முறைகளும் 17.00; துணிவைத் தூண்டும் சம்பவங்கள் 15.50; மகிழ்ச்சியின் இரகசியங்கள் 7.50; நாம் எப்போதும் மகிழ்ச்சியாய் இருப்பது எப்படி? 7.50; தாங்க முடியாத சோகத்தைத் தாங்கிக் கொள்வது எப்படி? 14.50; மனநோய் மருத்துவ முறைகள் 22.00; மனவளமும் மனவலிமையும் பெறுவது எப்படி? 26.50; ஆற்றலை வளர்த்துக் கொள்ள அருமையான யோசனைகள் 9.00; எதையும் தாங்கும் இதயம் வேண்டும் 11.00; படிப்பினை தரும் சம்பவங்கள் 15.50.

தன்னம்பிக்கை தரும் நிகழ்ச்சிகள் 11.00; தாழ்வு மனப்பான்மையைத் தகர்த்தெறிவது எப்படி? 9.00; பலவீனங்களை வென்று பலம் பெறுவது எப்படி? 17.00; எவருக்கும் எதற்கும் பயப்படாதீர்கள்! 12.00; கோபத்தைக் குறைத்துக் கொள்வது எப்படி 16.00; உங்களுக்கு நீங்களே எதிரி 13.50; உங்கள் பிரச்சினைகளை நீங்களே தீர்த்துக் கொள்வது எப்படி? 5.75; நம் சக்தியை நாம் வீணாக்கலாமா? 8.00; மற்றவர்களைப் பார்த்தவுடன் எடைபோடுவது எப்படி? 18.00; சோம்பலை வெல்லும் வழிகள் 21.00; சுறுசுறுப்பாக வாழ்வது எப்படி? 13.00; சந்தேகம் என்னும் நோயை விரட்டுவது எப்படி? 24.00; ஞாபக சக்தி இல்லையா? 9.50; நல்ல குணங்களும் அவற்றின் நன்மைகளும் 24.00; ஆக்கபூர்வமான சிந்தனைகளும், அவை தரும் நன்மைகளும் 31.50; சிந்தனைச் சக்தியை வளர்த்துக் கொள்வது எப்படி? 18.00; இளைஞர்களுக்குப் பயன்படும் பயனுள்ள சிந்தனைகள் 11.50; நினைத்ததை முடிப்பது எப்படி? 9.00; சிரிக்க சிந்திக்க, சொன்னார் தமிழ்வாணன் பதில்கள் 14.00; மக்கள் தொடர்பில் சிறந்து விளங்குவது எப்படி? 12.00; அனைவரையும் கவர்வதற்கு அற்புத வழிகள் 16.00; நண்பர்களோடு பழகுவது எப்படி? 7.00; எல்லோரும் விரும்பும்படி பழகுவது எப்படி? 29.00; பழகத் தெரிந்திருந்தால் பணம் கூட வேண்டாமே 11.00; வேலையின்றி வேதனைப்படுகிறீர்களா? 12.00; மற்றவர்களைக் கவர்வது எப்படி? 11.00; வாழ்க்கை கசந்து விட்டதா? 13.50; சரியான முடிவுக்கு வர முடியவில்லையா? 11.00; கண்டதற்கெல்லாம் கவலைப்படலாமா? 6.00; நாம் முன்னுக்கு வராததற்கு நாமே காரணம்! 11.00; நம்மால் முடியாதது எது? 11.00; மன அமைதி இல்லையா? 11.00; ஏமாற்றங்களை ஏற்றுக் கொள்வது எப்படி? 11.00; உங்கள் மனைவி சந்தோஷமாக இல்லையா? 11.00; நீங்கள் அதிர்ஷ்டசாலிகளா? 6.50.

மேற்கண்ட புத்தகங்களுள் தேவையானவற்றை வி.பி.பியில் பெறக் கடிதம் எழுதுங்கள். பாதுகாப்பாக அனுப்பி வைக்கிறோம். தபால்காரர் புத்தகங்களை உங்களிடம் தரும் போது பணம் செலுத்தினால் போதும் (தபால் செலவு தனி). சென்னையில் இருப்பவர்கள் நேரில் வந்து வாங்கிக் கொள்வது சிக்கனம். ஷோரூம் விற்பனை நேரம் : காலை 9 மணி முதல் மாலை 6 மணி வரை. ஞாயிறு விடுமுறை. கடிதம் எழுத வேண்டிய முகவரி :

## மணிமேகலைப் பிரசுரம்,

தபால் பெட்டி எண் : 1447, 4, தணிகாசலம் சாலை,
தியாகராய நகர், சென்னை – 600 017.
போன் : 442926
ஃபாக்ஸ் : 044-446082




கள். முகமெல்லாம் முடியால் மறைத்து முட்ட வரும் மூர்க்க மாடு போல சிலர். இவர்களுக்கென்றே தயாராகிற சில பயங்கரமான நகைகளை அணிந்து வருகிறார்கள். கழுத்தில் பிளேடு போன்ற பதக்கம், கத்தி அல்லது கொடுவாள் போன்ற பயங்கரமான ஆயுதம் போன்ற பதக்கங்கள். பாம்பு வடிவத்தில் சங்கிலி. இன்னும் என்னென்னவோ. அரை கிறுக்குத்தனமாக ஒரு பிளாஸ்டிக் மருந்தடிக்கும் பம்பை கையில் பிடித்துக் கொண்டு வருகிறான் ஒரு சண்டைக்காரன். எதிராளியை அடித்துப் போட்ட பின் எல்லாப் பக்கமும் சுற்றிச் சுற்றி அந்த பம்ப்பால் 'ஸ்ப்ரே' செய்து தன் வெற்றியை பிரகடனப் படுத்துகிறான். 'லாலி பாப்' சாப்பிட்டு விட்டு நாக்கில் சாயம் ஏற்றி, அவ்வப்போது அந்த நாக்கை நீட்டி குரூரமாக 'போஸ்' கொடுக்கிறார்கள்.

கரகரத்த குரலில் 'நான்தான் உலகிலேயே மிகவும் பெரியவன் என்னை வெல்ல யாரும் இல்லை' என்று கத்திக் கொண்டு, கோணங்கித்தனமாக முகத்தை சுருக்கி, நீட்டி பல்வேறு சேஷ்டைகள் செய்வதை பார்க்கவே அருவருப்பு ஏற்படுகிறது. இவர்களுக்கென்றே கண்ணாடிகள், கையில் கட்டும் பட்டைகள், இடுப்புக் கச்சைகள், அங்கிகள் எல்லாம் தயாரிக்கப்படுகின்றன. அவர்கள் அணியும் அணிகலன்கள் போலவே குழந்தைகளுக்கும் வர ஆரம்பித்து விட்டன. இன்னும் இந்திய மார்க்கெட்டுக்கு இவை வரவில்லை.

ஆனால் அவர்களுடைய படங்கள் கொண்ட போஸ்டர்கள், ஸ்டிக்கர்கள், லேபிள்கள் எல்லாம் இங்கு கிடைக்க ஆரம்பித்து விட்டன. முன்பெல்லாம் குழந்தைகள் விதவிதமான தபால்தலைகள், கொடிகள் சேகரித்து 'ஆல்பம்' தயாரிப்பார்கள். இப்பொழுது இந்தச் சண்டை 'வீரர்கள்' படங்களை ஒட்டி ஆல்பம் தயாரிக்கிறார்கள்.

இந்தச் சண்டைகள் டீவியில் வருவது போதாதென்று இவை காஸெட்டுகளாகவும் விற்பனைக்கு வந்து விட்டன. இதை வேறு சில குழந்தைகள் திரும்பத் திரும்ப போட்டுப் பார்க்கிறார்கள். என்னதான் விளையாட்டு என்றாலும் இந்த விபரீதம் தேவைதானா? பள்ளியில் ஒவ்வொரு குழந்தையின் பேச்சிலும் 'ரேஸர் ரோமான், பாம் பாம் பிக்லோ, அண்டர்டேக்கர், நாஸ்டி பிரதர்ஸ்' என்று பல பெயர்கள் அடிபடுகின்றன. இந்த வேடிக்கை பெயர்களெல்லாம் இந்தச் சண்டை 'வீரர்களின்' திருநாமங்கள் தான்.

இந்த வெறி மேலும் மேலும் குழந்தைகளிடையே பரவுவதற்கு முன் இதைத் தடுத்து நிறுத்துவது பெற்றோர்களின் கடமை. குழந்தைகளிடையே ஆக்கபூர்வமான எண்ணங்களை வளர்த்து, இது போன்ற கீழ்த்தர எண்ணங்களை வளர்க்கும் காட்சிகளை பார்ப்பதைத் தவிர்ப்போம். இப்பொழுது குழந்தைகளிடையே ஒரு புதிய புரளி கிளம்பியிருக்கிறது. இந்தச் சண்டை இந்தியாவில் நிகழ்த்தப்பெறும் என்றும் அது நேரடி ஒளிபரப்பாக எல்லா நாடுகளுக்கும் ஒளிபரப்பப்படும் என்றும் சொல்லப்படுகிறது. இந்தச் செய்தி பல பெற்றோர்கள் வயிற்றில் புளியைக் கரைப்பது நிஜம்தான். பெற்றோர்களுக்கு ஒரு வேண்டுகோள். நம் குழந்தைகளின் மனநிலையையும், அவர்களின் எதிர்காலத்தையும் மனத்தில் கொண்டு, இதுபோன்ற நிகழ்ச்சிகளை அவர்கள் பார்ப்பதைக் கட்டுப்படுத்துங்கள். பள்ளிகளிலும் இது போன்ற நிகழ்ச்சிகளால் ஏற்படக்கூடிய தீய விளைவுகளை சுட்டிக்காட்டி ஆசிரியர்கள் அறிவுரை கூறலாம். உடனடியாக இதைப் பற்றி நாம் சிந்தித்துச் செயல்படாவிட்டால், புத்தரும், மஹாவீரரும், காந்தியும் இந்த மண்ணில் பிறந்ததற்கு அர்த்தமே இல்லாமல் போய் விடும்.

– ஜானகி விஸ்வநாத்

*பிப்ரவரி '94*

**இந்த இதழுடன் இணைப்புப் புத்தகம் கிடைத்ததா?**

# மங்கையர் மலர்,

# நெய்வேலி பழுப்பு நிலக்கரி நிறுவனம் (NLC),

# தமிழ்நாடு மருத்துவமனை வழங்கும்

# நெய்வேலியில்

# மகளிர் - மருத்துவர் சந்திப்பு

வெளிநாடுகளில் நீண்ட நாட்கள் பணிபுரிந்துவிட்டுத் தாயகம் திரும்பி நம் மக்களுக்குச் சேவை செய்ய வேண்டும் என்ற விருப்பத்தோடு சென்னை, தமிழ்நாடு மருத்துவமனையில் பல மருத்துவர்கள் பணிபுரிந்து வருகிறார்கள். அவர்கள் இதுவரை மங்கையர் மலர் மூலமாக திருச்சி, கோவை, மதுரை நகர வாசகிகளைச் சந்தித்திருக்கிறார்கள்.

நெய்வேலி வாசகிகளே... உங்கள் நகரத்திற்கும் இவர்கள் வரப் போகிறார்கள். நெய்வேலி மட்டுமில்லாமல் பண்ருட்டி, கடலூர் போன்ற சுற்று வட்டாரத்திலுள்ள ஊர்களில் இருந்தும் வாசகிகள் வந்து கலந்து கொள்ளலாம்.

இல்லத்தரசிகள் மருத்துவர்களிடம் கேள்விகள் கேட்கலாம். ஆலோசனைகள் பெறலாம். பெண்களுக்கான வினாடி வினா போட்டி, பள்ளி மாணவ மாணவிகளுக்கான வினாடி வினா போட்டி ஆகியவையும் உண்டு. (மாணவர்களைப் பொறுத்தவரை - நெய்வேலியில் உள்ள பள்ளிகளின் மூலமாக வரும் 6 முதல் 10 வகுப்பு வரை படிக்கும் மாணவ, மாணவிகள் மட்டும் கலந்து கொள்ளலாம்.)

இளம்பெண்கள் குறிப்பாகக் கல்லூரி மாணவிகளுக்குப் பல ஐயங்கள் இருக்கும். அவர்கள் தங்கள் தாயிடம் கூட கேட்க முடியாத சந்தேகங்கள் இருக்கலாம். இவர்கள் இங்கு பெண் மருத்துவர்களைத் தனியே மூடிய அரங்கினுள் சந்திக்கலாம். அவர்களிடம் ஆலோசனைகள் கேட்கலாம். கல்லூரி மாணவிகள் கலந்து கொள்ளும் நிகழ்ச்சி பெண்கள் மட்டுமே கலந்து கொள்ளும் அரங்கமாக அமையும்.

**பெண்களுக்கான வினாடி வினா பரிசுகள்**

| | |
|---|---|
| முதல் பரிசு | - மிக்ஸி |
| இரண்டாம் பரிசு | - குக்கர் |
| மூன்றாம் பரிசு | - இஸ்திரிப்பெட்டி |
| ஆறுதல் பரிசு | - ஹாட்பேக் |
| (ஐந்து பேருக்கு) | |

**பள்ளி மாணவ, மாணவிகளுக்கான வினாடி வினா பரிசுகள்**

| | |
|---|---|
| முதல் பரிசு | - கைக்கடிகாரம் |
| இரண்டாம் பரிசு | - கைக்கடிகாரம் |
| மூன்றாம் பரிசு | - மேஜைக் கடிகாரம் |
| ஆறுதல் பரிசு | - சுவர்க் கடிகாரம் |
| (பத்துப் பேருக்கு) | |

இடம் : பயிற்சி வளாகம் (Training Centre)
பிளாக் 20, (டீ. வி. டவர் அருகில்)
நெய்வேலி.

நாள் : 27.2.'94 ஞாயிற்றுக்கிழமை

நேரம் : காலை 10 மணி முதல்.



பெண் -

ஓர் அற்புதம்!

இவளின் சக்தி அளவிடற்கரியது.

ஆக்கவும் முடியும்; அழிக்கவும் முடியும்!

இதென்ன வழக்கமான புராணமாக இருக்கிறதே, எல்லாரும் மேடைகளிலும், பத்திரிகைகளிலும் சொல்லிச் சொல்லி சலிச்சுப் போச்சே என்று யோசிக்கிறீர்களா?

ஆனால் இந்த வார்த்தைகளை அனுபவ பூர்வமாக உணரும் போது மனசுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. சமீபத்தில் ஒரு ஆன்மீகக் கூட்டத்தில் கலந்து கொண்டேன். அங்கு ஸ்ரீலஸ்ரீ ஓங்காரனந்தா சுவாமிகள் சொன்னார் ;

''பெண்கள் வெகு எளிதாக ஆன்மீக நிலையில்
மிக உயர்ந்த நிலையை அடைந்துவிட முடியும்.
ஏனென்றால் அவர்கள் இயற்கையாகவே
அப்படி படைக்கப்பட்டு இருக்கிறார்கள்.
நினைத்ததைச் சாதித்து விட வேண்டும் என்பதில் தீவிரம் அதிகம்.''

ஆன்மீக நிலைக்குப் பெண்கள் உயருகிறார்களா



எனப் பார்க்க வேண்டாம். இவர்கள் நல்லவண்ணம் வாழுகிறார்களா, நாம் வாழுகிறோமா என்று பார்த்தால்...

சமீபத்தில் ஒரு அனுபவம். ஒரு பெண். நல்ல பெண் தான். அவளுக்குத் திருமணம் செய்து கொண்டு விட வேண்டும் என்று எண்ணம் தோன்றி விட்டது. இந்த எண்ணம் புதிதாகத் தோன்றி விடவில்லை. ரொம்ப நாளாக இருந்தது அதிகமாகி விட்டது. அவளுடைய குணங்கள் மாறிவிட்டன. 'பாலும், குத்தகை...' மட்டுமில்லை, யாரைப் பார்த்தாலும் நாய்க்கடி, பேய்க்கடிதான். எரிந்து எரிந்து விழுவதும், அத்தனை பேர் மேலேயும் குற்றச்சாட்டுக்களை அள்ளி வீசுவதும்...

மற்றொரு பெண் . முப்பது வயது வரை வரன் பார்த்துக் கொண்டு இருக்கிறார்கள். ஒருமுறை ரொம்ப மனம் நொந்து சொன்னாள், ''எங்கேயாவது கல்யாணத்துக்குப் போனா அங்க உட்கார்ந்து இருக்கிற மணப்பெண்ணைத் தள்ளிட்டு எனக்கு உக்காந்துக்கணும்ன்னு வெறி வரும்'' என்று அழுது விட்டாள்.

பெண்கள் ஏன் இப்படி கல்யாணத்துக்காக மனம் நொந்து போகிறார்கள். திருமணம் ஆகவில்லையே

# பிரச்னைகள்; வார்த்தைகள்!

என்ற ஏக்கத்தில் தற்கொலை செய்து கொள் பவர்கள் உண்டு. நெறி தவறிப் போய் தனக் குத் தகுதியில் லாத ஆணைக் காதலிக்கிறேன் என்று ஓடி விட்டு வாழ்க்கை முழுவதும் குழந்தைகளுடன் கண்ணீரில் கரைகிறவர் களும் உண்டு. அதிகபட்சமாக ஒன்று, இரண்டு, மூன்று என்று தாவுபவர்களும் உண்டு.

திருமணத்திற்காகக் காத்திருக்கும் சகோதரிகளைப் புண்படுத்த இதை எழுத வில்லை. சகோதர சகோதரிகளுக்காகத் தங்கள் திருமணத்தைத் தள்ளிப் போடும் மெழுகுவர்த்திகளும் உண்டு, நிறைய. தகுந்த வரன் அமையாமல் அமைதியாக தங்கள் வேலையுடனே ஐக்கியமாகிப் போகிறவர்களும் உண்டு.

நான் சொல்ல விரும்பும் விஷயமே வேறே.

நாம் பெண்களை எப்படி வளர்க்கி றோம்? சிறு குழந்தையாக இருக்கும் போதே 'திருமணம்' 'புருஷன்' என்ற வார்த்தைகளை அறிமுகப்படுத்தி விடு கிறோம். மேல் படிப்பானாலும் சரி, உடை உடுத்தும் விவகாரமானாலும் சரி எல்லாமே 'வரப் போகிறவனை' அனுசரித்தே தீர்மா னிக்கப்படுகிறது. திருமணம் அவள் நெஞ் சிலே வாழ்வின் லட்சியமாகப் பதிக்கப் பட்டு விடுகிறது.

சரி, இந்தக் காலத்துக் குழந்தைகளுக் குக் கேட்கவே வேண்டாம். இப்போதெல் லாம் திரை மறைவு சமாசாரங்கள் எதுவுமே இல்லையே. டீ.வி.யானாலும், திரைப்பட மானாலும், கதையானாலும் 'எல்லாவற் றையும்' பட்டவர்த்தனமாகக் காட்டுகிறார் கள். ஓரளவு புரிந்து கொள்ளும் வயது வந்த வுடனேயே பெண் குழந்தைகள் இவற்றைப் பார்க்கிறார்கள். பத்து வயதிலேயே 'பெரிய வளாகி' விடும் பெண் குழந்தைகள் இப் போது அதிகம். இவர்களுக்கு எல்லாம் தெரிந்து விடுகிறது, மூளை அளவில். ஆனால் வாழ்க்கையை ஏற்கும் பக்குவம் வர இன்னும் பத்து வருடங்களாவது காத் திருக்க வேண்டுமே!

இந்தப் 'பத்து வருடங்கள்'தான் அன் னையர் பொன்னாகப் போற்ற வேண்டிய காலம். பெண் குழந்தைகளின் நெஞ்சிலே உயர் சிந்தனைகளை விதைக்க வேண்டும். 'படி படி' என அவளை அரித்தெடுக்கும் போது 'ரிலாக்ஸ்' பண்ண டீ.வி. பார்க் கிறாள். படிக்க வெகுதூரம் போக வேண் டிய நகர வாழ்க்கை. வழியில் காத்துக் கிடக் கும் கவர்ச்சிகள்.

இப்போதுதான் மீசை முளைக்காத விடலைப் பையன்கள் தாளம் போட்டு ஆடிப்பாடிக் காதலிக்கிறார்களே சினிமா வில். கதாநாயகியும் பனிரெண்டு, பதி மூணு வயதிலேயே அரங்கேறி விடுகிறாள்.

நம் பெண் குழந்தையோ நுட்பமான மனதுடன் இருப்பாள். தொட்டால் கசங்கிப் போகும் மென்மை. மனதில் எதுவும் ஆழப் பதிந்து போகும். பார்க்கும் இடமெல்லாம் இன்று காதலும், முத்தமும் தான். சிறு வயதில் இருந்தே பேசப்பட்ட 'புருஷன்' வார்த்தை மதிமயக்குகிறது. எத்தனையோ சாதிக்கப் பிறந்த குழந்தைகள் மதிமயங்கிப் போகிறார்கள். தெருக்களில் காதல் மலிவாகக் கிடைத்து விடுகிறது. காமப்புலி காதல் என்ற பசுத்தோல் போர்த் திக் காத்துக் கிடக்கிறது. அதற்குச் சாமரம் வீச திரைப்படப் பாடல்கள். எளிதில் மயங் கிப் போகிறார்கள்.

இப்படிக் காதலில் மாட்டிச் சறுக்காத பெண்கள் 'கல்யாண ஜுபத்தையே' செய் கிறார்கள். கனவுகளில் மூழ்குகிறார்கள். அதிலே சலிப்பையும், விரக்தியையுமே காணுகிறார்கள். தன்னையும் நொந்து, சுற்றத்தையும் நொந்து... மென்மையே உருவான பெண்மை மெல்ல மெல்ல நிறம் இழந்து, சாயம் மங்கி விபரீத உருவங் களைப் பெறுகிறது. இவளுக்குப் பிறகு திரு மணமானாலும் நாத்தனாராகவோ, அண்ணியாகவோ இன்னொரு பெண்ணை வதைப்பாள்.

**மஞ்சுளா ரமேஷ்**

ஏலித்த அவலம்?

நம்மைச் சுற்றி எரியும் கொள்ளிக் கட்டைகள் நிறைய இருக்கத்தான் செய்கின்றன. நம்மிடம் உள்ள பெண் குழந்தை எனும் பொற்சிலையைப் பத்திரமாகப் பாதுகாப்போம். இவர்கள் மகாபுத்திசாலி கள். எத்தனை திறமைகள் அந்த இளம் உள்ளங்களுக்குள் இருக்கின்றன. அவற்றை உற்சாகப் படுத்தி வெளியே கொணருவோம். சிறு வயதில் இருந்தே பெண் குழந்தைகளுக்கு ஏதேனும் ஓர் உயர்ந்த லட்சியத்தை மனதில் பதியவைக்க வேண்டும். அவர்களுக்கு எந்தத் துறையில் ரசனை உள்ளதோ அந்தத் துறையில் ஊக்கப்படுத்துங்கள்.

அவள் பெரிய டெக்ஸ்டைல் டிசைனராக ஆகலாம்.

அவள் பெரிய தொழில் அதிபர் ஆகலாம்.

அவள் பெரிய கம்ப்யூட்டர் சயின்டிஸ்ட் ஆகலாம்

அவள் பெரிய அழகுக் கலை நிபுணர் ஆகலாம்

பெரும் இசைக்குயில் ஆகலாம்

நாட்டிய மேதையாக வரலாம்

எத்தனை இல்லை இந்த உலகில் சாதிக்க? வெற்றி பெற்ற, இன்று சாதனைகள் படைத்துக் கொண்டிருக்கும் பெண் மணிகள் பற்றியெல்லாம் அவர்களிடம் பேசுங்கள். திருமணத்தை, லட்சியமாக் காதீர்கள். தாய் - மகள் என்ற உங்கள் இருவரிடையே பூக்கும் நட்பு என்பது உங்களுக்குக் கூடுதலாகக் கிடைக்கும் போனஸ்.

இப்படி வளரும் பெண்கள் மலிவான கடைச்சரக்காகிப் போன காதல் பக்கம் ஏன் திரும்புகிறார்கள்? தகுந்த வயது வந்து, அவர்கள் சுயமுயற்சியால் ஒரு புதிய சாதனை படைக்கும் தருணம் தகுந்த மனதும் உணர்வுகளும் வரும். அந்தப் பக்குவப் பட்ட மனது வாழ்க்கை களத்தில் இறங்க தயாராகும். அல்லது அந்த நேரத்திலே தகுந்த துணையைத் தானே தேடிக் கொண்டால் அந்த 'செலக்ஷன்' நிச்சயம் தவறாகவே போகாது.

இப்படிப்பட்ட பெண் குழந்தைகளைத் தான் நாம் இந்தச் சமுதாயத்திற்குத் தர வேண்டும். டீன்-ஏஜ் பெண்கள் எல்லாம் காதலனைத் தேடிப் போகும் கொடுமை நம் நாட்டிற்கு வேண்டாம். அதை மாற்றும் சக்தி நம் கையில்தான் உள்ளது.

ஆம்!

பெண் சாதிக்கத்தான் பிறந்தவள்.

சாக்கடையில் உழலப் பிறக்கவில்லை.

'பெண்மை வாழ்கவென்று கூத்திடுவோமடா!'

---

# மங்கையர் மலர் &

# வி. ஜி. பி. தங்கக் கடற்கரை

## இணைந்து வழங்கும்

# சுற்றுலா போட்டி

### முதல் போட்டி - 'நான் சுற்றுலா போன போது...'

நீங்களும் உங்கள் குடும்பத்தாரோ (அ) நண்பர்களோ சுற்றுலா சென்றிருப்பீர்கள். எத்தனையோ சுவையான சம்பவங்கள் நடந்திருக்கலாம். அவற்றில் மிகச் சிறப்பான ஒன்றை எழுதுங்களேன்.

### இரண்டாவது போட்டி - 'நாம் விருந்தினர்களாகப் போகும்போது...'

குடும்பத்தாரோடு சுற்றுலா போகும்போது அந்த ஊரில் உள்ள தெரிந்தவர் வீட்டுக்கு நீங்கள் விருந்தினராகப் போகலாம் அல்லது உங்கள் வீட்டிற்கே ஊர் சுற்றிப் பார்க்க விருந்தினர்கள் வரலாம்.

இப்படி ஓரிடத்திற்கு விருந்தினர்களாகச் செல்பவர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும்? நல்ல யோசனைகளை (அனுபவித்தவர்கள்!) சொல்லலாமே!

### மூன்றாவது போட்டி - 'இதோ இருக்கிறது அருமையான சுற்றுலா தலம்...!'

உங்கள் ஊருக்கு அருகிலோ அல்லது நீங்கள் கேள்விப்பட்ட இடமோ சுற்றுலா செல்ல அருமையான இடமாக இருக்கலாம்.

நீங்கள் கண்டுபிடித்து வெளியுலகுக்கு அறிமுகப்படுத்துங்களேன். இடத்தைக் குறிப்பிடும்போது எல்லோருக்கும் தெரிந்த ஊரில் இருந்து எப்படிச் செல்ல வேண்டும் என்று குறிப்பிட்டால் படிப்பவர்களுக்கு வசதியாக இருக்கும். புகைப்படங்கள் இருந்தால் இன்னும் ஜோர்.

மூன்று போட்டிக்கான கட்டுரைகளுமே மங்கையர் மலரில்
ஒரு பக்கத்திற்கு மிகாமல் பார்த்துக் கொள்ளவும்.

### பரிசுகள் (ஒவ்வொரு போட்டிக்கும்)

முதல் பரிசு : கறுப்பு வெள்ளை டீ. வி. (போர்ட்டபிள்)
இரண்டாவது பரிசு : மிக்ஸி
மூன்றாவது பரிசு : குக்கர்
நான்காவது பரிசு : மில்க் குக்கர்
ஆறுதல் பரிசு : சுவர்க் கடிகாரம் (மூன்று பேருக்கு)

இவை தவிர மூன்று போட்டிகளிலும் இருந்து தேர்ந்தெடுக்கப்படும் முப்பது பேருக்கு ஒரு வருடத்திற்கு வி. ஜி. பி. தங்கக் கடற்கரைக்குள் செல்ல இலவச அனுமதி (ஒவ்வொரு சீட்டிற்கும் நான்குபேர் செல்லலாம்.)

கட்டுரைகள் வந்துசேரக் கடைசி தேதி : 12.2.'94

### சிறப்புப் பரிசு

மூன்று போட்டிகளிலும் இருந்து தேர்ந்தெடுக்கப்படும் மிகச் சிறந்த ஒரு கட்டுரைக்கு - கோல்டன் பீச் காட்டேஜில் இருவருக்கு இரண்டு நாட்கள் (Two nights) தங்க அனுமதி.

* பரிசளிப்பு விழா ஏப்ரலில் வி. ஜி. பி. கோல்டன் பீச்சில் நடக்கும் வசந்தவிழாவில் நடைபெறும். பரிசு பெற்றவர்களுக்குத் தேதி பற்றிய விவரங்கள் அனுப்பப்படும்.

* தேர்ந்தெடுக்கப்பட்ட கட்டுரைகள் மங்கையர் மலரில் பிரசுரிக்கப்படும். உறையின் மேல் எந்தப் போட்டிக்கு எழுதுகிறீர்களோ அந்தப் போட்டியின் தலைப்பை எழுதி, மங்கையர் மலர், 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

* எந்தவொரு முடிவிற்கும் ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

# எண்ணமெல்லாம் எண்ணெய்!

சராசரி இந்திய குடும்பங்களின் மாதாந்திர பட்ஜெட்டில் முக்கிய இடம் வகிப்பது எண்ணெய். எந்த வகை எண்ணெய் உடலுக்கு நல்லது என்று நாளொரு சர்ச்சையும் பொழுதொரு பட்டிமன்றமும் நடைபெறுகின்றது. உண்மையில் இந்த கொழுப்புகள் அபாயமானவையா? இவைகளுக்கு உடலில் தேவை இருக்கிறதா? இது போன்ற கேள்விகளுக்கு உணவியல் நிபுணர்கள் கூறும் கருத்தைக் கேட்போமா?

எண்ணெயிலுள்ள கொழுப்பு கட்டாயம் நம் உடலுக்குத் தேவை. சக்தியைக் கொடுக்கவும், கொழுப்பில் மட்டுமே கரையக்கூடிய வைட்டமின் ஏ, டி போன்றவற்றை உடலின் எல்லா பாகங்களுக்கும் எடுத்துச் செல்லவும் கொழுப்புக்கள் தேவை. சில வகை ஹார்மோன்களை உற்பத்தி செய்யவும், கொலஸ்ட்ரால் அளவை சமநிலைப் படுத்தவும், எல்லாவற்றிற்கும்மேல் உணவில் ருசிக்காகவும் எண்ணெய் தேவை.

பல சமயங்களில் சூரியகாந்தி எண்ணெய், பருத்தி எண்ணெய் முதலியவற்றின் பாக்கெட்டுகளில் பூரிதமானது (saturated) அல்லது அபூரிதமானது (unsaturated) என்ற வார்த்தைகள் காணப்படுகின்றன. முன்னது குளிர் அதிகமாகும் போது அறை உஷ்ண நிலையிலேயே உறைந்து விடுகிறது. உதாரணம் தேங்காய் எண்ணெய், பாமாயில் முதலியன. கடலெண்ணெய், நல்லெண்ணெய் முதலியன இரண்டாவது வகையில் அடங்கும். இவை எளிதில் உறைவதில்லை.

எண்ணெயில் உள்ள கொழுப்பை நீக்குவது அல்லது குறைப்பது 'ரிஃபைனிங்' (refining) எனப்படுகிறது. இதனால் சில அசுத்தங்களும் நீக்கப்படுகின்றன. ஆனால் அதேசமயம் சில வைட்டமின்களும் அழிக்கப்படுகின்றன. மேலும் பருத்தி, சூரியகாந்தி எண்ணெய்கள் அதிகமாக சூடேற்றப்படும் போது, உஷ்ணநிலை ஏற்றத்தைத் தாங்க முடியாமல் முறிந்துவிடுகின்றன. இவைகளை, உணவை பொரிக்க உபயோகித்தால் விரைவில் எண்ணெய் கருப்பு நிறமாகி விடுகிறது.

இதனாலேயே, தாளித்தல், வறுத்தல் போன்றவற்றிற்கு சூரியகாந்தி எண்ணெய் போன்றவற்றையும், உணவைப் பொரிக்க கடலை எண்ணெய் அல்லது நல்லெண்ணெயையும் உபயோகிக்கலாம்.

எண்ணெயினை வைத்திருக்க உலோகங்கள் - டின் முதலியவைவற்றால் செய்யப்பட்ட பாத்திரங்கள் சிறந்தவை. அடுத்தபடியாக கண்ணாடி ஜாடிகளும், பல அடுக்குகளினால் ஆன 'டெட்ரா பாக்கு'கள் முதலியவற்றையும் பயன்படுத்தலாம்.

எண்ணெயினை உங்கள் அன்றாடத் தேவையைப் பொருத்து உபயோகியுங்கள். எண்ணெயின் அளவை உங்கள் உடலின் தேவைக்கேற்ப உபயோகியுங்கள்!

தொகுப்பு :
கிருஷ்ணவேணி ரங்கநாதன்










## இது கல்யாண சீசன் - 4

**க**ல்யாண சீசன் கட்டுரைப் படித்தேன். கல்யாணங்களிலே உறவினர்கள் பங்கு என்பதைப் பற்றி ஒரு ஆராய்ச்சிக் கட்டுரையே சமர்ப்பிக்கலாம். அதனால்தான் அதன் தொடர்ச்சியாய் கல்யாண சீசன் - 4 எழுத மனம் விழைந்தது எனக்கு.

பொதுவாக திருமணத்திற்கு வருபவர்கள் சிலரால் கல்யாண வீட்டில் தகராறு ஏற்படுகிறது. எத்தனையோ சிரமங்களுக்கு நடுவில் பெண்ணைப் பெற்றவர் திருமணம் செய்கிறார். பெண் வீட்டாரும், பிள்ளை வீட்டாரும் சகஜமாய் இருந்தால் கூட இடையில் வந்து புகுந்து எதையாவது பேசி காரியத்தைக் கெடுக்கும் 'நபர்'களும் இருக்கிறார்கள். ஒரு கல்யாணத்தில் மகிழ்ச்சியுடன் சம்பந்திகள் இருந்து, கல்யாணம் நடந்து கொண்டிருந்தது. இடையில் வந்த பையனின் தூரத்து உறவினர்கள் சிலர் 'பாத்திரங்கள் குறைவு' என்று கமெண்ட் அடித்துச் சிரிக்க, திருமணம் நிச்சயித்த உறவுப் பெண், பெண் வீட்டாரிடம் சண்டையிட, ஒரே அமர்க்களம். ஆனால் பையனின் பெற்றோர் தவறு நடந்ததற்கு வருந்துவதாகக் கூறி திருமணத்தை இனிதே நடத்திக் கொடுத்தனர்.

சகோதரிகளே, சகோதரர்களே கல்யாணத்திற்குச் சென்றால், சென்றோமா, கல்யாணத்தில் கலந்து கொண்டோமா, விருந்தினை உண்டோமா? என்று வந்து சேருங்கள். உங்களால் ஒரு குழப்பமும் வராதபடி பார்த்துக் கொள்ளுங்கள். சாப்பாடு சுமாராக இருந்தால் கூட பேசாமல் சாப்பிட்டு விட்டு வாருங்கள். ஒரே வேளை சாப்பாடு. எப்படியிருந்தால் என்ன? நம்மால் யாருக்கும் தீமை வரக் கூடாது.

குடித்தனம் நடத்தப் போவது மணமக்கள்தானே!

பாத்திரம் குறைவாயிருந்தால் என்ன? அதிகமிருந்தால் என்ன உங்களுக்கு?

புடவையில் ஜரிகை குறைவு என்று ஒரு பெண் (தூரத்து உறவு) நிச்சயதார்த்தம் நடக்கும் போது (ஜானவாசத்திற்குப் பின்) உளற, பெரிய சண்டையாகி, கல்யாணமே நிற்கும் நிலைக்கு வந்து, பின் பிரச்னை சில நல்லவர்களால் தீர்க்கப்பட்டு திருமணம், மன நிறைவில்லாமல் நடந்தது, ஓர் உறவினர் வீட்டுத் திருமணத்தில்.

காப்பி வரவில்லை என்று விடியற்காலை ஐந்து மணிக்கே கிளப்பி விட்டு பிரச்னை ஏற்படுத்தும் உறவினர்கள் திருமணத்தில் நிறைய. உங்களால் நல்லது செய்ய முடியாவிட்டாலும், தீயது செய்யாதீர்கள்.

மாப்பிள்ளையும், தோழர்களும் ஜானவாசத்தன்று சீட்டு விளையாடுவது, தண்ணீர் போடுவது போன்றவை நவீன கால 'ஸ்டைலாக'க் கருதப்படுகிறது. இரவு முழுவதும் விழித்துக் கொண்டு அரட்டை அடியுங்கள், பாட்டு கேளுங்கள். வேண்டாமென்று சொல்லவில்லை. சீட்டுக் கச்சேரியும், குடியும் தேவையா? மேலும் இரவு முழுவதும் பெண் வீட்டுக்காரர் 'டீ' போட்டு சப்ளை செய்ய வேண்டும். இதென்ன நியாயம். ஒரு ஏழைக் குடும்ப திருமணத்தில் இரவு 'டீ' வேண்டுமென்று மாப்பிள்ளையும், தோழர்களும் வற்புறுத்த, பால் இல்லாமல், இரவு அலையோ, அலை என்று அலைந்து, கடைசியில் மூடியிருந்த கடையைத் திறக்கச் சொல்லி 'பவுடர் டின்' வாங்கி வந்து 'டீ' போட்டுக் கொடுத்தார்கள். அவர் பட்ட பாட்டைக் கண்ட போது கண்ணில் நீர் வரவில்லை, இரத்தமே கசிந்தது. கூடியமட்டும் கல்யாண வீட்டில் தேவையில்லாதவற்றைப் பேசாதீர்கள். மனக்கசப்பை ஏற்படுத்திய பல நிகழ்ச்சிகள் நடந்திருக்கிறது திருமண வீடுகளில் அரசியல் பேசியதால். ஏதாவது பொதுப்படையான பேச்சுகள் பேசி சந்தோஷமாக இருந்து விட்டு வாருங்கள். உங்களால் பிரச்னை வராதவண்ணம் நடந்து கொள்வது சாலச் சிறந்தது.

– கமலா ஜானகிராமன்



## கெட்டிக்காரப் பெண்களுக்கு

# எச்சரிக்கை!

வேலையில் சேர்ந்து ஓரிரு வருடங்களிலேயே பதவி உயர்வு கிடைத்து விட்டதா? கேட்ட இடத்தில் எல்லாம் நுழைவு கிடைக்கிறதா உங்களுக்கு? சந்தர்ப்பவசத்தாலோ திறமை காரணமாகவோ சேர்மன், டைரக்டர் போன்ற பதவிகளில் உட்கார்த்தப்பட்டு விட்டீர்களா? உங்கள் தனித்திறமைக்காக உங்களைத் தேடிக் கொண்டு நாலு பேர் வருகிறார்களா? பார்ட்டிகளிலும் கூட்டங்களிலும் உங்களை ஜனங்கள் சுற்றிக் கொள்கிறார்களா? நண்பர் வட்டங்களிலும் செய்தித்தாள்களிலும் உங்கள் பெயர் பேசப்படுகிறதா?

கெட்டிக்காரப் பெண்களே! ஜாக்கிரதை. உங்கள் கணவர் பயப்பட சாத்தியமிருக்கிறது. அமெரிக்கன் சைக்கியாட்ரிஸ்ட்கள் சொல்கிறார்கள், ஆண்கள் மனசளவில் பெண் சார்பு உடையவர்கள் என்று. வெற்றி பெற்ற பெண்கள் தமக்கு இதமாக இருக்க மாட்டார்கள் என்று சராசரி ஆண்கள் தீர்மானித்து விடுகிறார்களாம்.

இந்த மனோபாவம் அதாவது பிரபலமான மனைவியரின் வெற்றிகள் கண்டு பயப்படும் மனோபாவம் கிட்டத்தட்ட தாயால் புறக்கணிக்கப்படும் குழந்தையின் மனநிலையை ஒத்தது என்கிறார்கள் சைக்கியாட்ரிஸ்ட்கள்.

தாயார் வேலைக்குப் போவதைப் பொறுத்துக் கொள்ளும் குழந்தை வேலை நேரம் தவிர்ந்த சமயம் தாய் எங்கு போவதையும் தாங்கிக் கொள்ளாது.

ரூபாவின் மகள் ரூபாவின் கையில் நாவல் இருந்தால் பார்க்கச் சகிக்க மாட்டாளாம். நாவல் படிப்பதில் அதிக ஈடுபாடுள்ள ரூபா லைப்ரரியிலிருந்து நாவல் எடுத்துப் போகும் நாட்களில் தன் எட்டு வயது மகளிடம் ஸ்கூல், மற்றும் வேறு விஷயம் குறித்துப் பேசாமல் நாவலில் மூழ்கி விடுவாள். அது அந்தக் குழந்தைக்கு எரிச்சல் ஊட்டும்.

இதே நிலைதான் கவனக் கூர்மையும் அதி சாதுரியமும் உள்ள பெண்களின் கணவன்மார் விஷயத்திலும் ஏற்படும்.

சாமர்த்தியம் உள்ள பெண்கள் எந்தத் தொழிலானாலும் சரி கை வேலையா

ணாலும் சரி பொது ஜனத் தொடர்பானாலும் சரி எளிதில் பிடித்துக் கொள்கிறார்கள். மிகக் குறுகிய காலத்தில் உச்சத்துக்கு வந்து விடுகிறார்கள். அடிமட்ட ஊழியத்தில் சேர்ந்தவள் ஐந்தே வருடத்தில் ஊழியர் சொஸைட்டியில் டைரக்டராகியிருக்கிறாள். சாதாரண எம்பிபிஎஸ் பட்டத்துடன் வட்டாரத்து ஸீனியர்களைப் பின் தள்ளி விடுகிறாள். சின்னதாக பாட்டு வகுப்பு நடத்தியவள் 'ட்ரூப்' வைத்து இசைப் பயிற்சிகள், நிகழ்ச்சிகள் தந்து விடுகிறாள். ஆயிரக்கணக்கில் சமையல் புத்தகம் பதிப்பித்து விடுகிறாள் ஒரு சின்ன சமையல் வல்லுனள்.

பெண்களின் குறுகிய கால வெற்றிக்குக் காரணம் எதையும் அவர்கள் சின்ன வட்டத்துக்குள் ஆழமாக ஈடுபட்டு உழைப்பது. 'இன்வால்வ்மெண்ட்' அவர்களுக்கு வேக வெற்றி தருகிறது.

வெற்றிகள் பெண்களுக்கு அந்தஸ்து ஏற்படுத்தித் தருகின்றனவா? நிம்மதி சந்தோஷம் சம்பாதித்துத் தருகின்றனவா?

புகழ்பெற்ற ஆர்க்கிடெக்ட்,' பிரசித்தி பெற்ற ஜர்னலிஸ்ட், வி.வி.ஐ.பி.களுக்கு நெருங்கிய ஐ.ஏ.எஸ். நிர்வாகி, டாப் ஸர்ஜன், தலைமை நீதிபதி என்ற நிலைகளில் புருஷன் இருந்தால் அது பெண்ணுக்கு அந்தஸ்து. இன்னார் மனைவி என்று சொல்லிக் கொள்ளப்படுகிற அங்கீகாரம். ரொம்பப் பெருமையுடன் அதை அவள் ஏற்றுக் கொள்கிறாள். தானும் கவிதை எழுதுகிறேன் என்றோ சமூக சேவை செய்கிறேன் என்றோ சொல்லிக் கொண்டு இன்னாரின் மனைவி இதுவும் செய்வார் என்று கூடுதல் அந்தஸ்தையும் ஆசையுடன் வாரிக் கொள்கிறாள். தன் தனித்துவம் அழித்து விட்ட




தாகவோ தன் ஒளியில் நிழல் படிந்து விட்டதாகவோ நினைப்பதில்லை.

ஆனால் ஆண் 'இன்னார் கணவன்' என்ற அடையாளத்தை அறிமுகத்தை விரும்புவதில்லை.

ஒரே தொழிலில் ஈடுபட்ட கணவன் மனைவியரில் ஆண் முதல் கட்டத்தில் ஆரம்ப சூரத்தனம் காட்டி விட்டு அடுத்த கட்டத்தில் மெத்தனத்தாலோ சுய தவறுகளாலோ சில நேரம் துரதிர்ஷ்டவசமாகவோ சரிய நேரிடுகிறது. பெண் ஆரம்ப காலத்தில் விட்டுப் பிடிக்கிறாள். குழந்தை, குட்டி, சமையல், குடும்பம் என்று புத்தியைச் செலுத்தி விட்டு சரியான காலகட்டத்தில் செம்மையாக தொழில் நூலைப் பிடிக்கிறாள். ஓகோ என்று வந்து விடுகிறாள்.

இப்படியான சூழ்நிலை கெட்டிக்காரப் பெண்ணும் சராசரி ஆணும் சம்பந்தப்பட்ட கேஸ்களில் தவறாமல் நேர்ந்து விடுகிறது.





ஆணுக்கு மனைவியின் வெற்றியை ஜீரணிக்க முடிவதில்லை. தான் அடிபட்ட அதே துறையில் மனைவி முன்னுக்கு வந்தது அவள் திறமையால் என்பதை ஒப்புக் கொள்ள முடிவதில்லை.

குரூரமான வக்கிர உணர்வுகளுக்கு ஆளாகிறான். வெவ்வேறு தொழிலில் ஈடுபடும் கணவன் மனைவியரிடையும் மேற்படி விபரீதங்கள் ஏற்படும் வாய்ப்புகளிருக்கின்றன. கணவன் மனைவி இருவருக்கும் அரசாங்கத்தின் வெவ்வேறு துறைகளில் வேலை. மனைவிக்கு விசேஷத் தேர்ச்சியிருந்தது. அவளுடைய போஸ்ட் எங்கு வேண்டுமானாலும் சுலுவாகக் கிடைத்தது. அவனுக்கு மூன்று வருடத்துக் கொருமுறை மாற்றல் ஆன போதெல்லாம் அவளும் ஒரே மாதத்துக்குள் பின்தொடர முடிந்தது.

ஐந்து வருட தாம்பத்யத்துக்குள் பெங்களூர் விட்டு திருச்சி பின் சென்னை மீண்டும் பெங்களூர் என்று மாற்றங்களுடன் இரண்டு குழந்தைகளும் பிறந்தன. அத்தனையும் தாங்கினாள் அவள். ஆபீஸில் நல்ல பெயர். எல்லாமே சமாளிக்க முடிந்தது. அவனுக்கோ கண்டபடி தூக்கிப் போட்டார்கள். ஒரு சஸ்பென்ஷன் கூட ஆயிற்று. ஏதோ கவனக்குறைவு. அவன் மனைவிக்கு 'திமிர்' என்றான். 'வீட்டில் நிம்மதியில்லை'' என்று அம்மாவிடம் அழுதான். ஆண் பிள்ளை அழும் அளவு மருமகள் ராட்சசி என்று தாயார் கட்சி கட்டினாள். அந்தப் பெண் பழிகளையும் சேர்த்தே தாங்கினாள். இன்றும் பொறுமையாகவே காத்திருக்கிறாள் முப்பது வயது கூட நிரம்பாத சின்னப் பெண்.

சாமர்த்தியமான மனைவி மீது ஆணின் குரோதம் எப்படித் திரும்புகிறது?

சேர்ந்து போகும் விசேஷங்களுக்கு ஒதுங்கிக் கொள்ளுதல் 'உங்க அண்ணன் சீமந்தம் நீ போ, என்னைக் கூப்பிடாதே' அல்லது 'உங்க ஆபீஸ் கொலீக் வீட்டு கிரஹப்பிரவேசம் மரியாதைக்கு கூப்பிட்டான் என்பதற்காக நான் ஏன் வர வேண்டும்?' என்கிற ரீதியில்,

பார்ட்டிகளில் சுவாரஸ்யமாகப் பொழுது போய்க் கொண்டிருக்கும் போது, விசேஷமாக மனைவி என்ஜாய் பண்ணுகிறாள் என்பது தெரிய வரும் போது 'நான் கிளம்புகிறேன், நீ இருந்து முடித்துக் கொண்டு வா' என்று பாதியில் கிளம்புவது, வந்த உறவினர் நண்பரிடம் முகம் கொடுத்துப் பேசாமலிருப்பது, எதற்காவது குற்றம் சொல்லி போட்டி போட்டு வம்பு வலிப்பது, 'உன் அக்கா புருஷன் என்னிடம் பேசலை' 'உன் தம்பி என்னைப் பார்க்காமலே போனான்' என்றெல்லாம்,

அதீதமான உடல் உறவுக்கு விழைவது 'பின்ன என்னடி பெண்டாட்டின்னு' என்கிற குரூரத்தில், அடிமைத்தனத்தில் ஆளுமை நிலைநாட்டும் ரீதியில், மனைவிக்குச் சௌகர்யமில்லாத பிடித்தமில்லாத காலத்தில் 'கர்ப்பம்' வற்புறுத்துவது.

ஐ.ஏ.எஸ். ப்ரொமோஷனை தள்ளிப் போட்டால் என்னவாம்? எம்.ஏ. ஃப்ரெஞ்ச் எப்போது வேண்டுமானாலும் படித்துக் கொள்ளலாமே! என்கிற வசனங்களோடு, குழந்தை வளர்ப்பு, தன் பெற்றோர் பராமரிப்பு - பக்கம் விரல் காட்டி மனைவியைக் குற்ற உணர்வுக்குள்ளாக்குவது,

தான் பெரிதாய் நோய்வாய்ப்பட்டிருப்பது போல அலட்டுவது, தான் தொழிலில் அலுவலகத்தில் அதிகம் சிரமப்படுவது போல 'பாவ்லா' செய்வது, வேலை விடுகிறேன், வாலண்டரி ரிடையர்மெண்ட் வாங்கிக் கொள்கிறேன் என்று பயமுறுத்துவது, வேலையை விடு என்று தொந்தரவு செய்வது, நெடுங்கால விடுப்பு எடுத்து வீட்டில் இரு என்று வற்புறுத்துவது, 'நான் வேண்டுமா உன் வேலை வேண்டுமா முடிவு செய்து விடு' என்று கார்வார் செய்வது, எல்லாமே மனைவியின் வெற்றியைத் தாங்க முடியாமல்தான்.

இந்த வெளிப்பாடுகளுக்கு அடிப்படை பொறாமை இல்லை. தாழ்மையுணர்ச்சி இல்லை. ஆணுக்கே உரித்தான ஈகோ என்று கூட முழுக்கவும் சொல்லி விட முடியாது.

# பார்க் டவுன் பெனிபிட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985

223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை - 600 003. போன்:582676; 564354

## கனகதாரா முதலீட்டுத் திட்டம்

உங்கள் குழந்தைச் செல்வங்களை கோடீஸ்வரனாக்குங்கள்!

ரூ. 50,000/- செலுத்துவீர். 10 ஆண்டுகளில் ரூ. 50,000/-ஐ திரும்பப் பெறுவீர்.

மீண்டும் 20ம் ஆண்டு நிறைவில் ரூபாய் **ஒரு கோடியை** பெறுவீர்.

(ரூ. 12,500/-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும்)

## வெகுமதி முதலீட்டுத் திட்டம்

ரூ. 580/- செலுத்துவீர். 252 மாதங்கள் நிறைவில் ரூ. 40,000/- பெறுவீர்.

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும். உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம் 15 ஆண்டுகள்

| வைப்புத் தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ. 6,320/- | ரூ. 6,000/- | ரூ. 6,000/- | ரூ. 56,320/- |
| ரூ. 25,280/- | ரூ. 24,000/- | ரூ. 24,000/- | ரூ. 2,25,280/- |

## பென்ஷனர் நலத் திட்டம் - வட்டி 19 1/2%

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ

ரூ. 7500/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,25,000/- பெறலாம்

ரூ. 9000/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,50,000/- பெறலாம்

சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி

SURESH

**கடன்**

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்

சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்.

வட்டி விதம் ரூ. 1.85

கௌரவ ஆலோசகர்: **P. பாலசுப்ரமணியம்,** B.Sc.

முதன்மை அறங்காவலர்

கந்தகோட்டம், சென்னை - 3.

(Friday Weekly Holiday)

இயக்குனர் குழுத் தலைவர்: **R. விவேகானந்தன்,** B.Com.

பங்குதாரர்களுக்கு மட்டும் Business Hours :
Week days 8.30 a.m. to 12.30 p.m. &
2.00 p.m. to 6.00 p.m.
Sunday 8.30 a.m. to 12 noon.

சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி




# நான் பிரெஸ்டீஜ் அல்டிமேட் வாங்கியதற்குக் காரணம் என்ன தெரியுமா ?

**என் மனைவியின் பாதுகாப்பு என்னை பொறுத்தவரை மிகவும் முக்கியமானது.**

"மனைவியை நான் ரொம்பவும் போற்றிப் பாதுகாப்பதாக சிலர் என்னைக் குறை கூறுகின்றனர். ஆம், இது உண்மைதான். அதனாலேயே நான் பிரெஸ்டீஜ் அல்டிமேட் வாங்கினேன்.

பிரெஸ்டீஜ் அல்டிமேட்டின் பிரத்தியேக பாதுகாப்பு அம்சங்கள் சிறப்பான முறையில் அமைக்கப்பட்டுள்ளன. எப்போதும் காணும் ஸேஃப்டி வால்வுகள் தவிர, இதில் பிரெஸ்டீஜின் நூதன கண்டுபிடிப்பான காஸ்கெட் ரிலீஸ் சிஸ்டம் [ஜி ஆர் எஸ்] உள்ளது. வெயிட் வால்வில் அடைசல் இருந்தால் ஜி ஆர் எஸ் உடனே செயல்பட்டு அதிக பிரஷரை கீழ்நோக்கி பாதுகாப்பாக வெளியேற்றும்.




ஜிஆர்எஸ்

பிரெஸ்டீஜில் மட்டும் உள்ள மற்றொரு பிரத்தியேக அம்சம் - டபிள் லாக்கிங் ஸிஸ்டம். இதனால் பிரஷர் பாதுகாப்பான நிலைக்குக் குறையும் வரை குக்கரைத் திறக்க முடியாது. பாதுகாப்புக்கான புது யுக்திகள் பிரெஸ்டீஜில் வந்து கொண்டே இருக்கின்றன. என் மனைவியின் பாதுகாப்பைப் பற்றி என்னைப் போலவே பிரெஸ்டீஜுக்கும் ஆழ்ந்த அக்கறை இருப்பதை இது நிரூபிக்கவில்லையா?"



டபிள் லாக்கிங் ஸிஸ்டம்

TTK தயாரிப்பு

**பிரெஸ்டீஜ்**
அல்டிமேட்

MAA COMMUNICATIONS 2073-92 TAM

பழைய காலண்டர் அட்டைகளைத் தூக்கி எறியாதீர்கள். அயர்ன் செய்து வைக்கும் துணிகளில் நான்கு துணிகள் நடுவே ஓர் அட்டை என அடுக்கி வைத்தால் துணிகள் எளிதில் கசங்காது.

– க. மஞ்சுளா



பொதுவாக ஒரு ஆண் இன்னொரு ஆண் தன்னை மிஞ்சுவதைச் சகித்துக் கொள்வான் என்றும் அதையே ஒரு பெண் விஷயத்தில் தாங்க மாட்டான் என்றும் சொல்லப்படுவதுண்டு. அசல் பெண்ணிடம் அவன் காட்டும் அந்த உணர்வுக்கு வேண்டுமானால் பிறப்பிலிருந்து அவனுடன் வளரும் 'ஈகோ' என்று சொல்லலாம்.

மனைவியின் வளர்ச்சி விஷயத்தில் ஆணின் வெளிப்பாட்டுக்குக் காரணம் பயம். ஆண் அன்புக்காகவும் மென்மைக்காகவும் பாதுகாப்புக்காகவும் தாய்ச் சார்புடனேயே வளர்கிறான். 'தாய்க்குப் பின் தாரம்' தான் அவனுடைய நிழல். தாய் தன்னை விட்டுப் போய் விடுவாளோ என்று குழந்தை பயப்படுவது போல தாயின் புடவை நுனியை இறுக்கிக் கொண்டு குழந்தை பாதுகாப்பாய் உணர்வது போல மனிதனுக்கு 'மனைவி'. பாதுகாப்பு, ஏவல் எடுபடும் ஒரே இடம், உயர்வு தரப்படும் ஒரே சபை. தனி மனுஷியின் வெற்றிகள் தாம்பத்தியத்தைப் பிரித்து விட முடியாது என்று தெரிந்திருந்த போதிலும் மனைவியின் உயர்வுகள் அவள் தனக்குச் செய்து அர்ப்பணிக்கக் கூடிய சௌகரியங்களைக் குறைக்கக்கூடும் என்று கணவன் பரிபூரணமாக நம்புகிறான். ரூபாவின் மகள் நாவலை வெறுப்பது போலத்தான் இது.

''என்ன ஸ்லோகக்ளால் வேண்டியிருக்கிறது மனுஷனுக்கு சாப்பாடு கூட போடாமல்?'' என்று ரிடையராய் பத்து வருடம் பென்ஷன் வாங்கிய பெரியவர் கூட மனைவியைக் கடிகிறார் என்றால் அவருக்கு மனைவியின் இனிய குரலின் மீது பொறாமையா? தான் பாடவில்லையே என்ற தாழ்மையுணர்ச்சியா? இல்லவே இல்லை.

எழுபது வயதான பெரியவருக்கு அறுபத்தைந்து வயதான தன் மனைவி ரெண்டு மணி நேரம் கோயிலில் 'சத்சங்கம்' கூட்டி தலைமைப் பொறுப்பேற்று நிகழ்ச்சிகள் நடத்துவதால் தினசரி ஷெட்யூல் கெட்டுப் போகிறது. தானும் அந்த வட்டத்தில் சேர்வோம் என்றாலும் உடல்நிலை மனநிலை இடம் கொடுப்பதில்லை.

சரி பக்கத்திலிருக்கிற கோயில்தானே போய் விட்டு வரட்டும் என்று விட்டு விட்டால் அடுத்த கட்டம் அது வெளியூர் நிகழ்ச்சியாகி விடுகிறது.

அதுதானே கெட்டிக்காரப் பெண்களிடம் விசேஷம்? அவர்கள் எதைச் செய்தாலும் அதில் ஏற்றம் சுளுவாகக் கிட்டுகிறதே!

மனைவியின் வெற்றியில் அசௌகரியம் யாருக்கு? அதனால்தான் முன்னெச்சரிக்கையாக ஆண்கள் தடை போடுகிறார்கள் ஆரம்பத்திலேயே. லக்ஷ்மண ரேகைகளாக கண்டிஷன்கள் தொடர்கின்றன இறுதிவரை. மீறிப் போகிற மனைவியருக்கு நேர்வது என்ன தெரியுமா? கணவனின் தாடி வளர்த்தல், 'ஐயோ பாவம்' முகம் காட்டுதல், அக்கம் பக்கத்துப் பெண்கள், ஆம், பெண்கள் மட்டுமே மற்றும் அம்மா அக்கா தங்கையரின் பரிதாபம் சம்பாதித்தல் ('பாவம், பெண்டாட்டி ராத்திரி எட்டு மணிக்குத்தான் வர்றா' 'பிரமோஷன்னு சொல்லிண்டு மைசூர்லே போய் ஒக்காந்துட்டா இவன் பெண்டாட்டி. இங்க குழந்தைகளோட திண்டாடறான்') குடிப் பழக்கம் வளர்த்தல், பத்தடி விஸ்தீரணத்துக்குள் விழும் முதல் அயல் பெண்ணிடம் அவள் அலுவலக செகரட்டரியாகவோ மைத்துனியாகவோ கூட இருக்கலாம், நேசம் வளர்த்தல், தகாத உறவு வரை நீட்டுதல், குழந்தைகளிடம் தாயைப் பற்றிக் குற்றப் பத்திரிகை படித்தல், ஒட்டுமொத்தத்தில் 'மனைவி' என்ற கடமையில் அவள் விழுந்து விட்டதாகப் பறையறிவித்து அதற்கு 'வோட்டு' சேகரித்தல், கடைசி கட்டமாக அவள் பெண்மை மீது அபவாதம் கற்பித்தல்.

தேவையா இத்தனையும்? வெளியுலக வெற்றி, தொழிலில் தேர்ச்சி வேண்டவே வேண்டாம் என்று பெண்கள் மூட்டை கட்டி விட்டு முடங்கி விடுகிறார்கள் ஓரிரு படிகளிலேயே. இந்தக் காரணங்களையே காட்டியே வழிப்படுத்துகிறார்கள் தாய்மார்களும் ஆசிரியைகளும். என் பக்கத்து வீட்டு 'நலம் விரும்பி' பெண் கூட ஆதுரத்துடன் சொல்கிறாள்.

''ஐ ஸி டபிள்யூ வகுப்புக்குப் போக ஆசைப்படுகிறாயா? நிறைய நேரம் எடுக்

குமே அம்மா, எதற்கும் உன் புருஷன் மனசைத் தெரிஞ்சிக்கம்மா, அப்புறமா முடி வெடு, அவங்க இஷ்டமில்லாமே நாம என்ன செஞ்சு என்னம்மா பிரயோசனம்?''

''அம்மா தாயே, வேண்டாம் உனக்கு வெற்றி, நீ நல்லாயிருக்கணுமா வேணாமா' என்கிற எச்சரிக்கைதானே இதெல்லாம்?

தீர்வு என்ன?

தீர்வுகளில் இலட்சியத் தீர்வு. (Ideal solution) நடைமுறைத் தீர்வு, (practical solution) நாட்போக்கில் மாறுதல் ஏற்படுத்து கிற தீர்வு, (Time bound permanent solution) என்று மூன்று விதங்களைச் சொல்ல முடியும்.

அவரவர் திறமைக்குத் தகுந்தபடி கை யாண்டு அல்லது மூன்றையும் கலந்தாண்டு பலன் பெறலாம்.

ஆணின் சுய பாதுகாப்புத் தேடலுக்கும் சுயநலம் பேணலுக்கும் அருமருந்து அன்பு, அதி அன்பு இன்னும் அன்புதான். எத்தனை வழியில் எத்தனை வகையில் முடியுமோ அத்தனையிலும் காட்டிக் கொள்ளுங்கள் உங்கள் அத்யந்த அன்பை. கணவர் உங்க ளுக்கு எவ்வளவு இன்றியமையாதவர் என் பதை வெளிப்படுத்த அவருக்குப் பாது காப்புப் பயம் குறைகிறது. இது இலட்சியத் தீர்வு.

சில மனைவியர் தாமும் ஒரு சார்பை புருஷன் மேல் ஏற்படுத்திக் கொண்டு அவர் தமக்கு முக்கியம் என்பதை ஸ்தாபித்து சுமுக நிலை சம்பாதிக்கிறார்கள். 'அவர் வந்தால் தான் பகல் உணவு' 'அவர் வராமல் வெளி யூர் போவதில்லை' என்கிற மாதிரி.

நாட்பட்ட மாறுதல் ஏற்படுத்தும் தீர்வு இதோ. ஆண் பெண் குழந்தை வளர்ப்பில் மாற்றம் தேவை. 'பெண்டாட்டி வருவாள் எல்லாம் செய்வாள்' என்ற பாடம் மாற்றப் பட்டு 'பெண்டாட்டிக்கு நீ என்ன செய்வாய்' என்று கேள்வி எழுப்பப்பட வேண்டும் ஆண் வளர்ப்பில். இருவர் நடத்துவது குடும்பம். பெண் நடத்துவது மட்டுமல்ல. இருவருக்கும் வெற்றி வேண்டும். ஆண் வெற்றி மட்டுமே குடும்ப வெற்றியாகாது. இரண்டு மாடுகள் ஒன்றி நடந்து பயணிப்பது வாழ்க்கை. ஒன்றை இழுத்துக் கொண்டு இன்னொன்று நடப்பது நல்லதல்ல இரண் டில் எது சண்டியானாலும் கஷ்டம், எது நொண்டியானாலும் கஷ்டம்.

இதைப் பற்றி இன்று மகனை வளர்க் கும் தாய்மார்கள் மனம் மாற வேண்டும். மகனுக்கும் வருங்காலப் பெண்ணைப் பற்றி அவளுடைய முன்னேற்றத்தைப் பற்றி உணர்த்த வேண்டும்.

– மாலதி



**யௌ**வனமாய்க் குழலூதும் கண்ணன், மார்பளவே முறைக்கும் சிவபெருமான், கருப்புத் துணியால் (ரிப்பன்) கண் மூடிய தராசு பிடித்த நீதிதேவதை, சத்ரபதி சிவாஜி, முள்மகுட கிறிஸ்து, அம்பேத்கார், கௌதம புத்தர், கால் மேல் காலிட்டு அமர்ந்திருக்கும் சாயிபாபா, குழந்தையையும் தன் தலையையும் பிடித்திருக்கும் ஒரு பாரீன் யுவதி இப்படி பல்வித வண்ணங்களில்...

"ஆமாய்யா! நீர் யார் வீட்லயாவது கொலு பார்த்து விட்டுச் சொல்றீங்க! இல்லாட்டி பெரிய பொம்மைக்கடையில் பார்த்திருப்பீங்க!" என்று கூறி பொறுமை இழந்து விடாதீர். அதுதான் இல்லை. இவையெல்லாம் தெருவோரம், சாக்கடைப் பக்கத்தில்





# தெருவோர சரித்திரம்!

கலை வண்ணத்துடன் மிளிர்கின்றன. ஆம். இவையெல்லாம் பம்பாய் சபர்பன் ஸ்டேஷன்களின் மாடிப் பாலங்களின் பிளாட்பார ஓரங்களை அலங்கரிக்கின்றன.

மேற்கத்திய இரயில்வேயிலிருக்கும் பாந்த்ரா ஸ்டேஷனுக்கு அடுத்த ஸ்டேஷன் கார் ரோடில் இறங்குமுன்னம் இடப்பக்க வேலிக் கம்பிகள் கையுடைந்து, காலிழந்து வண்ணமில்லா, தராசில்லா நீதி (ஊஹூம்) பாதி தேவதை மாட்டப்பட்டிருப்பதைக் காண நேரிடுகிறது. பல தெய்வங்களும் இப்படி ரயில்வே வேலிக் கம்பிகளில் காய்கிறார்கள்!

ரயிலிறங்கி ரவுண்டடித்து அவ்விடத்தை அடைந்த பின்புதான் தெரிந்தது, மேற்கூறிய மூர்த்திகளின் கீர்த்திகள் அங்குதான் பிறக்கின்றனவென்று.

இந்தக் கலர் தெய்வங்களைப் படைத்த கர்த்தாக்கள் வசிப்பது கூரை வீடுகளில். இவர்களின் வீடுகளின் மேல் தென்னங் கீற்றுகள் கூட இல்லை. மானாய் ஆயிரங் கண்கொண்ட கோணிப் பைகள்தான் சூரிய வின் கிரணங்களை ஜல்லித்து உள்விட்டன. காற்றடித்தால் காற்றோடு போகும் கடக் காலில்லா குடில்கள்.

இடமோ?

ரயில் லைனை ஒட்டிய சாக்கடை போகும் இடமாம்.

இவ்விடத்தை ஒட்டிய வீடுகளில் இருந் தும், ஓட்டல்களிலிருந்தும், வரும் குட ஓருட்டிக் குப்பைகள் இருந்தும், இக் குடி யிருப்பின் நடுவே அடர்த்தியாய் போய் வரும் ரயில் பயணிகளின் தொல்லையி லிருந்தும், பெண்டுகளிடும் சிண்டு முடிச் சண்டைகளிடும் போர்க் களங்களிலிருந் தும், அரிய கலைக் களத்தினுள் செல்லும் உணர்வுதானேற்பட்டது.





இராஜஸ்தான் இவர்களின் பூர்வீகம். இன்றிருப்பவர்கள் பிறந்து, அழுது, தவழ்ந்து, நடந்து, வாழ்க்கைப்பட்டு, வாய்க்கப்பட்டு... எல்லாம் அதே, இதே களத்தினுள்ளேதான். அவர்களின் பேச்சில் குஜராத்தி வாடை அடிக்கிறது.

பம்பாய், குஜராத்தின் வளமறிந்து மற்றும் செய்வினைப் பொருட்களின் கொள் முதல் சகாயங்கள் இவர்களை இங்கேயே ஸ்திரப்படுத்தி விட்டன.

மூலப்பொருள் - 'டை' (Dye) என்னும் ரப்பரினாலான பொம்மை படிவம். ஒவ் வொரு வகை பொம்மைக்கும் ஒரு 'டை' உண்டு. அதே போல அந்த ஒவ்வொரு 'டை'க்கும் அனைத்து வடிவம் கொடுப்பது போல் எதிர் வடிவம் இருக்கும். இது ப்ளாஸ்டர் ஆஃப் பாரீஸ் மற்றும் காகிதக் கலவையால் தயாரிக்கப்பட்டதாகும். முன் னையது 'பாஸிடிவ்' படிவம் என்றும் பின் னையது 'நெகடிவ்' படிவம் என்றும் அழைக் கப்படுகின்றன. இவைகளைப் பொருத்தி வைப்பின் (படம் 1, 2 ரப்பர் டையையும் அதை நெகடிவ் டையினுள் பொருத்தப்பட் டிருப்பதையும் காணலாம்) பாசிட்டிவும் நெகடிவ்வும் சேர்ந்து ஒரு வெற்றிடத்தை உண்டாக்குகிறது. அது பொம்மையின் முழு உருவ வெற்றிடமாகும்'' என்று கூறிய விர்ஜி கிடுகிடுவென்று டைகளைத் தூக்கிக் கொண்டு அடுத்த சுவரில்லாக் குடிலுக்குள் நுழைந்தார்.

அவரின் நண்பர் சிறு கலயத்தில் பிளாஸ்டர் ஆஃப் பாரீஸ் + தண்ணீர் கலவை யினைக் கொணர்ந்தார். அதனை அந்த வெற் றிடத்தில் (படம் 3) ஊற்ற விர்ஜி அந்த வெற் றிட அமைப்பில் அந்தக் கலவையினை லேசாக சுற்றிப் பரவுமாறு செய்கிறார். பத்து நிமிடங்களில் உள்ளே சென்ற அந்தக் கலவை படிவத்தில் படம் பெற்று வடிவ மாகியது. வெற்றிடத்தை முழுவதுமாக அடைக்க மாட்டார்கள். பொம்மைக்குள் ஓட்டை இருக்கத்தான் செய்யும். அரை மணி



கழித்து படிவங்களான ரப்பர் மற்றும் பிளாஸ்டர் ஆஃப் பாரீஸிலான நெகடிவ்டைகளைப் பிரிக்க, பொம்மை (படம் 4) கூர்மையான அங்கங்களோடு வெளிப்பட்டுக் காய்கிறது (படம் 5).

இரண்டு அல்லது மூன்று மணி நேரம் கழித்து (படம் 6) வண்ணங்கள் தீட்டப்பட்டு முழு உருவம் பெற்று விடும். சராசரியாக ஒருவர் ஒரு நாளுக்கு 4 பொம்மைகளைச் செய்ய முடியுமாம். ஒரு பொம்மை முழுமையாக செய்து முடிக்க மூன்று மணி நேரம் வேண்டுமாம். ரூ 20/-, ரூ 30/-, ரூ60/- என உருவம், பொம்மையின் வடிவத்திற்குத் தகுந்தாற்போல் பொம்மைகளின் விலை மாறுபடும்.

விற்றால் உலை எரியும் இன்றேல்
வயிறெரியும் என்கிறார் கிளாவிக்காய்

கவிதை பாணியில். விற்பனை இடங்களாய் இரயில் நிலைய பிளாட்பாரங்கள் தான் பிரதான இடம் வகிக்கிறது இவர்களுக்கு.

''இங்கே இருக்கவே கவர்ன்மெண்ட் விட மாட்டேங்கிறது முனிசிபாலிடி எத்தனை தடவை எங்க வீடுகளை கலைச்சிருக்கு தெரியுமா? அதனாலதான் நாங்க பர்மனென்டா மண் வீடு கட்டாம இப்படி துணி படுதா கூரை வீடு கட்டிக் கொண்டிருக்கிறோம்'' என்றார் விர்ஜி தம் கவலைகளாய்.

இதுவரை எந்த அசோசியேஷனும் இன்றி ஒருவரின் உதவியின்றி தம் சொந்தக் காலிலேயே வாழ்கின்றனர் இவர்கள். எனினும் சங்கத்தின் பலன்களை அறிந்திருக்கின்றனர்.

''எழுதப் படிக்கவே தெரியாதே சார்! எப்படி நீங்க சொல்றாப்ல பாங்க்ல லோன் வாங்கி எங்க தொழிலைப் பெருக்கறது? இப்ப சொல்லிட்டீங்கல்ல. உங்களை மாதிரி ஆட்கள் கூட பேசி உதவி செய்ஞ்சா நல்லாருக்கும்'' என்றார் உற்சாகக் கண்களோடு.

இந்திரா காந்தி, ராஜீவ் காந்தியையும் செய்கிறார்கள். அதை விடுங்கள். உங்க போட்டோவை குடுங்க. அப்படியே அச்சாய் பொம்மை பண்ணிக் கொடுப்பதிலும் கை தேர்ந்திருக்கிறார்கள்.

''ஸ்கூல் போவாட்டி என்ன? எம் பசங்க இதுலேயே மன்னனாயிட்டா! கௌரவ உத்தியோகம் சார் இது. கை கட்டி உத்தியோகம் பார்க்க வேணாம் பாருங்க'' - இது அங்கொருவர் கூறியது.

சொந்த பூமி இல்லைதான். ஆனால் சொந்தச் செலவில் மூலப் பொருட்கள், சொந்த உழைப்பு, சொந்த கால் இப்படிச் சொந்தம் கொண்டாடும் இவர்கள் நமக்கறிவிப்பது இதுதான்.

'தெருவோரம் தரித்திரம்தான்
ஆனால் அங்கு இருக்குது
ஒரு சரித்திரம்!'

- பால்கி

---

## திடீர் கதம்ப பக்கோடா

விசேஷ நாளன்று சாப்பிட்டுவிட்டு
அப்போதுதான் படுத்தோம். குழந்தைகளோ,
''பசிக்கிறது, என்ன டிபன்?'' என்றனர்.
திரும்ப என்ன டிபன் செய்வது? காலையில் செய்த
உருளைக்கிழங்கு வெங்காய கறி, கோஸ் கறி,
கேரட் கோசுமலி என்று எல்லாம் கொஞ்சம் கொஞ்சம்
மீதமிருந்தது. எல்லாவற்றையும் ஒரு பாத்திரத்தில் கொட்டி,
2 கைப்பிடி கடலை மாவு, 1 கைப்பிடி அரிசி மாவு
சேர்த்துத் தேவையான உப்புப் போட்டுப் பிசைந்து
சிறுசிறு உருண்டைகளாக எண்ணெயில் பொரித்தேன்.
நிமிடத்தில் சுவையான கதம்ப பக்கோடா ரெடியாகி
விட்டது. குழந்தைகள் போட்டி போட்டுக் கொண்டு
தின்று தீர்த்துவிட்டனர்.

- ஏ. பி. உஷா

# Of Red Bathrooms and Cascade



### She is exemplary

Cascade is perfect. She is stylish enough for your bathroom decor. Smart enough to suit any colour scheme. Cascade is the way to live.

### She is efficient

Cascade's inner stainless steel tank and outer stainless steel shell ensures the quickest possible heating. Saving electricity and expense (33%). Cascade is exactly what your home needs.

### She is everything

Cascade is engineered from the finest stainless steel. Welded without seams. She guarantees you clean and safe hot water. For years together.

S·T·A·I·N·L·E·S·S·S·T·E·E·L
**CASCADE**
WATER HEATER

*She is forever*

CASCADE ELECTRO THERMICS PRIVATE LIMITED, P.B. NO. 4930. COIMBATORE-641 025. Ph: 42763.

Mudra: CWH:120



ஐசிஎஸ் R. நடராஜன்
நிர்வாக இயக்குநர்

# ஐசிஎஸ் குரூப்

வர்த்தக அலுவலகம்: 221, சத்தியமூர்த்தி சாலை, இராம் நகர்,
கோயமுத்தூர். - 641 009. போன்: 230463.

50 ஆண்டுகளுக்கு
மேலான
அரிய சேவை

## டெபாசிட் திட்டங்கள்

குறுகிய கால டெபாசிட் — பிக்சட் டெபாசிட்

| காலம் | 1 நாள் முதல் 90 நாட்கள் முடிய | 91 நாட்கள் முதல் 180 முடிய | 181 நாட்கள் முதல் 365 முடிய | 12 மாதங்களுக்கு | 25 மாதங்களுக்கு | 36 மாதங்களுக்கு | 48 மாதங்களுக்கு | 60 மாதங்களுக்கு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வட்டி விகிதம் ஆண்டுக்கு | 15% | 16% | 17% | 18% | 18.5% | 19% | 19.5% | 20% |
| | | | | 17% | 17.5% | 18% | 18.5% | 19% |
| | | | | 16% | 16.5% | 17% | 17.5% | 18% |

### சுபிட்சம் வைப்புத் திட்டம்

**ரூ. 10,000/- செலுத்தினால் 45 மாதங்களில் ரூ. 21,000/- கிடைக்கிறது.**

ரூ. 10,000/-ம் அதன் மடங்கில் பணம் செலுத்துவோர் மட்டுமே பங்கு பெற முடியும்

### ரெக்கரிங் டெபாசிட் திட்டம்

| மாத தவணைத் தொகை ரூ. | காலக்கெடுவில் பெறவுள்ள முதிர்வுத்தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் |
| 100 | 1310 | 2850 | 4680 | 6870 | 9490 |
| 250 | 3275 | 7125 | 11700 | 17175 | 23725 |
| 500 | 6550 | 14250 | 23400 | 34350 | 47450 |

### குமுலேட்டிவ் டெபாசிட் திட்டம்

| டெபாசிட் தொகை ரூ. | முதிர்வு அடையும் போது பெறும் தொகை | | |
|---|---|---|---|
| | 45 மாதங்கள் | 68 மாதங்கள் | 90 மாதங்கள் |
| 1000 | 2000 | 3000 | 4000 |
| 5000 | 10000 | 15000 | 20000 |
| 7500 | 15000 | 22500 | 30000 |
| 10000 | 20000 | 30000 | 40000 |

- 45 மாதங்களில் இரு மடங்கு
- 68 மாதங்களில் மூன்று மடங்கு
- 90 மாதங்களில் நான்கு மடங்கு

நகைக்கடன் மற்றும் இரண்டு சக்கர வாகனங்களுக்கு கடனுதவியும் வழங்கப்படும்

செழுமை தரும் சேமிப்பு திட்டங்கள்! ஐஸ்வர்யத்தின் அட்சயபாத்திரம் - ஐசிஎஸ்!

# ஆஸ்திரேலியாவில் தமிழ்ச் சமையல்

தமிழ்ப் பெண்ணான சந்திரா பத்மனாபன் பம்பாயில் பிறந்து, கல்கத்தாவில் படித்து, தில்லியில் திருமண வாழ்க்கையைத் துவக்கியவர்.

கணவர் பத்மனாபன் வெளிநாட்டுப் புத்தகங்களை இறக்குமதி செய்து விநியோகம் செய்யும் அஃபிலியேட்டட் ஈஸ்ட் வெஸ்ட் நிறுவனத்தின் உரிமையாளர். இந்தப் புத்தக பிரசுரத்திலும் சந்திராவின் பங்கு நிறைய உண்டு. இவருடைய சாதனை வியக்கத்தக்கது. அப்படி என்ன செய்தார்?



''கேக் செய்வதையும், இந்தியன், காண்டினெண்டல், சைனீஸ் வகை சமையல்களை (வெஜிடேரியன் மட்டுமே) செய்வதையும் பொழுதுபோக்காக ஆரம்பித்தேன். என் கணவர், மாமியார் ஆகியோர் ரசித்துச் சாப்பிட்டு விட்டு பாராட்டுவார்கள். என் மாமியார் எந்த ஊருக்குச் சென்றாலும் அங்கே சுவையான உணவைச் சாப்பிட்டால் உடனே அதன் சமையல் குறிப்பை எழுதிக் கொண்டு வந்து கொடுப்பார். என்னை மிகவும் ஊக்குவித்தவர் என் மாமியார் தான்.

இப்படி ஏற்பட்ட என் சமையல் ஆர்வம் 'தக்ஷின்' என்ற தென்னிந்திய சமையல் குறிப்புப் புத்தகத்தை எழுதத் தூண்டியது. ஹார்ப்பர் கோலின்ஸ் என்ற பிரபலமான புத்தக நிறுவனம் இந்தப் புத்தகத்தை இரண்டாண்டுகளுக்கு முன்பு பிரசுரம் செய்தவர். நூற்றி நாற்பத்தி இரண்டு சமையல் குறிப்புகளைக் கொண்ட இந்தப் புத்தகம், நூற்றி நாற்பத்தி ஐந்து ரூபாய்க்கு சுமார் ஏழாயிரம் பிரதிகள் இதுவரை விற்கப்பட்டிருக்கின்றன.

தென்னிந்திய சமையல் குறிப்புப் புத்தகங்கள் தமிழில் இருக்கின்றனவே தவிர, ஆங்கிலத்தில் இல்லை. மற்ற மாநிலங்களைச் சேர்ந்தவர்களும், வெளிநாட்டவர்களும் நம்முடைய உணவை விரும்பிச் சாப்பிடுகின்றனர். அவர்களுக்கு உதவும் வகையில் ஆங்கிலத்தில் நம்மூர் உணவு வகைக் குறிப்புகளை எழுத வேண்டும் என்ற எண்ணத்தில்தான் 'தக்ஷின்' உருவானது. இவர்கள் மட்டுமல்லாமல், புதிதாகத் திருமணமாகி வெளிநாட்டில் செட்டில் ஆகும் இளம் கல்லூரி மாணவிகளுக்கும் இது உதவியாக இருக்கும். வெளிநாட்டில் குடியேறப் போகும் ஒரு பெண்ணின் திருமணத்தில் விளையாடல் சீர்வரிசைகளில் என் புத்தகம் இருந்ததைப் பார்த்து நான் ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தேன்.

வெளிநாடுகளில் தென்னிந்திய உணவு வகைகளுக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது என்பதால், ஆஸ்திரேலிய நாட்டில் என்னுடைய 'தக்ஷிண்' புத்தகத்தை அந் நாட்டிலுள்ள ஒரு நிறுவனம் சில மாற்றங்களுடன் அங்கே பிரசுரித்திருக்கிறது.

சிட்னி நகரிலுள்ள இரண்டு ரெஸ்டாரண்டுகளில் இந்தப் புத்தகத்திலுள்ள சமையல் வகைகளைச் செய்து, ருசி பார்த்து திருப்தி அடைந்த பிறகுதான் இந்தப் புத்தகத்தை பிரசுரிப்பதென்று முடிவு செய்தது.

ஆஸ்திரேலியாவில் சேப்பங்கிழங்கு கிடைக்காது என்பதால் அதில் செய்யப்படும் போண்டா மற்றும் ரோஸ்டு இரண்டையும் நீக்கி விட்டு, மற்ற நூற்றி நாற்பது சமையல் குறிப்புகளையும் அழகான வண்ணப் படங்களுடன் (தோசை வார்ப்பது, வடை தட்டுவது எப்படி என்ற விளக்கப் படங்களுடன்) முப்பத்தி ஐந்து ஆஸ்திரேலிய டாலர்களுக்கு (ரூபாய் எழுநூறு) இந்தப் புத்தகம் ஹாங்காங்கில் அச்சாகி, அமெரிக்க நாட்டிற்கு பதினாறாயிரம் பிரதிகளும், இங்கிலாந்திற்கு ஏழாயிரம் மற்றும் ஆஸ்திரேலியா நியூஜிலாந்துக்கு ஏழாயிரம் பிரதிகளும் அனுப்பப்படுகின்றன.

ஆஸ்திரேலிய பிரதிகளில் தயிர் எப்படி தோய்ப்பது, நெய் எப்படி எடுப்பது போன்ற அடிப்படைக் குறிப்புகளையும் சேர்த்திருக்கிறேன்.

பத்மனாபன் - சந்திரா தம்பதியின் ஒரே மகன் கௌதம் பத்மநாபனும் பெற்றோருக்கு அவர்களுடைய தொழிலில் உதவியாக இருக்கிறார்.

சந்திரா கூறுகிறார், தென்னிந்திய உணவு ஒரு முழுமையான (Balanced) உணவு. இதில் எல்லாவிதமான சத்துக்களும் இருக்கின்றன. முன்பு நம்முடைய வீடுகளில் சாதாரண நாட்களில் கூட இரண்டு பொறியல், ஒரு கூட்டு, சாம்பார், ரசம், கோசுமல்லி, தயிர் இவற்றுடன்தான் பகல் சாப்பாடு இருக்கும். பொறியல்களில் காய்கறி, கூட்டில் உள்ள பயத்தம் பருப்பு, சாம்பாரில் உள்ள துவரம் பருப்பு மூலமாக புரோட்டீன், தயிரில் புரோட்டீன், கோசுமல்லியில் பச்சைக் காய்கறிகள், கீரையில் இரும்புச் சத்து இப்படி எல்லாவிதமான சத்துக்களும் கிடைத்து விடுகின்றது. தாளிப்பதற்கு மட்டும்தான் கொஞ்சம் எண்ணெய் உபயோகிக்கிறோம். மசாலா எல்லாம் கிடையாது.

வாழைத் தண்டில் உள்ள நார்ச்சத்து உடலுக்கு மிகவும் நல்லது. இதைப் பொறியலாகவும் செய்யலாம், பச்சையாக்கி துருவி தயிரில் கலந்து பச்சடியும் செய்யலாம்.

இட்லி மாவுடன் பீன்ஸ், காரட், கோசு ஆகியவற்றை பொடிப் பொடியாக நறுக்கிப் போட்டு, கறிவேப்பிலை கொத்துமல்லி, பச்சை மிளகாய் இவற்றையும் சேர்த்து கடுகு தாளித்து இட்லி செய்தால், அது மேலும் சுவையாக இருப்பதுடன், சத்துள்ளதாகவும் இருக்கிறது. சட்னி, சாம்பார், வத்தக் குழம்பு ஆகிய எதுவும் இத்துடன் ஒத்துப் போகும்.

இரண்டு பிரெட் துண்டுகளுக்கு இடையே வெண்ணெய் தடவி, காரட், தக்காளி, வெள்ளரி, இவற்றை மெல்லியதாக நறுக்கி வைத்து, அதன் மேல் புதினா அல்லது கொத்துமல்லி சட்னி, தேங்காய் துவையல், வேர்க்கடலைப் பொடி இப்படி ஏதேனும் ஒன்றைப் பரப்பி அதன் மேல் மற்றொரு துண்டை வைத்து (மூன்று ஸ்லைசுகள் கொண்ட சாண்ட்விச்) கொடுத்தால் குழந்தைகளும் விரும்பிச் சாப்பிடுவார்கள். காலையில் பள்ளிக்குச் செல்லும் குழந்தைகளுக்கு இந்த இட்லியும் பிரெட்டும் நல்ல காலை உணவாக முடியும்.

## வேர்க்கடலை பொடி

2 கப் வறுத்த வேர்க்கடலை, ½ கப் எள்ளு, 15 சிவப்பு மிளகாய், 1 டீஸ்பூன் பெருங்காயத்தூள், 2 டீஸ்பூன் எண்ணெய், தேவையான உப்பு.

எள்ளை எண்ணெய் விடாமல் வறுத்துக் கொள்ளவும். மிளகாயையும் பெருங்காயத்தையும் கொஞ்சம் எண்ணெய் விட்டு வறுத்துக் கொள்ளவும். முதலில் மிளகாயைப் பொடி செய்து கொண்டு, பிறகு எள்ளையும் சேர்த்துப் பொடி செய்து கொள்ளவும். வேர்க்கடலையை மிகவும் நைசாக இல்லாமல் கொஞ்சம் கரகரவென்று பொடி செய்து உப்பு சேர்த்து எல்லாவற்றையும் கலக்கவும்.

சூடான சாதத்தில் நெய் விட்டு இந்தப் பொடியைக் கலந்து சாப்பிட்டால் மிகவும் ருசியாக இருக்கும்.

இப்படிப் பல சமையல் குறிப்புக்களை என் புத்தகத்தில் தந்துள்ளேன் என்கிறார் சந்திரா.

தொகுப்பு : கலாமூர்த்தி

**புல்லானாலும்...**

குழந்தைகளுக்கோ, பெரியவர்களுக்கோ காயம் ஏற்பட்டால் தோட்டத்திலிருக்கும் அருகம்புல்லைப் பறித்து சுத்தப்படுத்தி, மையாக அரைத்துக் காயம் பட்ட இடத்தில் போடவும். விரைவில் குணமாகும். அனுபவத்தில் கண்ட உண்மை இது.

– சியாமளா ராஜகோபால்




ஃபாரெக்ஸ்
உணவு விழா
ஃபாரெக்ஸ் அணிவரிசை உங்கள் குழந்தையின் துரிதமான முழு வளர்ச்சிக்குத் தேவையான சத்துக்களை அளிக்கிறது.
4-வது மாதம் முதல், பாலுடன் கோதுமை தானியம் கலந்த ஃபாரெக்ஸ் அளித்து உங்கள் குழந்தையின் திட உணவை ஆரம்பியுங்கள்.
5-வது மாதம் முதல் குழந்தைக்கு ஃபாரெக்ஸ் வெஜ் அளியுங்கள். கோதுமை, பால், வைட்டமின் செறிந்த தக்காளி, கேரட் மற்றும் பயத்தம் பருப்பின் நற்பலன்கள் அனைத்தும் இதில் அடங்கியுள்ளது.
5-வது மாதம் முதல், கோதுமை, பால் மற்றும் வாழைப்பழம், மாம்பழம், ஆப்பிள் செறிந்த ஃபாரெக்ஸ் ஃப்ரூட்ஸ் கொடுத்திடுங்கள்.
6-வது மாதம் முதல் குழந்தைக்கு அளியுங்கள் ஃபாரெக்ஸ் எக். இதில் எளிதில் சீரணிக்கக் கூடிய முட்டை மற்றும் பாலின் நன்மைகள் அடங்கியுள்ளன.
DAL
வளரும் குழந்தைகளுக்கு
Farex
NOW TASTIER
ஃபாரெக்ஸ்
சுவையுடன் வளரும் வழி.
Gx. 931.93.Tm

மதிய உணவினைச் சாப்பாட்டு கேரியரில் இட்டு துடைத்து முடித்த ராஜியின் கண்கள் ஜன்னல் வழியே அக் கிழவியைப் பார்த்து விட்டன.

பலமுறை பார்த்தாகி விட்டாலும் ஒவ்வொரு முறையும் மனம் உதைத்துப் புரள்கிறது.

உடலே இரண்டாக மடிந்து விட்டாற்போன கூனலில் அக் கிழவி சிரமப்பட்டு நடந்தாள்.

ஏதோ தேடக் குனிந்தவள் நிமிர மறந்து விட்டாற்போல... கைகளை மார்போடு கட்டிக் கொண்டிருந்தாள். தொய்வாக விட்டிருந்தால் நான்கு கால் ஐந்து போலத் தோன்றும்...

ம்ப்ச்...

'பாவம் வயசான காலத்திலே இந்த சிரமம்.'

ராஜியின் மனம் மூதாட்டிக்காய் அனுதாபப்பட்ட அதே நேரத்தில் சுயபச்சாதாபத்திலும் சற்றே நனைந்து கொண்டது. 'மனம் குன்றிப் போன நானும் பாவந்தான். முன்னே போல வெளியே போக வர... ஒன்றுமில்லை. வீட்டினுள்ளேயும் அவள் வாய் விட்டு சிரித்து இரண்டு வருடங்களாகிற்றே. இவள் முகத் தெம்பிலும் சிரிப்பிலும் சூடு கண்டு மலர வேண்டிய குடும்பமும் இன்று கூம்பித்தான் கிடக்கின்றது.

இரண்டு வருடங்களாகக் கணவனின் டாக்ஸி தொழிலில் ஏகப்பட்ட நெரிசல்... நஷ்டம். டயரும், பெட்ரோலும் ஏகத்திற்கு விலைக் கூடிக் கொண்டே போக, தொழிலில் ஏகப்பட்ட போட்டி வேறு முளைத்தது. டீசல் வேன்களின் 'ரேட்' சகாயமாய் அமைய விழா, திருமணம், டூர் என சிறிய உள்ளூரின் தேவைகளிலும் டாக்ஸி தொழில் நகங்கியது. கடனையும் அடைக்க முடியாது, படிப்பு, உணவு, வாடகை, உடை என நீண்ட பட்டியலில் பணத் திணறல் அதிகமாகி குடும்பம் முழுதும் சந்தோஷக் காற்று தேடித் தவித்தது.

கணவன் வீட்டிற்குக் கொண்டு வந்த சுமைகளை ராஜி சுமந்தாள். மனதுள் மருக மருக, சுமைகள் கனம் கூடி அவள் மனம் வளைந்து போனது.

சிநேகிதம், திருமணம், உறவு என்று எந்த அழைப்பையும் ஒதுக்கினாள்.

''பத்ரி வேன்ல குற்றாலம் போயிட்டு வரலாமா ராஜி? ஆறு, ஏழு குடும்பம் சேர்ந்து ஜாலியா...''

''பத்ரி வேன் போட்டதிலேர்ந்துதான் நமக்குச் சிரம காலம் ஆரம்பம். அது புரியாது அவங்க கூட போகணுங்கிறீங்களே.''

''நீங்களும் ஒரு வேனு வாங்குங்க அண்ணேன்னுதான் அவனும்...''



# கூனல்

காஞ்சனா ஜெயதிலகர்

''எல்லாம் வாய் ஜாலக்கு. எவனையும் நம்பாதீங்க.''

வீட்டில் கொண்டாட்டங்கள் நின்றன.

''அம்மா என் பிறந்த நாளுக்கு என் ஃபிரெண்ட்ஸைக் கூப்பிடறேனே.''

''அதொன்னும் வேணாம்.''

''எதுக்கும்மா?'' பிள்ளை கெஞ்சுவான்.

''வீண் செலவு.''

''நீங்க செஞ்சு வச்சிருக்கிற தேங்குழலும், ரவா லட்டும் போதும்மா.''

"வர்றதுங்க சுற்றிலும் நோட்டம் விடுங்க. குடிக்க அது இதுன்னுங்க. சிரிக்கப் பேசணும் - என்னால ஆகாது."

"நாங்க சாப்பிட்டுட்டு வெளியே போய் விளையாடிக்கறோம்."

"வாயை மூடு" பல்லைக் கடிப்பாள்.

சமையல் உள்ளில் பித்தளையும் எவர்சில்வரும் குறைந்து அலுமினியம் நிறைப்பதை எந்தப் பிள்ளை கவனிக்கப் போகிறது? அவளது ஒன்றிரண்டு நகைகளும் அடகுக் கடையில் இருப்பதைப் பற்றி அவர்களுக்கென்ன? இவள் புன்னகையுடன் இருப்பதைப் பரிமாறியிருந்தால் பிள்ளையும் சிநேகிதர்களும் சந்தோஷப்பட்டிருப்பார்கள்.

ராஜி தனக்குள் குன்றி வீட்டின் இயல்பையும் நறுக்கி விட்டாள்.

டீசல் வேன் வாங்கிய பின் நான்கு மாதங்களாகத் தொழில் பரவாயில்லை. கடன் வட்டி, செலவு போக கையில் பணம் மிஞ்சுகின்றது.

ஆனால் அவளால் நிமிர முடியவில்லை. வெளியே பெண்கள் அவளது கவரிங் சுமந்த கழுத்தை, கண்ணாடி வளையல்களை உற்றுப் பார்ப்பது போலப் பட சங்கடப்படுவாள்.

தங்களுக்கு மட்டுமே கஷ்டம்; அதனால் மறைவாக இருப்பது நல்லது என்பது போல ஒதுங்கிக் கிடந்தாள்.

இன்று குழந்தைகள் சாப்பாட்டை பள்ளிக்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

இன்று காலை அவளுக்குத் தலை வலி. அனைவரும் பழைய சாதத்தை மோரில் கரைத்து குடித்து ஓடியாயிற்று.

மாத்திரைப் போட்டு, நேரம் பார்த்து முரண்டிய ஸ்டவ்வை சரிபார்த்து அவள் சமைத்தும் முடித்தாள்.



அடிக்கடி இப் படி, உடல், தலை என வலியும் பாரமும் அவ ளைப்படுத்தி எடுக்கின்றன.

மனத்தின் துக்கம் உடல் முழுதும் ஓடி கனத்து விடுகின் றது.

உடல் கழுவி, சுத்தமாக உடுத்து, சீவி வெளியே வர ராஜி யின் உள்ளே சற்று வெளிச்சம் பட்டாற் போலிருந்தது. 20 நிமிட நடையில் பள்ளி யினுள் நுழைந்தாள். அனைவரும் தன் னையே பார்ப்பது போன்ற தவிப்பில் குனிந்து நின்றவள், நிமிருகையில் யாரும் அவளை முறைக்கவில்லை என்பது புரிந் தது. மரநிழலில் தெரிந்தவர்கள் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொண்டும், மணியடித்த மறுநிமிடம் வெளியே பாய்ந்து வந்த குழந்தைகளைக் கை கழுவச் செய்தும் கொண் டிருந்தனர்.

"இன்னைக்குத்தான் இங்கே வர்றீங்க இல்லையா?"

பளீரென்ற சிநேக முறுவலுடன் அருகே நின்ற பெண்ணைக் கண்ட ராஜி தடுமாறி வாள்.

கேட்டவளின் கழுத்தில் கனமாகக் கிடந்த செயினும் சிகப்புக் கல் கம்மலும் அவளை மிரட்டின.

"ம்."

"பிள்ளைங்க இங்கே புதுசா சேர்ந்திருக்காங்களா?"

"ம்... இல்லை."

அதிசயமாய் தாயைப் பள்ளியில் கண்ட பிள்ளைகள் இருவரும் ஓடி வந்து அவள் கையைப் பற்றினர்.

''நல்லவேளை வந்தீங்கம்மா. ஒரே பசி.''

''அப்பா ஐந்து ரூவா தந்து பழம், பிஸ்கட் வாங்கிச் சாப்பிடச் சொன்னாங்க. ஆனா பசிக்குச் சோறுதான்'' பிள்ளை சிரித்தான்.

''அடே... ரஞ்சிதாவோட அம்மாவா நீங்க?''

''ம்.''

கேட்டவளின் குழந்தைகளும் வர ஏதேதோ பேசி சிரித்தபடி அவர்கள் சாப்பிட்டனர். கையை ஆட்டியபடி மகள் பேச, தாய் சிதறும் சாதத்தை பொறுமையாகச் கண்டித் துடைத்தாள்.

''யாரது ரஞ்சி?''

ஆவல் தாங்காது ராஜி கேட்டாள்.

''கநீதான்னு அடிக்கடி சொல்வேனேம்மா - அவதான். அது அவங்கம்மா. எங்களுக்கும் கூட அடிக்கடி ஸ்வீட் தருவாங்க.''

படிப்பு, பாட்டு, விளையாட்டு என அனைத்திலும் முதல் பரிசு தட்டிச் செல்லும் கநீதா இவள்தானா? அந்தச் சின்ன முகத்திலேயே 'என்னால் செய்ய முடியாதா என்ன' என்ற துள்ளலும் பிரகாசமும் தெரிவதைக் காண ரம்மியமாயிருந்தது.

விக்கிய தம்பி வாயில் நீர் ஊற்றி, தாய்க்கு அப்பளம் ஊட்டியபடி சாப்பிட்ட கநீதா அவ்வப்போது ராஜியைப் பார்த்து புன்னகைத்தாள். தன் மீது புதிய கண்கள் மொய்ப்பதை அவள் உணர்ந்திருக்க வேண்டும்.

சிறுமியின் இயல்பான பார்வையில் ராஜியும் வெட்கமாய் புன்னகைத்தாள். சுற்றிலுமிருந்த சளசளப்பில், சிரிப்பில், காற்றில் அவளுள் ஏதோ புரண்டது.

கை கழுவி, பாத்திரங்கள் அடுக்கப்பட பேச்சு தொடர்ந்தது.







"ரஞ்சிதா உங்களைப் போல ரொம்ப அமைதி."

"ம்... உங்க மகளைப் பற்றி அடிக்கடி ரஞ்சி சொல்லுவா."

"கதீ வாயாடியாச்சுதே. வீடு ரொம்பத் தொலைவா?"

"20 நிமிஷமாச்சு."

"அதுதான் கொடுத்து விட்டுடறீங்களா? நானும் வாயல் புடவைதான் கட்டணும்னு நினைக்கறது. வெயிலுக்கு இதம். ஆனா இஸ்திரி போடும் போது அலுப்பாயிடுது. நீங்க கட்டியிருக்கிற கங்குடி எங்கே எடுத்தது?"

பேச்சு சரசரவென கடை, சொந்த ஊர், படிப்பு, மழை, வெயில் என வளர்ந்தது.

பேசியபடி நடக்க சுவாரஸ்யமாயிருந்தது.

உள்மனக் குகைக்குள் காற்று புகுவது போன்ற உணர்வில் ராஜிக்குச் சற்றே உற்சாகம் வந்தது.

புன்னகைப்பதில் கன்னங்கள் இளகி, நாவு தளர்ந்தது.

"ரஞ்சிதா அப்பா வேலையில் கொஞ்சம் சிக்கல். வருமானம் சரியில்லாம கஷ்டப்பட்டுட்டோம். இப்போ பரவாயில்லை.

ஆனாலும் 'சட்'டுன்னு யாரையும் பார்த்துப் பேச, சிரிக்க தயக்கமாயிருக்கு."

அடுத்தவள் மெள்ள புன்னகைத்தாள்.

அவள் கண்களின் கீழே வளையமிட்டிருந்த கருமை கூட அழகாயிருந்தது.

"கதீதா அப்பா அவ நாலு வயசாயிருக்கையிலேயே தவறிட்டார்."

"ஆவ்..." ராஜிக்கு மறுபடி மூச்சையடைத்தது.

"அப்போ சின்னவன் ஒன்பது மாசக் குழந்தை."

"நீங்க..."

"வீட்டு முன்னாடியே கடை போட்டு நடத்தறேன். நடராஜ் ஸ்நாக்ஸ்."

"ஓ...?"

"அது அவர் பேரு."

"ம்."

"சொச்ச காலத்துக்கு நாமளும் வாழணும். குழந்தைகளும் நம்மை நம்பித்தானே. நம்ப முகம் வாடினா அதுங்க கருகிடுங்க."

"உண்மைதான்."

உள்ளே கூனல் நெளிந்து நிமிர ஆரம்பித்தது. நிமிர்வின் நோவில் ராஜியின் கண்களில் நீர் துளிர்த்தது.

# பெறுவீர் சான்மேக் கிஃப்ட் கார்டு.




## 5 வது ஆண்டு நிறைவு விழாவையொட்டி சான்மேக் சிட்ஸ் அளிக்கும் சிறப்புச்சலுகை

### சான்மேக் கிஃப்ட் கார்ட்

எந்தவொரு சீட்டு குரூப்பிலும், சேரும் ஒவ்வொரு சந்தாதாரரும் பெறும் சிறப்புரிமை இது.

இந்த கிஃப்ட் கார்ட் பெறுவதைத் தொடர்ந்து சான்மேக் சிட்ஸிலிருந்து மட்டுமின்றி மற்ற சான்மேக் குரூப் நிறுவனங்களிடமிருந்தும் பலப்பல பயன்களை பெறலாம்.

அறிமுகம்

விசேஷ சீட்டு குரூப்புகள் ரூ.10,000 முதல் ரூ.5 லட்சம் வரை ஒவ்வொரு சந்தாதாரருக்கும் பரிசு உண்டு.

## சான்மேக் சிட்ஸ் லிமிடெட்

SANMAC CHITS

பதிவு & தலைமை அலுவலகம்

'ஜெம்ஸ் கோர்ட்', A-8 முதல் மாடி, 14 காதர் நவாஸ்கான் ரோடு, சென்னை-600 006. போன்: 8250601/8251232.

கிளை அலுவலகங்கள்: சென்னை அண்ணா சாலை, போன்: 8277363 • தி.நகர், போன்: 8278515, 8258637 • அசோக்நகர், போன்: 4824737 • மயிலாப்பூர், போன்: 4992488 • அண்ணாநகர் மேற்கு, போன்: 6214454 • மேற்கு தாம்பரம், போன்: 401934 (PP) • புரசைவாக்கம், போன்: 6425036, மதுரை போன்: 23334 • கோயம்புத்தூர் போன்: 46375 • திருச்சி போன்: 25324 • திருவண்ணாமலை போன்: 22922, 23333 • கும்பகோணம்: • திருநெல்வேலி போன்: 322032.

**BID FOR A BETTER LIFE**




தொழில் துறையில்...

# சாதனை படைக்க நினைக்கிறீர்களா?

இன்றைக்குச் சிந்திக்கத் தெரிந்த ஒவ்வொரு பெண்மணியுமே தானும் ஏதாவது சம்பாதிக்க வேண்டும், சாதிக்க வேண்டும் என நினைக்கிறார். அவ்வப்போது நம்முடைய தலைவர்களும், 'பெண்கள் தொழில் துறையில் ஈடுபட வேண்டும், சிறுதொழில் முனைவர்களாக வேண்டும்' என்று பேசுவதை செய்தித்தாள்களில் படிக்கிறோம். அரசாங்கம் சார்பாக நிறைய திட்டங்கள் பெண்களின் தொழில் துறை வளர்ச்சிக்காக போடப்படுவதாகவும் தெரிகிறது. ஆனாலும் ஒரு பெண் சிறு தொழில் ஆரம்பிக்க வேண்டுமானால் எத்தனையோ கஷ்டங்கள். வங்கி நிதியிலிருந்து பல பிரச்னைகள்... இதைப் பற்றி ஆராய ஒரு ரவுண்ட் சுற்றினோம்...





"கல்வித் தகுதிக்கேற்ப வேலையின்மை, வருவாய் பற்றாக்குறை, கணவனால் கைவிடப்பட்ட பெண்கள், சுயதொழில் ஆர்வம் - இப்படி பல் வகைக் காரணங்களினால்,

✱ நடராஜன்

# அடேடே, அங்கேயும் அப்படித்தானா!

அனைத்துலக பெண் தொழில் முனைவோர்கள் கருத்தரங்கு ஒன்று கடந்த டிசம்பர் மாதம் ஆந்திர மாநிலத்தின் தலைநகரான ஹைதராபாத்தில் நடைபெற்றது. இதற்கு ஏற்பாடு செய்தவர்கள் 'நேவே' என்று சுருக்கமாகக் கூறப்படும் நேஷனல் அலையன்ஸ் ஃபார் யங் ஆன்ட்ரபொனர்ஸ்' இன் உறுப்பினர்கள். ஜெர்மனி, பிரான்ஸ், இத்தாலி, சிலோன் என்று உலகின் பல பாகங்களில் உள்ள பெண் தொழில் முனைவோர்கள் இதில் பங்கு கொண்டனர். கருத்தரங்கில் விவாதிக்கப்பட்ட விஷயங்கள் :

1. தொழில் முனைவோர்கள் பெண்கள் என்றவுடன் தொழில் நிதி உதவி அளிப்பதில் தயக்கம் காட்டுவதன் காரணமென்ன? (மூன்று நாட்கள் கருத்தரங்கையும் ஆக்கிரமித்த ஒருமித்த கருத்து இது)

2. உறுதிப் பத்திரம் காண்பித்து, பின் நிதியுதவி அங்கீகாரம் பெற்றாலும், அதனைப் பெறுவதில் ஏற்படும் வீணான கால தாமதம் முனைவோர்களுக்கு ஒரு சலிப்பை ஏற்படுத்துவதால் தொழில் முனைவோர்கள் பலர் (பெண்) ஆரம்ப நிலையிலேயே வெறுப்புக்குள்ளாகின்றனர். ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சியை அறவே பாதிக்கும் இவைகளை ஒட்டுமொத்தமாக நீக்க மத்திய, மாநில அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும். விழா கருத்தரங்கில் பம்பாயைச் சேர்ந்த ஒரு தொழில் முனைவோருக்கும் ஜெர்மனி நாட்டு முனைவோருக்கும் இடையில் நடந்த ஒரு விறுவிறுப்பான சுவாரஸ்யமான விவாதம் இது.

பெண்கள் முன்னேற வேண்டும். அவர்களும் ஆண்களுக்கு இணையாக எல்லாத் துறைகளிலும் பங்கு கொள்ள வேண்டும் என்கிற எண்ணத்துடன் 'பெண் தொழில் முனைவோர்' திட்டத்தைக் கொண்டு வந்த அரசாங்கம் அதனைச் செயல்படுத்துவதில் ஏன் ஆயிரத்தெட்டு தடங்கல் செய்கிறது. பொதுவாகவே பெண்களின் திறமையைக் குறைவாக மதிப்பிடுவதால், சுயமாகத் தொழில் செய்து பலருக்கு வேலை வாய்ப்புக் கொடுத்து ஒரு சாதனை படைக்க வேண்டும் என்கிற ஆவலில் தைரியமாகவும் திறமையோடும் வருகிற பெண்கள் இத்தகைய செயல்களால் உற்சா

பெண்களில் பலர் இன்று சொந்தமாக ஒரு தொழிலைத் தொடங்க ஆசைப்படுகிறார்கள். ஆனால் பெண்களின் ஒரு சாராரால் ஏற்கெனவே தொடங்கப்பட்ட பல தொழில்கள் வங்கி நிதி கிடைக்காமலும், முதல் போட முடியாமலும் நின்று விட்டன. இத்தகைய அரை கிணறுகளைத் தாண்டிய மீதி தொழில்களோ தயாரித்த பொருட்களை விற்பனை செய்ய முடியாமல் அந்தரத்தில் தொங்குகின்றன. எட்டாவது ஐந்தாண்டுத் திட்டப்படி வருடத்திற்கு 2000 பெண்களை தொழில் முனைவோர்களாக்க வேண்டும் என்கிற இலக்குடன் செயல்படுகிற அரசாங்க அதிகாரிகள் இதற்கு என்ன பதில் கூறுகிறார்கள்?''

இதற்கான பதிலைப் பெற தமிழக அரசின் தொழில் மற்றும் வணிக இலாகாவில் தலைவராக பொறுப்பேற்றிருக்கும் திரு இராமன் ஐ.ஏ.எஸ்.ஐ அணுக அவர் பெண் - தொழில் முனைவோர் துறையில் பல பட்டங்களையும் முன் அனுபவமும் உள்ள திரு நடராஜனிடம் (நிர்வாக இயக்குனர்) கையைக் காட்ட நாம் அவரை அணுகினோம். அவரிடம் பேச வாயைத் திறந்த போது -

''என் பெயர் அன்னபூரணிங்க. பி.யூ.சி. வரைக்கும் படிச்சிருக்கேன். என் கணவரது வருமானம் குடும்பம் நடத்த போதவில்லை. எனவே சொந்தமா ஒரு தொழிலை தொடங்கலாமுன்னு யோசனை. அப்போ எங்க பக்கத்து ஊரு திருச்சியில் ஜெம் - கட்டிங் வேலை ரொம்ப மும்முரமா ஓடுறான்னு போச்சு. அங்கே போய்ப் பார்த்த நான், ''ஏன் இதையே நாமும் தொடங்கக் கூடாது'ன்னு நினைச்சேன். மாவட்ட தொழில் மைய அதிகாரிகிட்டே போய் என் திட்டத்தைச் சொல்லி கட்டிங் - இயந்திரங்கள் வாங்கத் திட்ட அறிக்கை தயார் செய்து வங்கியிடம் 20,000 ரூபாய்க்கு நிதி கேட்டு விண்ணப்பித்தேன். இதற்குள் அங்கு சிறு சிறு தொழில்கள் செய்து பிழைப்பு நடத்திக் கொண்டிருந்த பெண்களில் சுமார் 20 பேர் என்னுடன் கூட்டு சேர விரும்பியதால் ஒரு கூட்டுறவு முறையில் தொழிலை நடத்த எண்ணிய நான் அவர்கள் எல்லோரிடமும் சிறிது முன் பணம் வாங்கி - இயந்திரம் வந்தால் அதை வைப்பதற்கு இடம் வேண்டுமே என்று ஒரு சிறு நிலத்தையும் விலைக்கு வாங்கினேன். இவ்வளவு செய்த பிறகும் வங்கியிடமிருந்து நிதி வரவில்லை. வங்கி மேலதிகாரியை பார்த்துக் கேட்டதற்கு அவர் லீப் வங்கி நிர்வாகியிடம் கையை காட்ட, இவரோ மீண்டும் மாவட்ட ஆட்சித் தலைவரை அணுகுமாறு கூற இறுதியில் சம்பந்தப்பட்ட மந்திரியையும் பார்த்து விட்டு இங்கு வந்திருக்கிறோம். ஒரு பக்கம் முதலை முழுங்கி விட்டு நிற்கிற இடம் மறுபுறம் பணம் தந்து விட்டு வேலையில்லாமல் இருக்கும் பெண்கள். இருதலைக்கொள்ளி எறும்பாய்த் தவிக்கிறேன். என்ன செய்வதென்றே தெரியவில்லை'' என்றார் அவரைச் சந்திக்க வந்த ஒரு பெண்மணி. நடராஜன் இவரை வைத்தே விளக்கினார் -

''இப்படி இவர் ஒருவர் மட்டுமல்ல. பல பெண்கள் இப்படித் தொழிலை ஆரம்பிக்க நினைத்து முதலிலேயே நின்று விடுகிறார்கள். இதற்கு முதற்காரணம் அவர்களின் தவறான செயல் முறை. ஒருத்தர் ஒரு தொழிலை தொடங்கி நன்றாக நடத்ததென்றால் நாமும் அதையே செய்து இலாபம் சம்பாதிக்கலாமே என்று எண்ணுவதில் தவறில்லை. ஆனால் அத் தொழில் தொடங்குவதற்கு முன்னால் நிதி, முதல் இவற்றோடு முக்கியமாக விற்பனையும் உடனுக்குடன் கிடைக்குமா என்று கணிக்க வேண்டும். இப்படி திறனாய்வு செய்து தீர்மானிக்க சிலருக்கு முன் அனுபவம் பத்தாது. இதற்

கத்தை அடியோடு இழக்கிறார்கள். இது ஒரு தீர்க்க முடியாத பிரச்னை என்றே நினைக்கிறேன் - இது பம்பாய் பெண்மணியின் கூற்று.

பதில் ஜெர்மனி நாட்டுப் பெண்மணி தொழிலதிபரிடமிருந்து 'டக்'கென்று வந்தது. "இந்த நிலை இந்தியாவில் மட்டுமல்ல; உலகின் ஒவ்வொரு பகுதியிலும் உள்ளது. ஆச்சரியத்தில், 'அடடே, அங்கேயும் அப்படித்தானா?' என்று தனக்குத்தானே முடிவு செய்து கொண்டு பின்வாங்கக் கூடாது நீங்கள்! உரிமையைக் கொடு என்பதைவிட, நாமாகவே அதை எடுத்துக் கொண்டு விட்டால் பிரச்னை தீர்ந்தது. ஒரு தொழிலை ஆரம்பித்து, ஆண் பிள்ளைகளைப் போல பிரச்னைகளைச் சந்திக்கத் தொடங்கினால் அதனைச் சமாளித்தே ஆகவேண்டும். அதை விட்டு, 'நான் பெண், எனக்கு இதைச் செய்து கொடுங்கள்' என்று ஒவ்வொன்றிற்கும் கணவன் பின்னால் சுற்றினால் மீண்டும் பழைய பல்லவியைத்தான் பாட வேண்டும். ஒரு தொழிலைத் தொடங்கி நடத்த வேண்டும் என்று தீர்மானித்தால் தீவிரமான ஈடுபாட்டுடன் எதையும் தைரியமாக எதிர்கொள்ளும் மனப்பக்குவத்தை நமக்கு நாமே ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இந்தக் காரியத்தை முடித்தே தீருவது என்கிற முனைப்புடன் நேர்மையைக் கடைப்பிடித்துச் சலுகைகளை உரிமையோடு பெற்றுவிட்டால், பின் எப்போதும் தொடர்ந்து கிரீன் சிக்னல்தான். நாம் நினைத்தால் முடியாதது இல்லை என்று ஆணித்தரமாகக் கூறுவேன்."

இக்கருத்தரங்கில் இடம் பெற்ற பொருட்காட்சியில் தோல் பொருட்கள், ஏற்றுமதி ஆடைகள், அலங்கார கல் நகைகள் போன்றவை விற்பனைக்கு வைக்கப்பட்டிருந்தன. அதில் தோல் பொருட்களுக்கும் நகைகளுக்கும் ஏக டிமாண்டாம். "உங்கள் பொருட்களின் தரத்தைக் கூறினால் அதனை உலகச் சந்தையில் விற்பதற்கு நாங்கள் உதவி செய்கிறோம் என்று பல நாட்டுப் பெண்கள் உறுதி கூறியதுடன் அதற்குரிய விண்ணப்பத்தாளும் இக்கருத்தரங்கில் வழங்கப்பட்டதாம்.

---

கென பணியாற்றுகின்ற சில பெண் முனைவோர் சங்கங்களையோ அல்லது அரசாங்க அதிகாரிகளையோ கலந்தாலோசித்திருந்தால் இப்படிப்பட்ட பிரச்னை வருவதை கண்டிப்பாக தவிர்த்திருக்கலாம்."

"சரி, அன்னபூரணிக்கு நிதி கிடைக்காமல் போனதற்குச் சரியான காரணம் என்ன?"

"இவங்க ஆரம்பிக்க நினைச்ச நேரத்திலே ஏற்கெனவே நடந்து கொண்டிருந்த ஜெம்-கட்டிங் தொழில்கள் சில நஷ்டத்திலேயும், இன்னும் சில தொழிலகத்தையே மூடும் நிலைமையிலும் வந்து விட்டன. எனவே எதிர்காலத்தில் 'விற்பனை இருக்காது' என்று பயந்த வங்கி அதிகாரிகள் இத்தொழிலுக்கு நிதி தருவதை நிறுத்தி விட்டனர். மூலப் பொருளும் கிடைக்க வேண்டிய இடத்திலிருந்து கிடைக்கவில்லை.

"இந்தக் கட்டத்தில் என்ன உதவியை உங்களிடமிருந்து திருமதி அன்னபூரணி பெற முடியும்?"

"மூலப் பொருள், நிதி, முதல் மற்றும் விற்பனை இவையெல்லாம் சாதகமா இருந்தாத்தான் ஒரு தொழில் ஆரம்பிக்கப்பட்டு அது தங்கு தடையின்றி எதிர்காலத்தில் நல்ல விதமாக நடக்கும். தொழில் நுணுக்கம் அதிகமுள்ள பொருட்களுக்கு மார்க்கெட்டில் என்றைக்குமே மதிப்பு அதிகம். எனவே அவர்கள் இதற்குண்டான பயிற்சியை எடுத்திருந்தால் அந்தத் தகுதியைக் காட்டி வங்கி அதிகாரிகளிடம் வாதித்து வழிபடுத்தி யிருக்கலாம். இவர்கள் இத் தொழிலை தொடங்க எங்களை அணுகினால் முதலில் மூன்று மாதத்திற்குப் பயிற்சி கொடுப்போம். அக்காலத்தில் உதவித் தொகை ரூ 200 லிருந்து 250 வரை பெறலாம். பிறகு இவர்களது திறமையையும், வேண்டிய நிதி உதவியையும் பரிந்துரை செய்து வங்கி மேலதிகாரியின் கவனத்திற்குக் கொண்டு வருவோம். ஒருமுறை நிதி கிடைக்கவில்லையெனின் அதற்கென ஒரு கூட்டம் ஏற்பாடு செய்து அதற்கு வங்கி நிர்வாகிகளை வரச் செய்து சம்பந்தப்பட்டவர்களின் திறமை, தேவை இவைகளைத் தனிப்பட்ட முறையில் விளக்கி நிதி கிடைக்க ஆவன செய்வோம்."

1991-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டு இந்த மகளிர் தொழில் முனைவோர் திட்டம் நடப்பு ஆண்டுடன் 605 பெண் தொழிலதிபர்களை வெற்றிகரமாக உருவாக்கியிருக்கிறது. தோல் பொருள், ஆடை ஏற்றுமதி, உணவுப் பொருட்கள் செய்தல் என்று கிட்டத்தட்ட 34 வகை தொழில்களை, மகளிர் தொழில் முனைவோர்களுக்காக பரிந்துரை செய்யும் தமிழ் மாநில அரசாங்கம் அவைகளுக்கு வேண்டிய மூலப் பொருட்கள் எங்கு கிடைக்கும் என்பது மட்டுமல்லாமல், முனைவோரின் திறனுக்கேற்ப, தகுதிக்கேற்ப நிதியை ஏற்பாடு செய்வதுடன், விற்பனை பற்றிய விவரங்களையும் கொடுத்து உதவுகின்றது.

பதிவு செய்யப்பட்ட மகளிர் தொழில் முனைவோர்களின் எண்ணிக்கை இன்று சென்னை, செங்கல்பட்டு மாவட்டங்களில் மட்டும் 1,62,000. இவர்களின் பெரும்பான்மையினரின் பிரச்னை விற்பனைதான். 1980ம் வருட வாக்கில் - பெண் முனைவோர்களின் பிரச்னைகள் அதாவது மின்சாரம் கிடைக்காமை,, நிதி பற்றாக்குறை. இடம் போன்றவற்றை அரசாங்க மேலதிகாரிகளின் கவனத்திற்குக் கொண்டு வந்து தீர்வு கிடைப்பதற்காக ஒரு சங்கத்தை திருமதி வளோளி ராஜ் என்பவர் தொடங்கி வைத்தார். மற்றும் அண்ணா நகரில் ஒரு மகளிர் முனைவோர் சங்கமும், மூவ்ஸ் (Moowes) என்கிற அமைப்பும் மகளிர் முனைவோர்களின் பிரச்னைகளை தீர்ப்பதில் பெரும் பங்கு கொள்கின்றன.

"என் தோழிகளில் சிலர் எடுத்த உடனேயே அதிக முதல் போட்டு வியாபாரம் ஆரம்பித்து பின் அதற்குச் சரியான விற்பனை இல்லாததினால் வங்கிகளில் பெற்ற நிதியையும் திருப்பிச் செலுத்த முடியாமல் தத்தளித்திருக்கிறார்கள். ஒரு பெண் தான் ஆரம்பித்த தொழிலையும் கவனித்துக் கொண்டு விற்பனையையும் கவனிக்கிறது ரொம்ப சிரமம். இதைக் கருத்தில் கொண்டு தான் நாங்கள் 12 தொழில் முனைவோர்கள் சேர்ந்து இந்த 'மூவ்ஸ்' ஐ ஆரம்பித்து விற்பனையில் மட்டும் மகளிர் முனைவோர்களுக்கு உதவுகிறோம். இன்றைக்குக் கிட்டத்தட்ட 100க்கும் மேற்பட்ட அங்கத்தினர்கள் இந்த அமைப்பில் உள்ளனர். ஆரம்பத்தில் அரசாங்க அதிகாரிகள் தங்களது இலக்கினை அடைய வேண்டும் என்று அதிக பணத்தினை தகுதி குறைவானவர்களுக்கு அளித்து விட்டனர். மேலும் சுயமாக தொழில் ஆரம்பித்த பெண்கள் சிலர் தங்களது வரம்புகளை அறியாமல் அகல கால் வைத்து விட்டு அவதியுற்றனர். இன்றைக்குப் பல வங்கிகளில் பெண் தொழில் முனைவோர்களை ஊக்குவிப்பதற்காக நிதி சுமார் 1,00,000 வரை கூட உடனடியாக அளிப்பதில் பெண் வங்கி அதிகாரிகளே ஈடுபடுத்தப்பட்டிருக்கிறார்கள். இதில் பெரும் குறையென்னவென்றால் முனைவோர்களில் பாதி பெண்களுக்கு மத்திய, மாநில மற்றும் வங்கிகளில் தொழில் தொடங்க என்னென்ன வசதிகள், குறைவான கட்டணங்கள் போன்றவையெல்லாம் கிடைக்கின்றன என்பவை தெரிவதில்லை" - இப்படிக் கூறுபவர் மூவ்ஸின் தலைவராக இருக்கும் திருமதி ஜானகி ஆனந்த்.

முந்தைய தலைமுறை வரை, ஒரு பெண் முனைவராவது கூட்டாக அவளது கணவனின் தொழிலில் மட்டுமே. அதுவும் வருமான வரியை சரிகட்டத்தான். ஆனால் இன்றைக்கு நிலைமை மாறியிருக்கிறது. ஆண்கள் செய்யும் தொழில்களிலும் நாங்கள் ஈடுபட்டு வெற்றியடைவோம் என்று பெண்கள் தைரியமாகக் கூறுமளவிற்கு தனியாக யாருடைய உதவியுமின்றி ஒரு பெண் வெற்றிகரமாக ஒரு தொழிலை நடத்த மிகவும் தேவையானது என்ன?

கூறுபவர் அரவிந்த் என்ஜீனியரிங் தொழிற்கூடத்தை நடத்தும் திருமதி நிர்மலா கஸ்தூரி. கண் அறுவை சிகிச்சைக்கு வேண்டிய உபகரணங்களை உற்பத்தி செய்யும் தொழிற்கூடத்தினை நடத்தும் இவர் 1990-91 ஆம் ஆண்டிற்கான 'தி பெஸ்ட் விமன் ஆன்டிரபுனர்'க்கான விருதினை தமிழக அரசிடமிருந்து பெற்றிருக்கிறார். (ரூ 25000 ரொக்கம் + கேடயம்) அது மட்டுமல்ல வரப்போகும் அகில உலக மகளிர் முனைவோர்கள் கூட்டத்தில் மத்திய அரசின் விருதிற்கும் தகுதி பெற்றிருக்கிறார்.

"நமக்கு நன்கு தெரிந்த பரிச்சயமான தொழிலைத்தான் தேர்ந்தெடுக்க வேண்டும். முதலிலிருந்து இறுதிவரை வேலையின் எந்தப் பகுதியையும் செய்யக்கூடிய திறமை படைத்தவராய் இருத்தல் மிக மிக அவசியம். எடுத்த உடனேயே பெரும் அளவில் முதல் போட்டு ஆரம்பித்தால் வெற்றி நிச்சயம் என்று எண்ணுவது பெரும் தவறு. ஒன்றை ஆரம்பித்து விட்டால் இடையில் என்ன தடங்கல் வந்தாலும் சரி. ஒரு கை பார்த்து விடுவது என்று முழு மூச்சுடன் இறங்க வேண்டும். பிறரை எல்லாவற்றிற்கும் நம்பாது நாமே நேரிடையாக ஈடுபடுவது என்றைக்குமே நல்லது."

தொழில் தொடங்க அறிவுரை கூற அரசாங்கம், நிதியுதவி அளித்திட வங்கிகள், விற்பனைக்கு உதவிட மாநில - சில தனியார் அமைப்புகளிலிருந்து, அகில உலக மகளிர் அமைப்புக்கள் வரை - இவை போதாதா ஒரு சிறு தொழில் தொடங்க.

– கீதா மோஹன்

இந்தக் கட்டுரையைப் படித்தவுடன் நீங்கள் கேட்க நினைக்கும் முகவரிகளை நாங்களே தந்து விடுகிறோம் :

பெண் தொழில் முனைவோர்
பிரிவு,
திரு. டாக்டர் நடராஜன்,
சிறப்பு அதிகாரி,
தொழில் வணிகத் துறை,
சேப்பாக்கம்,
சென்னை - 600 005.

"மூவ்ஸ்
"MOOVES"
(பதிவு அலுவலகம்)
எண் 755, 'எக்ஸைட்' இல்லம்,
இரண்டாவது மாடி,
அண்ணா சாலை,
சென்னை - 600 002.

தலைவர் :
திருமதி ஜானகி அனந்தி

தொலைபேசி எண் : 415866.



"அமிர்தாஞ்சன் கோல்ட் ரப் தரும் இணையற்ற இதமான விரைவான நிவாரணம்"
(என் இரு 'குழந்தை'களுக்கும்!)
அவருக்கு ஜலதோஷம் வந்தா... குழந்தை மாதிரியேதான்...
சிடுசிடுப்பு, முரண்டு; ஆறுதலா இதமா ஏதாவது செய்தே ஆகணும்!
அமிர்தாஞ்சன் கோல்ட் ரப் தான் குடும்ப முழுவதுக்கும் சரியான கோல்ட் ரப்.
எவ்வளவு இதம். எவ்வளவு மென்மை.
அதே சமயம் ரொம்ப ரொம்ப திறன்மிக்கது.
குடும்பத்திற்கான கோல்ட் ரப்
Amrutanjan's Cold Rub
Cold Rub
அமிர்தாஞ்சன் கோல்ட் ரப்
ஜலதோஷத்திலிருந்து துரித நிவாரண

## பொருள் : புதுவருட ஸ்பெஷல்

### முதல் பரிசு ரூ. 300/-

### மாஜிக் கோன்



* நிலா

தேவையான பொருட்கள் :
பால் - 2 கரண்டி,
மைதா - 4 கப்,
உப்புப் பொடி - சிறிது,
நெய் அல்லது வெண்ணெய் - 4 கரண்டி,
சிறிய அலுமினிய கோன்கள் - 6,
எண்ணெய் - ¾ லிட்டர்.

செய்முறை :
நன்கு மைதாவை சலித்துக் கொண்டு பால், வெந்நீர், நெய் அல்லது வெண்ணெய் போட்டுக் கொண்டு கெட்டி



* ஜானகி

## இம்மாத இல்லத்தரசி



* விஜயலட்சுமி



* கீதா

யாக மாவு பிசைந்து சற்று ஊறவிட்டு விடவும். சுமார் 2 மணி நேரம் கழித்து நன்கு அடித்துப் பிசைந்து கொண்டு சன்னமாக சப்பாத்தி போல இட்டுக் கொண்டு கூரான கத்தியால் நாடாக்கள் (ரிப்பன் பகோடா போல்) வெட்டிக் கொள்ளவும். கோன்களைத் துடைத்து வெளிப்புறம் சிறிது எண்ணெய் தடவிக் கொள்ளவும். கீழே தொடங்கி மேலே வாய்ப்புறம் வரை இழை இழையாக அடுக்காக இந்த ரிப்பன்களைச் சுற்றிக் கொள்ளவும். அடுப்பில் ரீபைண்ட் ஆயிலைக் காய வைத்துக் கொண்டு விடவும். அலுங்காமல் இந்தக் கோன்களை எண்ணெயில் போட்டு சற்றுப் பொறுத்துக் கண் அகப்பையால் சிலுப்பிக் கொடுத்தால் எல்லா பக்கமும் நன்கு வேகும். நன்கு பொன்னிறமாக ஆனதும் எடுத்து வடிகட்டில் போட்டு ஆறிய பின்பு ஒரு தட்டுத் தட்டிக் குலுக்கினால் 'கோன் ஷேப்பில்' தனியே கழண்டு கையில் வந்து விடும். மறுபடியும் அதில் அடுத்த நாடாவைச் சுற்றிப் போட்டு எடுக்கலாம். இப்படி எல்லா மாவையும் செய்து கொண்டு விட்டு 'ஏர்-டைட்' டப்பாவில் மூடி வைத்து விடவும்.

குறிப்பு 1 : எள், கசகசா, கொப்பரை, பொட்டுக் கடலை, ஏலம் ஆகியவற்றை மணம் வர வறுத்து எடுத்து (தேவையானால் ஜாதிக்காய் பொடி கூடப் போடலாம். மிகவும் நன்றாக இருக்கும்.) நன்கு பொடித்து எடுத்து சம அளவு சர்க்கரைப் பொடி மிக்ஸ் பண்ணிக் கொண்டு சூட்டுடன் இந்த கோன்களில் நிறைத்து

அழுத்தி விடவும். மேலாக ஒரு கிராம்பை (வறுத்தது) செருகி விடலாம். சாப்பிடுவதற்கு சற்று முன்பாக இதைக் கோனில் அடைத்தால் போதும். உட்புறம் நன்கு 'செட்' ஆகி விடும். வெளிப்புறம் நன்கு கரகரப்பாய் பொன்னிறமாகக் கண்ணைக் கவரும்படி இருக்கும்.

குறிப்பு 2 : அதே போல் இனிப்புக்குப் பதில் காரம் வேண்டுமானால் கோன் மாவில் உப்பைக் குறைத்துக் கொண்டு விடவும். சிட்டிகை உப்புப் போட்டால் போதும். உள்புறம் வெங்காயம், உருளைக் கிழங்கு, பட்டாணி, கேரட், பீன்ஸ், கொத்துமல்லி, கறிவேப்பிலை, உப்பு, காரம் போட்டுத் தாளித்த கெட்டியான மசால், அல்லது பொரியலை நன்கு நிரப்பிக் கொள்ளுங்கள். நல்ல ருசியாக வெளிப்புறம் கரகரப்பாகவும், புதுமையாகவும் நல்ல ருசியுடன் விளங்கும். நியு-இயர் பார்ட்டிகளுக்கும் சரளமாக நாமே செய்து விடலாம்!

சிறிய சிறிய கோன்களில் செய்து குழந்தைகளின் தட்டில் வைத்தால் கொண்டாட்டம்தான்.

– சரஸ்வதி, பழனி.

## இரண்டாம் பரிசு ரூ. 200/-

## க்ரீன் ரைஸ் + முத்துப் பச்சடி

தேவையான பொருட்கள் :

பச்சரிசி - ½ படி,
பச்சை கொத்துமல்லி - 2 பெரிய கட்டு,
தேங்காய் - 1 மூடி,
பச்சை மிளகாய் - 6,
கடுகு - 1 டீஸ்பூன்,
உளுத்தம் பருப்பு - 2 டீஸ்பூன்,
கறிவேப்பிலை - 1 சிறிய கொத்து,
முந்திரி பருப்பு - 50 கிராம்,
எண்ணெய் - 3 ஸ்பூன்,
நெய் - 2 டீஸ்பூன்,
உப்பு தேவைக்கேற்ப.

பித்தளை பாத்திரங்களைத் தேய்க்கப் புளியைப் பயன்படுத்துவது வழக்கம். புளிக்குப் பதில் பிழிந்த எலுமிச்சை பழத் தோலால் தேய்த்துப் பாருங்கள். என்ன? புதிதாக வாங்கினீர்களா என்று அனைவரையும் கேட்க வைக்கும்.

– சாந்திராம்



செய்முறை :

பச்சை கொத்துமல்லியை தண்ணீரில் கழுவி இலைகளை மட்டும் ஆய்ந்து எடுத்துக் கொள்ளவும். தேங்காயைத் துருவிக் கொள்ளவும். பச்சை மிளகாய், பச்சை கொத்துமல்லி, தேங்காய்த் துருவல் இவற்றை மிக்ஸியில் நன்கு மையாக அரைத்துக் கொள்ளவும்.

அரிசியைக் களைந்து வேகவைத்து பொல பொலவென உதிர்த்து ஆற வைக்கவும். முந்திரியை 2,3 ஆக ஒடித்து நெய்யில் சிவக்க பொரிக்கவும்.

வாணலியில் எண்ணெயைக் காய வைத்து கடுகு, உளுத்தம் பருப்பு, கறிவேப்பிலை தாளிக்கவும். இதில் அரைத்த விழுதைக் கொட்டி பச்சை மிளகாய் கார வாசனை போகும் வரை வதக்கவும்.

வதக்கிய விழுதை சாதத்தில் கொட்டி உப்பு சேர்த்து சாதம் மசியாதவாறு கலக்கவும். கடைசியில் வறுத்த முந்திரிப் பருப்பைச் சேர்க்கவும். சூடாக பரிமாறவும்.

ப. கொத்துமல்லி இன்னும் சிறிது அதிகம் சேர்த்தாலும், முந்திரிப் பருப்பு அதிகம் சேர்த்தாலும் சுவை கூடும்.

### முத்துப் பச்சடி

தேவையான பொருட்கள் :

பெரிய ஜவ்வரிசி - 50 கிராம்,
புளிக்காத தயிர் - 1 கப்,
கடுகு, உளுத்தம் பருப்பு
- சிறிதளவு (தாளிக்க),
பச்சை மிளகாய் - 1,
தேங்காய்த் துருவல் - சிறிதளவு,
உப்பு தேவைக்கேற்ப.
எண்ணெய் - தேவைக்கேற்ப.

செய்முறை :

ஜவ்வரிசியை எண்ணெயில் நன்கு பொரித்தெடுக்கவும். தயிரில் உப்பு கலந்து கடுகு, உ. பருப்பு, ப. மிளகாய் தாளிக்கவும். தேங்காய்த் துருவல் சேர்க்கவும். இதில் பொரித்த ஜவ்வரிசியை நன்கு ஊறவிடவும்.

தயிர்ப் பச்சடியை முதலில் செய்து விட்டால் 'க்ரீன் ரைஸ்' செய்து முடிப்பதற்குள் நன்கு ஊறி தொட்டுக் கொள்ள சுவையாக இருக்கும்.

– ஏ. எம். விஜயலெட்சுமி,
சென்னை – 5.

## மூன்றாம் பரிசு ரூ. 100/-

## சந்திர காந்தா

தேவையான பொருட்கள் :

பாசிப் பருப்பு - 1 கப்,
கடலைப் பருப்பு - 1 கப்,

அரிசி - 1 கைப்பிடி அளவு,
தேங்காய் - 1 மூடி துருவியது,
நெய் - சிறிதளவு,
ஏலக்காய் - இரண்டு அல்லது மூன்று,
மைதா மாவு - ½ கப்,
சர்க்கரை - சுமார் 2 அல்லது
இரண்டரை கப்,
பொரித்தெடுக்க ரீபைண்ட் ஆயில்.

செய்முறை :

முதலில் பாசிப் பருப்பு, கடலைப் பருப்பு இவற்றுடன் சிறிது அரிசியைச் சேர்த்து ஊறவைத்து நைசாக அரைத்துக் கொள்ள வேண்டும். அரைத்த விழுதை அடி கனமான ஒரு பாத்திரத்தில் போட்டு கொஞ்சம் நெய் விட்டு அடிபிடிக்காமல் கிளற வேண்டும். மாவு வெந்தவுடன் அத்துடன் சர்க்கரை, தேங்காய்த் துருவல், ஏலக்காய்ப் பொடி போட்டு கெட்டியாகக் கிளறி வைத்துக் கொள்ள வேண்டும்.

கிளறி வைத்துள்ள மாவை சிறு உருண்டைகளாகச் செய்து மைதாவில் புரட்டி எண்ணெயில் பொரித்தெடுக்க வேண்டும். அடுப்பு நிதானமாக எரிய வேண்டும். இதைச் சதுரமாகவோ, டைமண்ட் போலவோ கூடச் செய்து மைதாவில் புரட்டி பொறிக்கலாம். குலோப்ஜாமூன் போன்ற ருசியுடன் மிகவும் சுவையாக இருக்கும்.

- ஆர். ஜானகி ரங்கநாதன்,
சென்னை - 61.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## பஞ்ச கல்யாண்

தேவையான பொருட்கள் :
பால் - 5 கப்,
சர்க்கரை - 5 கப்,
கடலை மாவு - ½ கப்,
பொடி செய்த முந்திரி தூள் - ½ கப்,
வெண்ணெய் - 150 கிராம்,
நெய் - 1 கரண்டி.
ஏலக்காய், ஜாதிக்காய்த் தூள்
- தேவைக்கேற்றபடி.
(மேலே அலங்காரமாய் ஜரிகை தாள், பிஸ்தா, பாதாம் பருப்பு)

செய்முறை :

முந்திரிப் பருப்பை நைசாக மாவாக்கிக் கொள்ள வேண்டும். பாலை அடுப்பில் வைத்து குறுக்கிக் கொள்ளவும். அடிபிடிக்காமல் இரட்டுப்பாலுக்கு சர்க்கரை போடும் பதத்துக்கு வருவதற்கு முன் சற்று இறக்கி வைத்துக் கொண்டு, வாணலியில் நெய்யை விட்டு கடலை மாவை சற்று வறுத்து இறக்கிக் கொண்டு, பாலுடன் முந்திரி தூள், வெண்ணெய், சீனி, வறுத்த கடலை மாவு அனைத்தையும் போட்டு அடுப்பில் வைத்து அடிபிடிக்காமல் கிளறவும். சீனி கரைந்து, வெண்ணெய் உருகி வந்து நன்றாகக் கொதித்து, பின் நுரைத்து, சுருண்டு வரும். ஏலக்காய், ஜாதிக்காய் தூளைப் போட்டு, தாம்பாளம் (அ) ட்ரேயில் நெய் தடவி அதில் கொட்டி (ஜரிகை தாள், பாதாம், பிஸ்தா பருப்பால் ரசனையுடன் அலங்கரிக்கலாம்) துண்டு போடவும்.

- ஜி. நீலா, மன்னார்குடி.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## சாக்கோ கோகனெட் ட்ரீட்

தேவையான பொருட்கள் :
மில்க் மெய்ட் - 1 டின்,
தேங்காய் துருவியது - ½ மூடி,
மாரி பிஸ்கெட்ஸ் - 20,
கோகோ பவுடர் - 1 டீஸ்பூன்.

செய்முறை :

மாரி பிஸ்கெட்டுகளை மிக்ஸியில் நன்கு பொடி செய்து, கோகோ பவுடரையும் கலக்கவும். இதனுடன் மில்க்மெய்டை மெதுவாக சேர்த்து ரொட்டி மாவு பதத்தில் கொஞ்சம் ஈரமாக பிசையவும்.

ரொட்டி இடும் கல்லில் பாலிதீன் கவரை விரித்து சோக்கோ கலவையை சமமாகப் பரப்பவும். தேங்காய்த் துருவலில் மில்க்மெய்டை கலந்து சோக்கோ கலவையின் மீது சமமாக பரப்பவும்.

பாலிதீன் கவரோடு கலவையை பேப்பர் ரோஸ்ட் போல் சுருட்டி ப்ரீஸரில் 2 மணி நேரம் வைக்கவும்.

இரண்டு மணி நேரம் ஆகிய பின் ப்ரீஸரில் இருந்து எடுத்தால் பாலிதீன் கவர் தனியாக வந்து, சோக்கோ, கோக்னெட் கலவை தனியாக வந்து விடும். இப்போது கத்தியால் சின்னதாக, வட்டமாக கட் செய்தால், நடுவில் தேங்காயுடன் ஓரங்களில் சோக்கோவுடன் கூடிய கேக் தயார். மிகச் சுலபமான முறையில் புதுவருட கேக்!

- எஸ். எஸ். சீதா, கோயம்புத்தூர்.

ஷாம்பூ வரும் சிறு பிளாஸ்டிக் பை காலியானதும் அவைகளை வாஷிங் மெஷினில் போட்டு வைத்தால் துணிகள் மணக்கும். வாஷிங் மெஷின் இல்லாதவர்கள் துணிகளை ஊற வைக்கும்போது இந்த உறைகளையும் அதனுடன் போடலாம்,

- அனிதா ராமச்சந்திரன்




ஆரோக்கியமான உணவிற்கு
சுவையான வழி!
உங்கள் சுவையான சமையலின் இரகசியம் "ஸன்ட்ராப்" ஆக இருக்கட்டும்!
ஸன்ட்ராப் கலந்த எந்த உணவானாலும், பூரியிலிருந்து...
குலாப் ஜாமுன் வரை.. நாவிலிருந்து நீர் ஊறும்
சுவைதனை அளிக்கின்றது.
மேலும் இலேசானது, சுலபமாக ஜீரணிக்கக் கூடியது. சக்தி
நிறைந்தது. அத்துடன் கொலஸ்டிரால் அளவை கட்டுப்படுத்தக்
கூடியது. உங்கள் குடும்பத்தை ஆரோக்கியத்துடனும்,
மகிழ்ச்சியுடனும் வைக்கின்றது. ஆகவே ஸன்ட்ராப்பின்
நற்குணத்தை அறிந்து கொள்வீர்.
உங்கள் சுவையான உணவின் ஒவ்வொரு பாகத்திலும்
ஆரோக்கியத்தை அளித்திடுவீர்!
SUNDROP
SUPER-REFINED SUNFLOWER OIL
துடிப்புள்ள மக்களுக்கு நலம்தரும் எண்ணெய்!
I.T.C. LIMITED

# உள்ளே ஓர் இன்ப ஊற்று

ருக்மிணி பார்த்தசாரதி

"என் மாமியாரா? பரம சாது அவர்... எதிலும் தலையிடறதில்லை. எதையும் கண்டனம் செய்யறதில்லை. தான் உண்டு, தன் வேலை உண்டுன்னு இருக்கிற டைப்!"

"பரவாயில்லையே, பத்மினி! என் மாமியாரின் பொழுதுபோக்கு தப்புக் கண்டு பிடிக்கிறதுதான். நான் எது செய்தாலும் அது தப்புத்தான். முகத்தில் எப்போது பார், ஒரே சிடுசிடுப்பு!"

"அடடா! என் மாமியாரின் முகத்தில் சிடுசிடுப்பைப் பார்க்கவே முடியாது, தெரியுமா? எப்போதும் சிரித்த முகம்தான்."

"சாப்பாடு விஷயத்தில் கூட தப்புக் கண்டுபிடிக்க மாட்டாரா?"

"மாட்டார். அவருக்கு ஆகார நியமம் அதிகம். எண்ணெய், மசாலா கூடவே கூடாது. என் குழந்தைகளுக்கும் கணவருக்கும் - ஏன், எனக்கும்தான் - காரசாரமான சாப்பாடு ரொம்ப ரொம்பப் பிடிக்கும். அப்படி ஏதாவது செய்யும் போது மாமியாருக்காக வெண் பொங்கல், தயிர் பச்சடின்னு ஸிம்பிளாய்ப் பண்ணிடுவேன்!"

"துணி விஷயத்தில் எப்படி? விதம் விதமாகத் துணி வாங்கினால் ஆடம்பரச் செலவு அது இதுன்னு சொல்ல மாட்டாரா?"

"ஊஹூம்! நான் எதை வாங்கினாலும் அவரிடம் காட்டுவேன். ஒரு மரியாதைக்குத் தான். நன்றாயிருக்கிறதுன்னு சொல்வார். அவர் உடுத்தறதோ நூல் புடவைதான். அதனால் அவருக்குப் புடவை வாங்கறது கஷ்டமேயில்லை!"

"சமையல் மட்டும் முழுக்க முழுக்க உன் தலையில்தானாக்கும்!"

"என்னது? கறிகாய் நறுக்கறது அவர். சப்பாத்திக்கு மாவு பிசையறது அவர்.. அரைக்கிறதுக்கு மிக்ஸியும் கிரைண்டரும்





இருக்கிறதனால் பிரச்னை இல்லை. ஒவ்வொரு நாள் நான் ஆபீஸில் ஓவர்டைம் செய்துட்டு லேட்டாக வருவேன். அப்போதெல்லாம் ராத்திரி சமையல் அவருடையதுதான். ஒரு ரசம், ஒரு கூட்டு, ஒரு பொரியல்... இத்தனை ஐட்டங்கள் இருக்கும்!''

''நம்பவே முடியலை பத்மினி! இத்தனை அனுசரணையான மாமியாரா?'' என்றாள் அவள் சிநேகிதி ராதா. ராதா பக்கத்து வீட்டுக்காரி. எப்போதாவது பத்மினியோடு பேசிக் கொண்டிருக்க வருவாள். சம்பாஷணை பல விஷயங்களைப் பற்றி இருந்தாலும், அதில் மாமியார்கள்!'' என்ற விஷயம் கட்டாயம் இருக்கும்!

''இதுக்கே இப்படி அதிசயப்படறியே ராதா! நான் ஆபீஸில் கவலையில்லாமல் வேலை செய்யறேன், நல்ல பெயர் எடுக்கிறேன்... ஏன் தெரியுமா? எனக்கு வீட்டைப் பத்திக் கவலை கிடையாது. ஸ்கூல் விட்டு குழந்தைகள் வந்தால், பார்த்துப் பார்த்துச் சாதம் போட அவர்களுடைய பாட்டி இருக்கிறார்... அவர் இருப்பதால் வேலைக்காரி திருடறதில்லை. வீட்டுக்கும் நல்ல காவல். அவர் எத்தனை யூஸ்ஃபுல் பார்!''

இத்தனை நேரம் அடுத்த அறையிலிருந்து மனத்தில் திருப்தியோடு இந்தச் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த சரோஜா - பத்மினியின் மாமியார் - இனிய சங்கீதத்தில் எதிர்பாராமல் தோன்றி விட்ட அபஸ்வரத்தைக் கேட்டவள் போல் கூசிப் போனாள். யூஸ்ஃபுல் - உபயோகமானது. எத்தகைய கொச்சையான வார்த்தை! இல்லை... கொச்சையென்று சொல்ல முடியாது. யோசிக்காமல் சொல்லி விட்ட வார்த்தை... கருணையற்ற வார்த்தை.

இதில் கருணை எங்கே வந்தது? அவள் யூஸ்ஃபுல் - உபயோகமானவள்... பேரக் குழந்தைகளுக்கு ஆயா... வீட்டுக்குக் காவல்காரி... தப்புக் கண்டுபிடிக்காத மாமியார். மாட்டுப் பெண் ஓவர் டைம் செய்து களைத்து வந்தால், பகுதி நேர சமையல்காரி.

யூஸ்ஃபுல்தான், நிச்சயமாக - சீராக இயங்கும் இயந்திரம் போல்... ஆனால் இந்த வார்த்தையை ஒரு மனிதப் பிறவியை வர்ணிக்க உபயோகிக்கலாமா? புத்தகங்களைப் பாதுகாப்பாக வைத்துக் கொள்ள புத்தக அலமாரி இருந்தால், அது யூஸ்ஃபுல். கிண்ணங்கள், கரண்டிகள் என்று அடுக்கி வைத்துக் கொள்ள ஸ்டாண்ட் இருந்தால், அது யூஸ்ஃபுல்... அவளும் அது போலத்தானா? அஃறிணைப் பொருளைப் போன்றுதானா?

இந்த வார்த்தையைப் பிரயோகித்த போது பத்மினியின் மனத்தில் மாமியாரைக் காயப்படுத்தும் எண்ணம் சிறிதளவும் இல்லை என்று சரோஜா உணர்ந்தாள். பத்மினிக்கு எப்போதுமே வாக்குச் சாதுர்யம்




கிடையாது. மனத்தில் தோன்றியதைப் பட்டென்று போட்டு உடைத்து விடும் சுபாவம். கல்மிஷம் இல்லாத பெண்... இதை அறிந்தும், சரோஜாவின் மனம் துவண்டு போயிற்று... யூஸ்ஃபுல். ''ஒரு ஜடப்பொருளைப் பற்றிக் குறிப்பிடும் வார்த்தையை மிகவும் அன்பான, அனுசரணையான மாமியாரைப் பற்றிக் குறிப்பிட்ட பத்மினியும் ஜடம்தான்!'' என்று கூட ஒருகணம் நினைத்தாள். சட்டென்று வக்கிரமான ஓர் எண்ண ஓட்டம். ''நான் செல்லச் செல்ல, எனக்கு வயதாகாதா? வீட்டுக்கு உபயோகமாக இருக்க முடியாமல் போய் விடாதா? அப்போது, தேவையற்ற பொருளை நீக்கி விடுவது போல் என்னையும் முதியோர் இல்லத்துக்கு அனுப்பி விடுவாளா பத்மினி?''

சின்ன விஷயம்தான்... தோழியோடு பேசிக் கொண்டிருந்த போது பத்மினி எந்த வித உள்நோக்கமும் இல்லாமல் சொன்ன வார்த்தை... ''இதற்கு இத்தனை முக்கியத்

*துவம் கொடுக்கக் கூடாது நான்!'' என்று நினைத்துக் கொண்டாள் சரோஜா. ஆனால் இதயத்தில் வலித்துக் கொண்டே இருந்தது - ரோஜா இதழில் வைத்த முள்ளைப் போல்...*

*சரோஜா என்று பெயரிட்டார்களே தவிர ''ரோஜா'' என்றுதான் அவள் பெற்றோர்கள் அவளை அழைத்தார்கள். மிக மிக மிருதுவானவள் அவள். அதிர்ந்து பேச மாட்டாள்.. மற்றவர்கள் கலகலவென்று சிரிக்கும் போது அவள் முறுவலிப்பதோடு சரி. கோபம் என்பது அவள் அறியாத உணர்ச்சி. அநியாயமாக அவளை யாராவது இட்டிவாலோ, வலிய சண்டைக்கு இழுத்தாலோ, அவளால் வெகுண்டெழுந்து பதிலுக்குத் திட்டிச் சண்டையிட முடியாது. கண்களில் நீர் நிறைய, உதடு துடிக்க, வார்த்தைகள் குளற, வேதனையில் பிழியப் பிழிய அழத் தான் முடியும்.*

*ஆனால் அவள் இதயம் மகிழ்ச்சி மய*

மானது. இன்பத்தை அவள் தனக்கு வெளியே தேட வேண்டாம். ஓர் இன்ப ஊற்று அவள் இதயத்தில் இருந்தது. அவ ளால் தனியாக மணிக்கணக்கில் இன்பமாக இருக்க முடிந்தது... புத்தகங்கள் படிப்பாள். தன்னை மறந்து பாடுவாள். வண்ணச் சித்தி ரங்கள் தீட்டுவாள். அதரங்களில் முறுவல் மாறாது. பிறர் வருத்தினாலொழிய, தன் னுள் லயித்து, அந்த இன்ப ஊற்றின் சாரலில் நனைந்து மகிழ்ச்சிமயமாக இருக்க அவ ளால் முடிந்தது.

அவள் பணக்கார வீட்டில் பிறக்க வில்லை. பணக்காரனை மணக்கவும் இல்லை... ஆனால் கணவனோடு இல்ல றம் நடத்திய போது மனநிறைவோடுதான் இருந்தாள். அவன் அதிகம் சம்பாதிக்க வில்லை. வயோதிக பெற்றோரைப் பராமரிக்கும் பொறுப்பையும் ஏற்றிருந் தான். கஷ்ட ஜீவனம்தான்... ஆனால் அவள் சிரித்த முகம் சிணுங்காமல் குடும்பம் நடத் தினாள்... ஒரு மகன் பிறந்தான். கைக்கும் வாய்க்குமான நிரந்தரப் போராட்டத்தின் போது அடிக்கடி சோர்வு தோன்றும். அப் போதெல்லாம் அவள் தனக்குத்தானே பாடிக் கொள்வாள். வண்ணச் சித்திரம் தீட்டு வாள். ஆனால், என்ன அதிசயம்! சோர்வின் நடுவில் அவள் பாடும் பாட்டுக்களின் வரி களோ இன்பமயமாக இருக்கும். அவளு டைய சித்திரங்களிலோ வானளாவிய மலை கள், பச்சை வயல்கள், தெளிந்த ஓடைகள், பூத்துக் குலுங்கும் தோட்டங்கள், வீடு திரும் பும் குடியானவன், தன் மக்களை அணைக் கும் தாய், மழை நீரில் நனையும் வறண்ட பூமி.. எல்லாமே அவள் இதயத்தின் இன்ப ஊற்றின் பிரதிபலிப்புக்கள்.

கஷ்ட ஜீவனத்தில் கஷ்டம் கூடிற்று - அவளுடைய கணவன் ஒரு விபத்தில் இறந்த போது.. அவன் பணிபுரிந்த அலுவலகத்தில் அவளுக்கு ஒரு வேலை கொடுத்தார்கள். அவனத்தனை அவள் படித்திருக்க வில்லை. அதனால் அவளுக்குக் கிடைத்த வேலையும் அதற்கான சம்பளமும் தாழ்ந்தே இருந்தன. அவள் மகன் வளர்ந்தான். முழு கவனத்தோடு படித்து, நல்ல மதிப்பெண் கள் பெற்றான். படிப்பில் அவனுக்கிருந்த ஆசையும் ஆர்வமும் அவளுக்குள் ஓர் ஆதர்ச வெறியைக் கிளப்பி விட்டன. அவள் உழைத்தாள். ஓவர்டைம் செய்தாள். தன் தேவைகளைக் குறைத்துக் கொண்டாள்... அவன் படிக்க வேண்டும். விரும்பிய அளவு படிக்க வேண்டும்... வாழ்வின் லட்சியம் அதுதான். அவள் உயிர் வாழ்வதன் அர்த் தமே அவனுடைய கல்விதான்.

ஒவ்வொரு சமயம் அவளுடைய உழைப்பின் கடுமையைக் கண்டு அவள் மகன், ''அம்மா, நான் படிப்பை நிறுத்திட றேன்... ஒரு வேலை தேடிக்கறேன். நீ நாளுக்கு நாள் என் கண் முன்னாலேயே தேஞ்சு போகிறதை என்னால் பார்க்க முடி யலை. இப்படி உழைச்சால் உன் உடம்பு தாங்காது!'' என்பான். அவளுடைய பதிலில் மட்டும் மாறுதலே இருக்காது. ''நீ படிப்பை நிறுத்தினால் அதைவிட குரூரமாக என்னை அவமானப்படுத்த முடியாது. நீ நன்றாகப் படிக்கிறவரை என் உடம்பு எந்த உழைப் பையும் தாங்கும். அந்தக் கருணையை ஆண்டவன் கட்டாயம் காட்டுவான்!''

ஆண்டவன் கருணை காட்டினான். அவள் மகன் கல்லூரியில் டிஸ்டிங்க்ஷ னோடு தேறினான். அரசாங்கப் போட்டிப் பரீட்சையிலும் கலபமாகத் தேறினான். தான் வேலையில் அமர்ந்த பிறகு முதல் காரிய மாக அவளை வேலையிலிருந்து ஓய்வு பெறச் சொன்னான். அவளும் சம்மதித்தாள். உடம்பு மிகவும்தான் நலிந்து விட்டது.. அடிக்கடி ஜுரம் வருகிறது.. உடலெல்லாம் வலிக்கிறது. அடிக்கடி மூச்சு வாங்குகிறது. ஓய்வு தேவை என்பது வைத்தியரின் அறி வுரை.

தனக்குத்தானே பாடிக் கொள்வதையும் வண்ண ஓவியங்கள் தீட்டுவதையும் அவள் எப்போது நிறுத்தினாள்? கணவனை இழந்த பிறகு, தான் வேலையிலிருந்து ஓய்வு பெற் றது வரை, நடுவிலிருந்த காலக்கட்டத்தில் இவை இரண்டும் நின்று போய் விட்டன.. அவள் இதயத்திலிருந்த இன்ப ஊற்று? வறண்டு விட்டதா? எத்தகைய இழப்பு இது? தன்னுடைய ஓவியங்களை ஒரு சிறு மரப்பெட்டியில் பாதுகாப்பாக வைத்திருந் தாள். ஆனால் அவற்றை எடுத்து அழகு பார்க்க வேண்டும் என்ற ஆவல் கூடத் தோன் றாதபடி ஓர் அசுவாரஸ்யம்.



ஒரு வெற்றிலையில் நல்லெண்

ணெயைத் தடவி, வாட்டிக் குழந்தையின்

நெஞ்சில் போட்டால் சளி, இருமல்,

நெஞ்சுக்கட்டு இவை குறையும்.

- கமலா

மகனுக்கு அழகான பெண்ணாகப் பார்த்து மணமுடித்து வைத்தாள். பத்மினி கண்ணுக்கு மட்டுமில்லை, மனத்துக்கும் இனியவள். மாமியாரைத் தாயாக நினைத்து, அனுசரணையோடு நடந்து கொண்டாள்... மரியாதை தவறின நாளே இல்லை. ''கஷ்டப்பட்டு மகனை ஆளாக்கி னவர்... இப்போது வயதானவர். அவர் துன்பப்படவே கூடாது!'' என்ற முழு பிரக்ஞையோடு நடந்து வந்தாள்.

இப்போதோ, இந்தச் சின்ன விஷயம்... ''யூஸ்ஃபுல்'' என்ற வார்த்தைப் பிரயோகம். பெரிய விஷயங்கள்தான் மனஸ்தாபங்களை வளர்க்குமா என்ன? சரோஜா மென்மை யானவள். தொட்டால் கருங்கி, அதுவுமில் லாமல், வாழ்க்கையில் கஷ்டப்பட்ட பலரி டம் காணப்படும் ஒரு பலவீனமும் அவளி டம் இருந்தது... தன்னை வருத்துவதில் பிற ருக்கு ஒரு மகிழ்ச்சி என்ற காம்ப்ளெக்ஸ்.. பத்மினியோ இதற்கு நேர் விரோதம். வார்த் தைகளைத் தராசில் வைத்து நிறுத்தி உப யோகிக்கும் சாதுர்யம் அவளிடம் கிடை யாது. முழுக்க முழுக்க பிராக்டிகல்.

நாளெல்லாம் தனக்குள்ளேயே வருந்தி வருந்தி அழுதாள் சரோஜா. யூஸ்ஃபுல்... அவ்வளவுதானா அவள்? கைநிறைய சம்பா திக்கும் கணவனும், ஆரோக்கியமான குழந் தைகளுமாகப் பத்மினி சுகவாழ்வு வாழ் கிறாள் என்றால், அதற்கு நிஜத்தில் யார் காரணம்? சரோஜாதானே? அவளுடைய உழைப்புத்தானே? தன் உடலைச் சந்தன மாகத் தேய்த்துக் கொண்டாள் - இப்போது மகனின் குடும்ப வாழ்க்கை மணம் கமழ் கிறது.

மாலை மணி ஐந்தான போது, சரோஜா தீர்மானித்தாள். இதை இப்படியே மனத்தில் வைத்து மூடி குமுறி அழுவது மதியீனம். இந்தப் பாரத்தை இறக்கி வைத்தாக வேண் டும்... மகனிடம் சொல்லி விட வேண்டியது தான். அவளுடைய உயர்வு அவனுக்குத் தெரியும்.

மாலை அலுவலகத்திலிருந்து வீடு வந்த அவள் மகன், நேரே அவளிடம் வந்தான். முகத்தில் மகிழ்ச்சி... இரு கைகளையும் முதுகுக்குப் பின்னால் மறைத்திருந்தான்.

''அம்மா! என்னை முதலில் வாழ்த்து!''

''என்னடா ராஜா விசேஷம்?''

''எனக்கு ஆபீஸில் பிரமோஷன்!''

மனத்திலும் முகத்திலும் குப்பென்று மகிழ்ச்சி நிறைய அவள், ''உன் தகுதிக்கு ஏத்த பரிசு!'' என்றாள்.

''எங்கே, வாயைத் திற, பார்க்கலாம்!''

''எதற்கு?''

''கேள்வி கேட்காமல் வாயைத் திற அம்மா!''

அவள் திறந்தாள். ஒரு விள்ளல் ஜாங்கி ரியை அதில் வைத்தான் மகன். ஜாங்கிரி இப்படிக் கூட ருசிக்குமா என்ன? அப்ப டியே நாவில் கரைந்து போகிறதே!

''இன்று ஆபீஸில் ஒரு சுவாரஸ்யமான விஷயம், அம்மா!''

''சொல்லு!''

''மத்தியானம் நாலைந்து பேராகப் பேசிக் கொண்டிருந்தோம். ஸப்ஜெக்ட் என்ன தெரியுமா? மாமியார் மாட்டுப் பெண் சண்டை! தங்கள் வீடுகளில் இந்தப் பிரச்னை ஓரளவுக்காவது இருப்பதாக எல்லோரும் சொன்ன போது, நான் மட்டும், ''என் வீட்டில் அது அடியோடு கிடையாது! காலை யில் சண்டை சச்சரவில்லாத வீட்டிலிருந்து கிளம்பினால் மாலையில் சண்டை சச்சரவில் லாத வீட்டுக்குத் திரும்பறேன்''னு சொன் னேன். எல்லோருக்கும் ஆச்சர்யமான ஆச்சர் யம்! ''உன் தாய், மனைவி ரெண்டு பேரும் அட்ஜஸ்ட் பண்ணிக்கிறதைப் போலிருக்கு! அதிர்ஷ்டசாலி நீ!'' என்று வாய்க்கு வாய் புகழ்ந்தார்கள்!''

சரோஜா மௌனமாக அவன் முகத் தைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''உன்னை எனக்குத் தெரியாதா அம்மா? நீ பட்ட கஷ்டம் யாரால் பட முடி யும்? உன் பொறுமை யாருக்கு வரும்? இதையெல்லாம் நான் ஆபீஸில் சொல்ல முடியுமா என்ன? ''நிஜம்தான்... அதிர்ஷ்ட சாலிதான் நான்!''னு சொன்னேன்!''

''பத்மினி மட்டும் என்னவாம்? தங்க மான பெண்!'' என்றாள் சரோஜா.

''நீ சொல்லி அதைக் கேட்கிற போது எத்தனை சந்தோஷமாயிருக்கு தெரியுமா, அம்மா?''



ஒரு சிறு துண்டு பிஞ்சுக் கடுக்காய், ஒரு சிறு துண்டு மாசிக்காய் இரண்டையும் வாயில் அடக்கிக் கொண்டு இரவில் படுக்கவும். காலை எழுந்தவுடன் வாய்ப்புண் எல்லாம் மாயமாய் மறைந்திருக்கும். மரத்துப் போன சுவையாய் வாய் இருக்கும். நீர் விட்டுக் கொப்பளித்தால் சரியாகிவிடும். வயிற்றுப் புண்ணையும் ஆற்றும் சக்தி இதற்கு உள்ளது. உமிழ்நீரை இரவு முழுவதும் விழுங்க வேண்டும். (தானே சென்றுவிடும். துப்பலாகாது.)

- காமலா

அப்போது பத்மினி அறைக்குள் நுழைந்தாள். கணவனின் முகத்திலிருந்த பரவசத்தைக் கண்டவள், ''ஏதாவது நல்ல செய்தியா?'' என்றாள்.

''எனக்குப் பிரமோஷன் கிடைச்சிருக்கு, பத்மினி! இந்தா ஸ்வீட்! அம்மாவுக்குப் பிடிக்குமேன்னு ஜாங்கிரி வாங்கினேன். முதல் விள்ளல் அவளுக்குக் கொடுத்துட்டேன். நீயும் குழந்தைகளும் சாப்பிடுங்கள்!'' என்றவன் ஸ்வீட் டப்பியை மனைவியிடம் கொடுத்தான்.

''அப்படியா! கங்கிராட்ஸ்!'' என்று மகிழ்ந்து, டப்பியை வாங்கிக் கொண்டாள் பத்மினி. பின், ''டிபன் காப்பி ரெடி! வாருங்கள்!'' என்றவள் பூத்த முகத்தோடு அறையை விட்டு வெளியேறினாள்.

''போய் டிபன் சாப்பிடு!'' என்று வாஞ்சையோடு அவனை அனுப்பி வைத்தாள் சரோஜா. எத்தனை சந்தோஷமாக இருக்கிறான் அவள் மகன்! இந்தப் பிரமோஷன் உழைப்பிற்கு ஊதியம்.. அதைத் தவிர, போனஸ் மாதிரி, அவன் தாயும் மனைவியும் அனுசரணையானவர்கள் என்று நண்பர்களிடமிருந்து சர்டிபிகேட் வேறு... தாய் பட்ட கஷ்டங்களை அவன் மறக்கவில்லை. ''உன் பொறுமை யாருக்கு வரும்?'' என்றானே! அவளை எத்தனை உயர்வாக நினைக்கிறான்! பத்மினி அவளை ''யூஸ்ஃபுல்'' என்று ஜடப் பொருளுக்கு நிகராக வர்ணித்ததைக் கேட்டால் அவன் துடித்துப் போய் விடுவான். வேண்டாம்.. அவன் அறியவே வேண்டாம். இன்று அவன் மிக மிகச் சந்தோஷமாக இருக்கிறான். அது இம்மியும் குறையக் கூடாது. பத்மினியும் நல்ல பெண் தான். நான் வாங்கி வந்த ஜாங்கிரியை முதலில் தாய்க்குக் கொடுத்தானே, தனக்குக் கொடுக்கவில்லையே என்றெல்லாம் சிறுமையோடு முகம் கோணவில்லையே அவள்! சண்டை சச்சரவில்லாத வீடு என்பது அலுவலகம் சென்று குடும்பத்துக்காக உழைக்கும் ஆண் மகனுக்கு ஒரு நிகரற்ற வரப்பிரசாதம். அவள் மகனுக்கு அந்தப் பாக்கியம் நிலைத்து இருக்க வேண்டும்.

சரோஜா தெளிவடைந்தாள். இருந்தும் மனத்தில் ஓர் ஏக்கம். அவளுடைய தருமிக்காக அவள் மகன் அவளைப் புகழ்ந்தானே, அது போதாது... அவளுடைய மகன் அவள் பெற்று வளர்த்து ஆளாக்கியவன் அவள் புகழ்ந்தால் மட்டும் போதுமா? பத்மினி வேறொரு வீட்டில் பிறந்து வளர்ந்து, இந்தக் குடும்பத்தில் அடிவைத்தவள். அவள் புகழ வேண்டும்... மாட்டுப் பெண்ணின் உண்மையான புகழ்ச்சி மாமியாருக்கு நிகரற்ற பரிசல்லவா?

**ப**த்மினியின் தங்கை மாலினி அக்கா வீட்டிற்கு வந்திருந்தாள், மூன்று நாட்களுக்கு... புதிதாகக் கல்யாணமான பெண். தன் வீட்டு வரவேற்பறையை அலங்கரிக்க கலைப் பொருட்கள் வாங்குவதே முக்கிய நோக்கம். அக்காவோடு மூன்று நாட்கள் இருக்கலாம் என்பதும் ஒரு காரணம்.

அலுவலகத்தில் இரண்டு நாட்கள் லீவு எடுத்துக் கொண்டாள் பத்மினி. அக்காவும் தங்கையுமாக, காலை ஒன்பது மணிக்கு கிளம்பினார்கள் என்றால் கடை கடையாக ஏறி இறங்கி, மத்தியானம் ஏதாவது ஹோட்டலில் தோசையோ ஊத்தப்பமோ விழுங்கி விட்டு, மறுபடியும் கடை கடையாக ஏறி இறங்கி, அலுத்துக் களைத்து வீடு திரும்ப மாலை மணி ஐந்தாகி விடும். இரண்டு நாட்களுக்குப் பிறகும் பலனென்னவோ பூஜ்யம்.

''நீ ஆசைப்படற மாதிரி எதுவுமே கிடைக்கலியா?'' என்று மாலினியிடம் கேட்டாள் சரோஜா.



வெள்ளைப் பூண்டுச் செடிக்கருகே நடப்பட்ட ரோஜாச் செடி மிக நன்றாக வளர்வதுடன், பூக்களும் பெரியதாகவும், நல்ல மணத்துடனும் உள்ளன. வெள்ளைப் பூண்டுச் செடியின் வேர்களிலிருந்து சுரக்கும் ஒரு வகையான நீரை ரோஜாச் செடி உறிஞ்சிக் கொள்வதால் ரோஜாச் செடிக்கு மிகுந்த நன்மைகள் விளைவதுடன் அதன் பகைப் பூச்சியும் விரட்டப்படுகிறது. எனவே, நம் வீடுகளில் ரோஜாச் செடிக்கருகில் வெள்ளைப் பூண்டுச் செடிகளை நட்டு வைத்தால் ரோஜாச் செடிக்கு மிகுந்த நன்மையை விளைவிக்கும்.

– சுதா

''இல்லை, மாமி... வித்தியாசமாக ஏதாவது கிடைக்குமான்னு பார்க்கிறேன். பளபளப்பாக பித்தளை குத்துவிளக்கு கிடைக்கிறது. மர பொம்மைகள், ப்ளாஸ்டர் ஆஃப் பாரீஸ், பேப்பர் மர பொம்மைகள், நிறைய இருக்கு. ஆனால் நான் மனசில் கற்பனை பண்ணியிருக்கிற மாதிரி எதுவுமே இல்லை. எதைப் பார்த்தாலும் சமீபத்தில் யார் வீட்டிலோ பார்த்த மாதிரி இருக்கு...''

''தனக்கு என்ன வேணும்னு மாலினிக்கே தெரியலைன்னு நினைக்கிறேன்!'' என்றாள் பத்மினி, சிரித்தவாறு.

''சொல்லட்டுமா?'' என்றாள் மாலினி. ''கவரில் மாட்ட இரண்டு டேபெஸ்ட்ரியோ, கைவேலை பொருளோ, ஓரிஜினல் பெயின்டிங்கோ வேண்டும்... பெரிசாக வேண்டாம். ஆனால் அதில் சட்டுனு மனம் லயிக்கணும்... இதெல்லாம் யானை விலை, குதிரை விலை விற்கிறது. என் பட்ஜெட்டுக்கு ஒத்து வராது!''

''பேசாமல் இரண்டு பாய் வாங்கிச் கவரில் தொங்க விடு. விதம்விதமான டிசைனில் கிடைக்கிறது. அதில் சட்டுனு மனம் லயிக்கும்!'' என்றாள் பத்மினி.

''உனக்கு விளையாட்டாகவா இருக்கு?'' என்று தமக்கையைப் பார்த்து விழித்த மாலினி, தொடர்ந்து சரோஜாவிடம் சொன்னாள். ''இதைத் தவிர சின்னச் சின்ன அலங்காரப் பொருள்கள் வேண்டும்.''

''எங்கே வைப்பாய்?'' என்றாள் சரோஜா.

''வரவேற்பறையில் அழகான வேலைப்பாடு அமைந்த சிறிய மேஜைகள் இரண்டின் மேல் சின்ன பூந்தொட்டிகளில் க்ரோடன்ஸ் வச்சிருக்கேன் மாமி. ஒவ்வொரு பூந்தொட்டிக்குப் பக்கத்திலும் வைக்க ஏதாவது வித்தியாசமான கலைப் பொருள் வேண்டும். மிகவும் பெரிதாகவோ, பளபளப்பாகவோ கூடாது. மேஜையின் வேலைப்பாட்டோட அழகைக் கூட்டுவதாக இருக்கணும், விழுங்குவதாக இருக்கக் கூடாது!''

''இரண்டு டெராகோடா பொம்மைகள் வாங்கி வை... யானை குதிரைன்னு கிடைக்கும்.. அதுதான் லேட்டஸ்ட் ஃபாஷன்!'' என்றாள் பத்மினி.

''தெரியும். அது மாதிரி பல வீடுகளில் பார்த்திருக்கேன், அலுத்துப் போச்சு!''

''சரிதான் போ! உனக்கு பிடிச்ச மாதிரி கலைப் பொருள் கிடைச்ச மாதிரிதான்!''

''நான் ஒன்னு சொல்லட்டுமா?' என்றாள் சரோஜா.

''என்ன மாமி?''


மங்களம்
பொங்குக !
DUGAR
KUM KUM
DEPOSIT
உங்கள் அன்புக்குரிய வாழ்க்கைத் துணையின் பேரில், துகரின் ஏதேனும் ஒரு டெபாஸிட் திட்டத்தில் 15 பிப்ரவரி 1994 முன் முதலீடு செய்து, துகரின் தனித்தன்மையான 'மங்கள' வாழ்த்துக்களைப் பெறுங்கள்.
• HIRE PURCHASE • LEASING • PROPERTY DEVELOPMENT • PUBLIC DEPOSITS • MERCHANT BANKING • FOREIGN EXCHANGE
தலைமை அலுவலகம்: 'துகர் டவர்ஸ்', 123, மார்ஷல்ஸ் ரோட், எழும்பூர்,
சென்னை-600 008. ☎ 828 35 35 (10 lines) Tlx: 041-6670 DUGR IN
Fax: 044-8281122. Grams: DUGFINANCE.

## SCHEME I – FIXED DEPOSITS

| PERIOD | RATE OF INTEREST PER ANNUM | INTEREST PAYABLE |
|---|---|---|
| 1 YEAR | 14% | MONTHLY |
| 2 YEARS | | |
| 3 YEARS | | |
| 4 YEARS | 14.16% | QUARTERLY |
| 5 YEARS | | |

MINIMUM OF Rs. 3,000/- AND IN MULTIPLES OF Rs. 1,000/-

## SCHEME II – CUMULATIVE DEPOSITS

| INITIAL DEPOSIT | AMOUNT PAYABLE AFTER | | | | |
|---|---|---|---|---|---|
| | 1 YEAR | 2 YEARS | 3 YEARS | 4 YEARS | 5 YEARS |
| Rs. 1,000/- | Rs. 1,150/- | Rs. 1,321/- | Rs. 1,518/- | Rs. 1,745/- | Rs. 2,006/- |
| ANNUAL YIELD | 15% | 16.05% | 17.27% | 18.62% | 20.12% |

MINIMUM OF Rs. 1,000/- AND IN MULTIPLES OF Rs. 1,000/-

**Particulars required to be specified as per Non-Banking Financial Companies and Miscellaneous Non-Banking Companies (Advertisement) Rules, 1977.**

(a) Name of the Company — DUGAR FINANCE INDIA LIMITED

(b) Date of Incorporation — 20th May, 1981.

(c) Business — Hire Purchase, Leasing, Property Development, Merchant Banking, Foreign Exchange & Portfolio Management.

(d) Branches — Mount Road, Mylapore, T. Nagar, Adayar (Madras), Bangalore, Calicut, Coimbatore, Ernakulam, Gudur, Madurai, Nellore, Salem, Secunderabad, Tirupati, Visakhapatnam.

(e) Management — The Company is managed by its Managing Director under the supervision of the Board. Grams: DUGINVEST

(f) Names, Addresses and occupation of the Directors

| Name | Address | Occupation |
|---|---|---|
| DR. C. ANNA RAO (Chairman) | Chelikani Anna Rao Road, Sripuram Colony, Tirupathi – 517 502. | Former Chairman, Board of Trustees, Tirumala Tirupathi Devasthanams |
| Shri B. LALCHAND MARLECHA (Vice-Chairman) | 30, Mannarswami Koil Street, Royapuram, Madras – 600 013. | Merchant & Banker |
| Shri C.R. RAO | 'White House' Gudur – 524 101 (A.P.) | Company Director |
| Shri V. RAMACHANDRAN | 24, Nungambakkam High Road, Madras – 600 034. | Senior Advocate |
| Shri C.V. KRISHNAIAH | 'Sree Krupa', Nehru Nagar, Gudur – 524 101 (A.P.) | Mine Owner & Company Director |
| Shri R. RAMAKRISHNAN | 'Hari', 14, Seethamma Road, Madras – 600 018. | Industrialist & Former Member, Rajya Sabha |
| Shri M.K. PANDURANGA SETTY | 'Prashanth', 27, Bull Temple Road, Bangalore – 560 004. | Industrialist & Company Director |
| Shri K.S.T. PANI | 'Suseelam' 45, Mandapam Road, Kilpauk, Madras – 600 010. | Chief General Manager, (Retd.) SBI & Company Director |
| Shri T. PADAM DUGAR | 21, Commander-in-Chief Road, Madras – 600 105. | Company Director |
| Shri N. TARACHAND DUGAR (Managing Director) | 21, Commander-in-Chief Road, Madras – 600 105. | Industrialist & Banker |

(g) & (h) Profits of the Company, before and after making provision for Tax and Dividends, declared by the Company for the three financial years immediately preceding the date of advertisement.

| Year ended | Profit before provision for tax (Rs. in lakhs) | Profit after provision for tax (Rs. in lakhs) | Dividend Declared |
|---|---|---|---|
| 30-06-1991 | 48.99 | 48.99 | 25% |
| 30-06-1992 | 81.55 | 79.26 | 25% |
| 30-06-1993 | 92.95 | 91.90 | 25% |

(i) Summarised financial position of the Company as appearing in the two latest Audited Balance Sheets.

| Liabilities | 30-06-93 (Rs. in lakhs) | 30-06-92 (Rs. in lakhs) | Assets | 30-06-93 (Rs. in lakhs) | 30-06-92 (Rs. in lakhs) |
|---|---|---|---|---|---|
| Share Capital | 300.00 | 300.00 | Fixed Assets | 590.7[illegible] | 532.34 |
| Reserves & Surplus | 111.59 | 94.36 | Investment | 84.69 | 27.00 |
| Secured Loans | 625.77 | 664.49 | Current Assets | 1855.32 | 1610.21 |
| Unsecured Loans | 1303.37 | 924.81 | Loans & Advances | 212.74 | 199.33 |
| Current Liabilities & Provisions | 442.60 | 400.77 | Miscellaneous Expenditure | 59.81 | 15.55 |
| | 2783.33 | 2384.43 | | 2783.33 | 2384.43 |

(j) Contingent liabilities as on 31.03.93

| | 30-06-93 (Rs. in lakhs) | 30-06-92 (Rs. in lakhs) |
|---|---|---|
| (a) Estimated amount of contracts remaining to be executed on capital account and not provided for | 1.00 | 3.00 |
| (b) Counter guarantees to Bankers | 5.00 | 5.00 |
| The Company can raise by way of deposits under the directions | 3517.80 | 3788.12 |
| Aggregate of deposits actually held | 1303.37 | 924.81 |

(k) **The Company has no overdue deposits other than unclaimed deposits.**

(l) The Company hereby declares

(i) that the Company has complied with the applicable provisions of the directions of Reserve Bank of India.

(ii) that the compliance with the directions does not imply that the repayment of deposits is guaranteed by the Reserve Bank of India, and

(iii) that the deposits accepted by the Company will be unsecured and rank pari passu with other unsecured liabilities.

This advertisement is issued on the authority and in the name of the Board of Directors of the Company. The text was approved by the Board of Directors on 23rd December 1993 and a copy duly signed by a majority of the Directors has been filed with the Regional Office of Reserve Bank of India, Department of Financial Companies, Bangalore.

By Order of the Board
For DUGAR FINANCE INDIA LIMITED
**N. TARACHAND DUGAR**
Managing Director

Madras
23rd December 1993.

**DUGAR**
**FINANCE INDIA LTD**

கிளைகள்:

- அடையார் ☎ 4917700
- மௌண்ட் ரோடு ☎ 831888
- மைலாப்பூர் ☎ 72256
- தி. நகர் ☎ 441541
- செகந்திராபாத் ☎ 846006
- கூடூர் ☎ 830
- மதுரை ☎ 33663
- நெல்லூர் ☎ 27576
- சேலம் ☎ 68769
- திருப்பதி ☎ 22990
- பெங்களூர் ☎ 5584422
- கோழிக்கோடு ☎ 63344
- கோவை ☎ 37867
- எர்ணாகுளம் ☎ 369515.
- விசாகபட்டினம் ☎ 46581.

தேங்காயைத் துருவியவுடன், ஃபிரிட்ஜில் ஒரு தட்டில் பரத்தி வைத்து, மறுநாள் எடுத்தால், தேங்காய்த் துருவல் நன்கு உலர்ந்து வெள்ளை வெளேர் என்று இருக்கும். வெயிலில் வைத்துக் காய வைத்ததைப் போலவே இருக்கும். இது தேங்காய் மிளகாய்ப் பொடி செய்ய மிகவும் உதவியாய் இருக்கும்.

- கங்கா ஜெயராமன்



''என்னிடம் சில பழைய சாமான்கள் இருக்கு. உனக்குப் பிடிச்சால், பிடிச்சதை எடுத்துக்கலாம்!''

''நிஜமாகவா மாமி?'' மாலினி கண்கள் மலர எழுந்தாள். ''எங்கே, காட்டுங்கள்?''

சரோஜா தன் அலமாரியைத் திறந்து ஒரு சாவியை எடுத்து வந்து கொடுத்தாள். ''ஸ்டோர் ரூமில் ஒரு ட்ரங்க் பெட்டியில் இருக்கு. பழைய பித்தளை, செம்பு, பீங்கான் சாமான்கள். எல்லாம் என் பிறந்த வீட்டுச் சீர்! அத்தனை பழைசு! பீங்கான் சாமான்களைப் பழைய துணியில் சுற்றிப் பாதுகாப்பாக மேலே வச்சிருக்கேன். ஏதாவது பிடிக்கிறதா பார்!''

ட்ரங்க் பெட்டியில் குடைந்து சகோதரிகள் இருவரும் மூன்று பொருள்களைத் தேர்ந்தெடுத்து, சரோஜாவிடம் வந்தனர். ஒரு சிறு பித்தளை பாவை விளக்கு, ஒரு பீங்கான் நாய், ஒரு சிறு தந்த நகைப் பெட்டி.

பத்மினிதான் முதலில் பேசினாள், ''மாலினி கூச்சப்படறாள், அம்மா... பாவை விளக்கும், பீங்கான் நாயும் அவளுக்குப் பிடிச்சிருக்காம். இந்த நகைப் பெட்டி எனக்குப் பிடிச்சிருக்கு. நாங்கள் எடுத்துக்கலாமா?''

''தாராளமாக! ஸ்டோர் ரூமில் தூங்கறதை விட யாராவது உபயோகப்படுத்தினால் நல்லதுதானே?'' என்றாள் சரோஜா.

''ரொம்ப தாங்க்ஸ் மாமி!'' என்ற மாலினி, ''இன்னொரு விஷயம்!'' என்றாள்.

''என்னம்மா?''

''ட்ரங்க் பெட்டியின் அடியில் ஒரு சின்ன மரப் பெட்டி இருக்கு. அதைத் திறந்து பார்க்க முடியாமல் பூட்டியிருக்கு மாமி...''

''ஓ... அதுவா?'' சரோஜாவின் குரலில் சட்டென்று தடுமாற்றம் தோன்றிற்று. ''அது... ஒண்ணுமில்லை அதில்... ஏதோ உபயோகமில்லாத காகிதங்கள்...''

''அப்படியானால் பூட்டி வைப்பானேன்?''

''ஏதோ பைத்தியக்காரத்தனம்... ஒண்ணுமில்லை அதில்... வேஸ்ட் பேப்பர்..'' சட்டென்று அவள் குரல் ஒடிந்தது. கண்களில் கண்ணீர் நிறைந்து, கட்டுக்கடங்காமல் கன்னங்களில் வழிந்தது.

பத்மினி பதறிப் போய் விட்டாள். ''அம்மா.. அம்மா... என்னம்மா இது?''

மாலினி அவளருகே மண்டியிட்டு அமர்ந்தாள். ''மாமி... நான் ஏதோ நினைவுகளைக் கிளறி விட்டேனா? மன்னித்து விடுங்கள். அந்தப் பெட்டியில் இருப்பது நிச்சயமாக ஏதோ அற்புதமான பொருள்தான். இல்லாவிட்டால் உங்கள் அழுகைக்கு அர்த்தமே இல்லை...''

பத்மினிக்குத் தங்கை மேல் கோபம் வந்தது. ''பேசாமல் இரு மாலினி. பெட்டியில் அம்மாவுடைய பர்ஸனல் கடிதங்கள் இருக்கலாம். துருவித் துருவிக் கேட்கிறாயே, அநாகரிகமாக இல்லை? அவரை அழவிடறது மகா கொடுமை!''

''மாமி! பெட்டியில் பர்ஸனல் கடிதங்களா?'' என்றாள் மாலினி, இந்த முதியவளின் அழுகைக்குக் காரணம் தன் கேள்வியல்ல என்ற நிச்சயத்தோடு.

''இல்லை'' என்றாள் சரோஜா.

''நான் பார்க்கக் கூடாதது ஏதாவது இருக்கிறதா?''

''அப்படி எதுவும் இல்லை...''

''அப்படியானால் பெட்டியின் சாவியைக் கொடுங்கள் மாமி... நான் மறுபடியும் அதைப் பத்திரமாகப் பூட்டி சாவியைத் திருப்பித் தரேன்!''

''வேண்டாம்... அதில் பெரிதாக ஒண்ணுமில்லை... வெறும் வேஸ்ட் பேப்பர்...''

''நான் பார்க்கக் கூடாது என்றால், அது வேறு விஷயம். பார்க்கலாமென்றால், அது உங்கள் கருணை!''

சட்டென்று தீர்மானித்தவளாக, சரோஜா கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந்

தான்.. தன் அலமாரியிலிருந்து மற்றொரு சாவியை எடுத்து வந்து மாலினியிடம் மௌனமாகக் கொடுத்தாள்.

ஸ்டோர் ரூமுக்குச் சென்ற மாலினி, மரப் பெட்டியை அங்கேயே திறக்கவில்லை. அதை எடுத்து வந்து சரோஜாவினருகே அமர்ந்து கொண்டாள். சாவியைப் பொருத்தித் திறந்தாள்.

உள்ளே...

வண்ண ஓவியங்கள். வானளாவிய மலைகள், பச்சை வயல்கள், தெளிந்த ஓடைகள், பூத்துக் குலுங்கும் தோட்டங்கள், வீடு திரும்பும் குடியானவன், தன் மக்களை அணைக்கும் தாய், மழை நீரில் நனையும் வறண்ட பூமி... ஒவ்வொரு சித்திரத்திலும் வலது பக்கம் கீழ் மூலையில் ''சரோஜா'' என்ற கையொப்பம்...

''மாமி... என்ன அற்புதமான சித்திரங்கள்! இதுவா வேஸ்ட் பேப்பர்? இதைத்தான் நான் கடை கடையாகத் தேடினேன். இதில் பாதி அழகு கூட அங்கிருந்த சித்திரங்களில் இல்லை...''

உணர்ச்சிகளில் திணறிய சரோஜா மௌனமாக இருந்தாள்.

''இதில் இரண்டு சித்திரங்கள் எனக்குக் கொடுங்கள் மாமி.. என்னால் இதை விலை கொடுத்து வாங்க முடியாது. விலை மதிப்பில்லாத இதற்கு நான் விலை பேச மாட்டேன்... நீங்கள் கொடுத்தால், நான் ப்ரேம் போட்டு அழகு பார்ப்பேன். பொக்கிஷமாக நினைத்து பாதுகாப்பேன்... நீங்களே தேர்ந்தெடுத்துக் கொடுங்கள், மாமி!''

''நிஜமாகத்தான் நீ சொல்கிறாயா? நிஜமாகவே உனக்கு வேண்டுமா?''

''நிஜமாகத்தான்... இரண்டே இரண்டு போதும். ப்ளீஸ் மாமி! மறந்து விடாதீர்கள்!''

கணப்பொழுதில் சரோஜாவின் குரலில் தன்னம்பிக்கை நிறைந்தது. ''உன் வரவேற்பறையின் சுவர்கள் என்ன நிறம்? ஜன்னல், கதவுகள் என்ன நிறம்?'' என்றாள்.

''சுவர் வெளிர்ப் பச்சை... ஜன்னல், கதவுகள் டார்க் ப்ரௌன்!''

''அப்படியானால் இந்த இரண்டும் சரியாயிருக்கும்!'' சரோஜா இரண்டு ஓவியங்களைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்தாள்.

''எந்தக் கலர் ப்ரேம் அழகாக இருக்கும்?''

''லைட் பிரௌன்!''

இத்தனை நேரம் தன் மாமியாரை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்த பத்மினி, ''அம்மா! நீங்கள் சிறந்த ஆர்ட்டிஸ்ட் என்கிறது எனக்கு இத்தனை நாள் தெரியவே தெரியாதே! உங்கள் மகன் மேல் எனக்குக் கோபம் கோபமாக வருது... நீங்கள் எப்படியெல்லாம் கஷ்டப்பட்டு அவரை முன்னுக்குக் கொண்டு வந்தீர்கள் என்கிறதைச் சொன்னவர், உங்கள் டாலெண்ட் பற்றிச் சொல்லவேயில்லை. அக்கிரமத்தைப் பாருங்கள்!'' என்றாள்.

''அவனுக்கு அதெல்லாம் ஞாபகம் இருக்காது, பத்மினி.. நான் பெயிண்ட் பண்றதை விட்டு பல வருஷங்கள் ஆகிறது...''

''அதுதான் தப்பு, அம்மா... இத்தனை திறமை இருக்கிற போது அதை மூடி வைக்கிறது அநியாயம்!''

''யாருக்கு?''

''உங்கள் குடும்பத்துக்கு... உங்கள் சிறப்பில் எங்களுக்குப் பங்கு கிடையாதா? நீங்கள் மறுபடியும் சித்திரம் தீட்ட ஆரம்பிக்கணும் அம்மா... உங்கள் பேரக் குழந்தைகளுக்குக் கற்றுத் தரணும். உங்களை நினைக்கும்போதே எனக்கு எவ்வளவு பெருமையாயிருக்கு தெரியுமா?'' என்றவள் தன் தங்கையை நோக்கி, ''என் மாமியார் எத்தனை டாலெண்ட்டட் பார்த்தாயா மாலினி?'' என்றாள்.

சரோஜா கண்களை மூடிக் கொண்டாள். முன்பு ''யூஸ்லெஸ்'' என்று சொன்னவளே இப்போது ''டாலெண்ட்டட்'' என்கிறாள். மாட்டுப் பெண் வாய் நிறைய போலியில்லாமல் புகழ்வதுதான் மாமியாரின் சிறப்புக்கு நிஜமான அங்கீகாரம் என்று நினைத்தாளே, இதோ அந்தப் புகழ்ச்சி!

அந்தக் கணத்தில் சரோஜாவுக்கு ஒரு ஞானோதயம் பிறந்தது. தன்னுள் இருந்த இன்ப ஊற்று வற்றி விட்டதாக நினைத்தாள். அது தவறு. வற்றியிருந்தால் அவளுக்கு இப்போது இத்தனை சந்தோஷமாக இருக்குமா?




சாதாரணமாக எல்லோரும் கடலைப் பருப்பு பூரணம் வைத்துத்தான் போளி செய்வார்கள். பயத்தம்பருப்பில் செய்து பாருங்கள். வேக விடுவதற்குமுன், சிவக்க வறுக்க வேண்டும். அபாரமான ருசி கிடைக்கும்.

- பார்வதி

# மங்கையர் மலர் & வெல்வெட் ஷாம்பு & கங்காஸ்நான் இணைந்து வழங்கிய சேலத்தில் மகளிர் விழா!

வெல்வெட் ஷாம்பு நிறுவனத்தினர், பாரி, பாலசுமணி, மனம்சேர சந்திரகாசன், சுகந்தி



மகளிர் விழாவை நான்கு தடவை நடத்திய பிறகும் ஐந்தாவது முறை சேலத்தில் நடத்த ஏற்பாடு செய்யும் போது குறு குறுப்புதான். எப்படி ரிசல்ட் இருக்கும்? திருச்சியைப் போல ஆயிரக்கணக்கில் வருவார்களா? நாடகப் போட்டிக்கு நிறைய சங்கங்கள் வருமா?

ஒவ்வொரு மகளிர் விழாவிலும் சில விஷயங்களைக் கற்றுக் கொள்கிறோம். திருச்சியில் மாறுவேடப் போட்டிக்குப் பதிவு நடந்த போது பயங்கர டென்ஷன் வாசகிகளுக்கும், எங்களுக்கும். அந்த அனுபவத்தில் இந்த முறை அவரவரே சீட்டு எழுதிக் கொண்டு வர வேண்டும் என்றோம். அதே போல மார்கழி மாதம் என்பதில் கோலப் போட்டி நடத்த ஆசை. அதற்கு முதல் நாளே பதிவு செய்து விடலாம், மாறுவேடப் போட்டிப் பதிவோடு மோத வேண்டாம் என்று முடிவு செய்தோம். இப்படி அனுபவங்கள் பாடம் கற்றுத் தர, கற்றுத் தர நாம் நம்மை தயார்ப்படுத்திக் கொள்கிறோம்.

ஆனால் வாசகிகள்...? நமக்கும் முன்னாலே தயார்ப்படுத்திக் கொள்கிறார்களே, என்ன செய்ய? கோலப் போட்டிக்குப் பதிவு 7-ந் தேதி காலை பதினோரு மணிக்கு ஆரம்பம். ஆனால் எட்டு மணிக்கு முக்கால் வாசி பேர் ஆஜர். மறுநாள் மாறுவேடப் போட்டிக்கு ஒன்பது மணிக்குப் பதிவு செய்து கொள்கிறோம் என்றால்,

''எங்க வீட்ல முன்னாடியே போயிடுங்க, முதல் நூறு பேருக்குத்தானாம். லேட்டா போனால் இடம் கிடைக்காதுன்னு சொல்லி அனுப்பிச்சாங்க'' என்று காலை 6:30 மணிக்கு மண்டப வாசலில் இரண்டு ஆண்கள் கையில் சீட்டோடு நிற்கிறார்கள்! பதிவு செய்த ஜகதீசன் திணறிப் போனார். இப்படி நம்மை வாசகிகள் திணறடித்த சம்பவங்கள் நிறைய சுவையாக இருந்தன.

புத்தம்புது டி.வி.என். கல்யாண மண்டபத்தை டாக்டர். சிவப்ரகாசமும், அவருடைய மனைவியும் நமக்காக மூன்று நாட்கள் விட்டுக் கொடுத்து விட்டார்கள். மங்கையர் மலர் அலுவலர்களும், சேலம் ஏஜென்ட் சந்துரு, தருமபுரி ஏஜென்ட் மணி எல்லோரும் புகுந்து புறப்பட்டுக் கொண்டிருந்தார்கள். டைனிங் ஹாலை கோல அரங்கமாக்கி இரவு இரண்டு மணிவரை கோலம் போடுவதற்கான கட்டங்களை போட்டுக் கொண்டிருந்தார்கள்! மணியின் நண்பர் வங்கி அலுவலாளர் அசோகனும், இளைஞர் குருவும், நாகராஜனும் விழா முழுக்க ஒத்துழைத்தார்கள்.

நமக்குக் கோல்டன் ஸ்கொயர் அசோசியேஷனுக்காக அறிமுகமான ஸ்ரீமதி ஜகன்னாதன் இந்த விழா முழுக்க நிறைய உதவிகள் செய்தார். அவருடைய தோழிகள் உமா பழனியப்பன், லோசனா போன்றவர்களை எப்படி மறக்க முடியும்? ஸ்ரீமதியின் மகள் நீரஜாவும் அவருடைய தோழி சுபாவும் பம்பரமாகச் சுழன்றார்கள். இவர்கள் இத்தனை பேரின் உதவி இல்லாமல் விழா எப்படி வெற்றிகரமாக நடந்திருக்கும்?



இரண்டாம் பரிசு

சரி, விழாவன்று - காலங்கார்த்தாலே ஆறரை மணிக்குப் பதிவு செய்ய வந்து விட்டார்களா? அப்புறம் ஜேஜேதான். முதல் நாள் கோலப் போட்டிக்குப் பதிவு செய்த வர்கள் கலர்ப் பொடி கோலமும் கையுமாகக் குவிய ஆரம்பித்து விட்டார்கள். ஒரு வீரபாண்டிய கட்டபொம்மன் (பொடிசு!) அமைதியாக முதல் சேரில் வந்து உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருந்தான். இன்னொரு பாரதி தரையில் பாரதியார் கவிதைகளோடு அமர்ந் திருந்தான். அத்தனை குழந்தைகளும் சமர்த் தாக இருந்தது ஆச்சர்யமான விஷயம்.

கோலப் போட்டி பத்து மணிக்கு ஆரம் பித்தது. என்ன ஆர்வம், என்ன சந்தேகம்? வெள்ளை மாவில் போடலாமா, புள்ளி வைக்கலாமா? கோலக் கட்டம் முழுவதும் நிரப்பணுமா, ப்ளெயினா விடலாமா? என் னென்ன சந்தேகங்கள் எல்லாம் வரு கிறது...?

நடுவர்களாக சென்னையில் இருந்து டீ.வி. மனைமாட்சித் தயாரிப்பாளர் ஆண் டாள் பிரியதர்சினியும் சேலத்தில் கல்லூரிப் பேராசிரியரான மஞ்சுளா ஆதிநாராயண னும் வந்திருந்தார்கள்.

நாங்கள் என்ன மெட்ராஸுக்கு இளப் பமா எனச் சவால் விடும் வகையில் கோலம் போட்டிருந்தார்கள் சேலத்துப் பெண்மணி கள். சௌகர்யமாகக் கீழே மொசைக் தரை. பலரும் கோலம் போட்டு சூச்சி வைத்து நுணுக்கமாக டிசைன் செய்திருந்தார்கள். அதிலும் முதல் பரிசுக் கோலம் அற்புதம். அதன் வண்ணமும், நுணுக்க வேலைப் பாடும், மேலே சிறிய விளக்குகள் வைத்து அலங்கரித்திருந்த விதமும் மிக நேர்த்தியாக இருந்தது. இன்னொரு கோலத்தில் கண்ண னின் விழிகளில் தெறித்த குழந்தைத்தன மும், குறும்பும்... தோகை விரித்த மயில், பஞ்சுப் பிள்ளையார், நீக்குச்சி கோலம்... நிறைய. அங்கே தரையில் வண்ணங்களால் கவிதை இயற்றியிருந்தார்கள் பெண்கள்!

நடுவர்கள் கோலங்களைப் பார்க்கும் போதே மாறுவேடப் போட்டி ஆரம்பித்தது. வீரபாண்டிய கட்டபொம்மன், மல்யுத்த வீராங்கனைகள், பாரதியார், காந்தி தாத்தா, ஜெயலலிதா... நிறைய... முயல் குட்டியாக வேடமணிந்த சிறுவன் தத்தித் தத்தி நிஜமாகவே முயல்குட்டி போல் ஓடினான். பரமாச்சாரியார் போல வேடமணிந்த சிறு வன் பேசாமல் மேடைக்கு வந்து அருளாசி வழங்கி விட்டு மௌனமாகத் திரும்பி





மூன்றாம் பரிசு

முதல் பரிசு

னான். இவன் ஏதோ டயலாக் பேசப் போகி றான் என எதிர்பார்த்த மக்கள் சிரித்தனர். ஒவ்வொரு குழந்தையின் நடிப்பைப் பற்றி யும் வர்ணித்துக் கொண்டிருந்த ரமேஷ்,

''பரமாச்சார்யார் போலவே இவனும் மௌனமாகி விட்டான்!''

என்றார். ஆனால் அந்த வார்த்தை உண் மையானதை இரவு கேள்விப்பட்ட போது அழுது விட்டோம். மாறுவேடப் போட் டிக்கு நடுவராகச் சென்னையில் இருந்து 'ஆவின்' பொது மக்கள் தொடர்பு அதிகாரி சிவகாமிநாதன் வந்திருந்தார். திருமதி சுகந்தி சுதர்சனம் மற்றொரு நடுவர். (இவர் கோலம் போடுவதிலும் வல்லவராம்! அப்புறமாக சுகந்தியின் கோல போட்டோ ஆல்பத்தைப் பார்த்துப் பிரமித்து விட்டேன். நகை என் றால்... அக்க... நகை போலவே ரங்கோலி போட்டிருக் கிறார். இவர் நகைக் கடைக் காரர் என்பதாலா? நிசமாவே இது ரங்கோ லிப் பொடி தானா எனக் கேட்ட போது அமைதியாகச் சிரித்தார். நிறைகுடம்!)

கண்மணியாக கண்கள் சிவக்க அனல் கக்கிச் சென்ற சிறுமிக்கு முதல் பரிசு கிடைக் கும் என்று நினைத்தோம். அப்புறம் நடுவர் களின் மார்க்குகளைப் பார்த்து உறுதிப் படுத்திக் கொண்டோம். சிவப்புப் புடவை கட்டிக் கொண்டு நடித்த அந்தச் சிறுமியின் நடிப்பு அற்புதம்!அதற்கப்புறம் நடுவில் இடைவெளி. மண்டபத்திலேயே சாரதி ஒரு தற்காலிகக் கேண்டீனைத் திறந்திருந்தார். பசி வேளைக்கு எல்லோரும் புகுந்து புறப் பட்டார்கள்.

அப்புறம் ஆரோக்கியப் போட்டி. டி.வி. என். கல்யாண மண்டபம் நிரம்பி வழிந்தது. பெண்கள் அனைவருக்கும் ஆரோக்கியப்

நாடகப் போட்டி பரிசளிப்பு



போட்டி கேள்வி கேட்க காகிதங்கள் விநியோகிக்கப்பட்டன. வெல்வெட் ஷாம்பு நிறுவனத்தினர் வந்திருந்த அத்தனை பேருக்கும் வெல்வெட் ஷாம்பு 'சாஷே' பாக்கெட்டுகளை அளித்தனர். அதோடு மங்களகரமாக கோபுரம் பூசு மஞ்சள் தூள் டப்பி ஒன்றும் அனைவருக்கும் விநியோகிக்கப்பட்டது. அதன் சேலம் விநியோகஸ்தர் சரவணா ஸ்டோர்ஸ் உரிமையாளர் நடராஜன் ரொம்ப ஆர்வமாக முதல் நாள் வந்து ''நான் மஞ்சள் பவுடர் விநியோகிக்கலாமா?'' என எங்களைப் பார்த்துக் கேட்டார். அதே போல கோலம் போட்டவர்களுக்கு ரங்கோலிப் பவுடரும் கொடுத்தார். நாங்கள் மட்டும் சளைத்தவர்களா என மங்களம் பூசு மஞ்சள் தூள், ரீகல் சொட்டு நீலம் இரண்டையும் சேலம் விநியோகஸ்தர்களும் 'சாஷே' பாக்கெட்டில் விநியோகித்தார்கள்.

மங்களகரமாக மஞ்சளைப் பெற்றுக் கொண்ட பெண்கள் கேள்விகளுக்கு இடையிடையே எழுந்த சிரிப்பலைகளோடு பதில் எழுதி முடித்தார்கள்.

மூன்று மணிக்கு நாடகப் போட்டி. எட்டு மகளிர் மன்றங்கள் கலந்து கொண்டன. ஸ்ரீ வாசவி மஹிளா சமாஜம், இண்டியன் வுமன்ஸ் அசோசியேஷன், கெம்ப்ளாஸ்ட், லோடஸ், அகரம், கம்யூனிடி சர்வீஸ் லிங்க், சுப்ரமண்ய நகர் என அனை

**கோலப் போட்டியில் பரிசு பெற்றவர்கள் :**

முதல் பரிசு : திருமதி லலிதா ராஜு, சேலம் - 1.
இரண்டாம் பரிசு : திருமதி. மீரா வாசுதேவன், சேலம் - 1.
மூன்றாம் பரிசு : திருமதி. இந்திரா முருகேசன். சேலம் - 4.

**ஆறுதல் பரிசு :**

1. கோகிலா பாலசுப்ரமணியம்
2. சாந்தி ராஜேந்திரன்,
3. ஆர். மாலதி,
4. சி. பானுமதி,
5. ஜி. மலர்விழி.

**மாறுவேடப் போட்டி :**

முதல் பரிசு : செல்வி. ஹரிணி
இரண்டாம் பரிசு : செல்வி. திவ்யா, செல்வி. வித்யா.
மூன்றாம் பரிசு : எல். என். ஹரிஷ்

**ஆறுதல் பரிசு :**

1. செல்வி. அனுஷா,
2. எஸ். ப்ரசாந்த்
4. பி. லதா,
3. ஐஸ்வர்யா,
5. ஆ. ஸ்ரீதுர்கா.

**ஆரோக்கியப் போட்டி :**

முதல் பரிசு : திருமதி. தேவி அரசு, சேலம் - 2.
இரண்டாம் பரிசு : திருமதி. மீனா சேது, சேலம் - 16.
மூன்றாம் பரிசு : திருமதி. சுப்புரத்தினம், சேலம் - 4.

**ஆறுதல் பரிசு :**

1. சக்குபாய்,
2. டி. ஆர். ஜெயலட்சுமி,
3. கௌசல்யா ரமணி,
4. ஜே. பாமா,
5. சகுந்தலா.

**நாடகப் போட்டி :**

முதல் பரிசு - கெம்ப்ளாஸ்ட் மகளிர் மன்றம்
இரண்டாம் பரிசு - கம்யூனிடி சர்வீஸ் சென்டர்
மூன்றாம் பரிசு - ஃப்ரெண்ட்ஸ் கிளப்



ஆரோக்கியப் போட்டிக்குப் பதிவு

வரும் சக்கை போடு போட்டார்கள். அகரம் மகளிர் மன்ற உறுப்பினர்கள் அப்புறம் கடிதம் எழுதி இருந்தது மனதை நெகிழ் வித்தது! 'எங்களுக்கு இது ஒரு புது முயற்சி. நாங்க பரிசு வாங்கணும்னு நினைக்க வில்லை. ஆயிரக்கணக்கில் பெண்கள் கூடி யிருந்த சபையில் நாங்கள் மேடையேறியதே எங்களுக்கு மகிழ்ச்சிதான். இப்படி ஒரு அற்புதமான விழா நடக்க நாங்கள் பங்கேற் றது எங்களுக்குக் கிடைத்த மகத்தான வாய்ப்பு' என்று பாராட்டியிருந்தார்கள்.

இண்டியன் வுமன்ஸ் அசோசியேஷ னில் ஒரு கல்லூரி மாணவி, அவள் பாட்டி, தாத்தா நடிப்பால் அசத்தினார்கள். ஒரு வேளை பிரசார நெடியாக நடுவர்களுக்கு பட்டதோ என்னவோ? ஓரிரு மார்க் வித்தி யாசத்தில் இயல்பாக நடித்த கம்யூனிடி சர்வீஸ் கில்ட் பரிசைத் தட்டிக் கொண்டு போனது. நடுவர்களாக டி.வி. நிலைய நிகழ்ச்சித் தயாரிப்பாளர் கவிஞர் பால ரமணியும், கல்லூரிப் பேராசிரியர் ரேவதி சாமுவேலும் விளங்கினார்கள். அழகாகக் கச்சிதமாகத் தீர்ப்பு எழுதிக் கையெழுத்தும் போட்டுக் கையில் கொடுத்து விட்டார் பால ரமணி! அனுபவம் வாய்ந்தவர் அல்லவா?

காலையில் இருந்து கூடியிருந்த மகளி ரும், குழந்தைகளும் ஆவலோடு எதிர் பார்த்த பரிசளிப்பு விழா நேரம் நெருங் கியது. சேலம் பக்கத்தில் மிகப் பெரிய இக் கட்டான நிலை என்பதால் எஸ்பி வராமல் போக, கடுமையான வயிற்று வலியால் கலெக்டர் வரவில்லை. இருவருமே தொலைபேசியில் தகவல் கூறினார்கள். கலெக்டர் தனக்கு அடுத்தபடியாக இருக்கும் கூடுதல் கலெக்டர் திரு. அதுல்ய மிஸ்ரா ஐ.ஏ.எஸ். அவர்களை விழாவில் பங்கேற் கச் செய்தார்.

ஆனால் மண்டபம் வழிந்த கூட்டமோ உற்சாகத்துடன் பரிசு அறிவிப்புக்காகத்தான் காத்திருந்தார்கள். துணை கலெக்டர் (பயிற்சி) சுகந்தி, பேராசிரியர் மன்டோதரி கணேஷ், பேச்சாளர் மனம் சேர சந்திரகாசன் அனைவரும் அற்புதமாகப் பேசினார்கள். முதல் மூன்று பரிசு பெற்ற குழந்தை களுக்குக் கூடுதல் கலெக்டர் பரிசளித்து விட்டுச் செல்ல சுகந்தி மற்றவர்களுக்குப் பரிசளித்தார். எட்டு மணி வரை நீடித்தது கூட்டம்.

காலையிலிருந்து கோல அரங்கை நாங் கள் பார்க்க வேண்டும் எனப் பிய்த்தெடுத் தனர் ஆர்வம் மிக்க பெண்கள். கோலப் போட்டியில் பரிசு பெற்றவர்களை அறி வித்து விட்டு விழா முடிந்தவுடன் கோல அரங்கைத் திறந்து விட்டோம். உற்சாகமாக உள்ளே பாய்ந்தது மக்கள் கூட்டம். மறுநாள் கூட சாரிசாரியாகப் பெண்கள் வந்து பார்த்த வண்ணம் இருந்தார்கள்.

மற்றொரு வெற்றிகரமான விழா, அன் பான தோழிகளைப் பெற்றோம் என்ற சந்தோஷத்தோடு சேலம் நகரிலிருந்து புறப் பட்டோம்.

– மஞ்சுளா ரமேஷ்

புகைப்படங்கள் :

விடிவெள்ளி ஆறுமுகம்

கோலப் போட்டி, வினாடி - வினா போட்டியில் பரிசு பெற்றவர்கள்....



### நடன அடைவுகள்

நடனத்தில் வருகின்ற கால் அடைவுகள் பற்றி நாட்யாசார்யா ஸ்ரீ எஸ். பால சந்த்ரராஜு விரிவாக எழுதியுள்ளார். நடனம் தெரியாதவர்கள் கூட சுவாரஸ்யமாகப் பல செய்திகளைத் தெரிந்து கொள்ள லாம்.

விலை ரூ. 60.00

*(செவரஞ்சனி பப்ளிகேஷன்ஸ், 12ஏ, சக்திநகர் 2வது தெரு, சென்னை - 94.)*

### தோரணத்து மாவிலைகள்

சுஜாதாவின் கட்டுரைத் தொகுப்பு. அவருடனான சுவாரஸ்யமான பேட்டியும் இடம் பெற்றுள்ளது.

விலை ரூ. 26.00

### கணையாழியின் கடைசிப் பக்கங்கள்

ஆசிரியர் : சுஜாதா

விலை ரூ. 15.00

### திக்கற்ற இரு குழந்தைகள்

பண்டித நடேச சாஸ்திரியார் சென்ற நூற்றாண்டில் எழுதிய நாவல். நடை ஆச்சர்யப்படத்தக்க வகையில் உள்ளது.

விலை ரூ. 40.00

*(மூன்றும் - குமரிப் பதிப்பகம், 8, நீலா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 611 001.)*

### ஊருக்குத் தெரியாத உறவு

நெல்லை செல்வத்தின் நாவல் இந்திய ராணுவ வீரர்களின் வாழ்வை அடிப்படையாக வைத்து எழுதப்பட்டது.

விலை ரூ. 25.00

*(செல்ல பாப்பா பதிப்பகம், 6, கஸ்தூரி பாய் நகர், 4 வது தெரு, அனகாபுத்தூர், சென்னை - 70.)*

### உங்கள் பெயரின்படி வெற்றிதரும் அதிர்ஷ்ட நேரங்கள்

ஆசிரியர் : விட்டலாபுரம் ராஜன்

விலை ரூ. 10.00

### மனோசக்தியின் ரகசியம்

மனோசக்தியின் மூலம் எப்பேர்ப்பட்ட வெற்றியையும் அடையலாம், மனோவசியத்தின் மூலம் எதையும் சாதிக்கலாம் என்கிறார் முல்லை பி. எல். முத்தையா.

விலை ரூ. 14.00

### புதுவித சைவ சமையல்

தொண்ணூற்றியெட்டு வகை சமையல் குறிப்புகள் சூப், பாயசம், குழம்பு போன்றவை. ஆசிரியர் : பவானி

விலை ரூ. 16.00

### கிராம வளர்ச்சித் தொழில்

கிராமங்களில் குங்குமம், ஊறுகாய், சர்பத் போன்றவை தயாரிக்கலாம் என அதன் செய்முறைகளையும் கூறுகிறார் கே. ஜே. ஜோதிமணி

விலை ரூ. 32.00

*(நான்கும் - கஸ்தூரி பப்ளிகேஷன்ஸ், 33, பத்திரியன் தெரு, (முதல் மாடி), சென்னை - 600 001.)*

### புவனாவின் ஆரோக்கிய அழகுக்கலை முறைகள்

மேனிக்யூர், பெடிக்யூர், உடற்பயிற்சி, புருவ அழகு போன்ற பல அம்சங்களை விவரிக்கிறார் புவனா.

விலை ரூ. 12.00

### அலங்காநல்லூர் அப்புசாமி

வழக்கம் போல அப்புசாமியின் நகைச்சுவையான வீராவேசமும், சீதாப்பாட்டியின் கம்பீரமான நிதானமுமாக பாக்கியம் ராமசாமி வெளுத்து வாங்குகிறார்.

விலை ரூ. 16.00



**உலகின் தலைசிறந்த நூலகங்களும், விவரங்களும்**

தொகுப்பு : மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு.

(மூன்றும் - மணிமேகலைப் பிரசுரம், 4, தணிகாசலம் சாலை, தி. நகர், சென்னை - 600 017.)

**மாருதி கவசம்**

தமிழில் பாமாலைகளாக உள்ளன. கவியாக்கம் : புலவர் சுப. துளசி

விலை ரூ. 4.00

**ஹரி கவசம்**

விலை ரூ. 2.00

**புவனேஸ்வரி கவசம்**

தமிழில் கவிதைகள் - சாரதிதாசன்

விலை ரூ. 2.00

**மாங்காடு அம்மன் தோத்திரம்**

கவிதைகள் - சாரதிதாசன்

விலை ரூ. 3.00

(நான்கும் மதி நிலையம், 45, செல்லப் பிள்ளையார் கோவில் தெரு, சென்னை - 600 014.)

**ராஜேந்திர சோழ உலா**

எழுத்தாளர் சுஜாதா விஜயராகவனின் வெளிநாட்டுப் பயணங்களைப் பற்றிய கட்டுரைகள்.

விலை ரூ. 20.00

**தெய்வ வாக்கின் தேன்துளிகள்**

மகா பெரியவாள் பரமாச்சார்யார் அருளிய தேன்மொழிகள். தொகுப்பு : வி. பாலகிருஷ்ணன்.

விலை ரூ. 15.00

**வேர்களைத் தேடி....**

வாஸந்தியின் நாவல். இன்றைய பெண்ணின் மனவெழுச்சிகளைச் சமகால உணர்வோடு கூறுகிறார்.

விலை ரூ. 24.00

**ஆசையால் ஆபத்து**

முன்னாள் காவல் துறை அதிகாரி பொன் பரமகுரு இருபது உண்மைக் குற்றங்களைக் காரணங்களோடு விளக்குகிறார்.

விலை ரூ. 18.00

(நான்கும் - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 600 017.)

**ஆனந்தமளிக்கும் ஸ்ரீ ஆறுமுக வழிபாடு**

ஆறுபடை புராணக் கதைகளோடு முக்கியமான தோத்திரங்களும் அடங்கும்.

விலை ரூ. 15.00

(அருள்மிகு அம்மன் பதிப்பகம், 8, கங்கையம்மன் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை - 600 014.)

**மாணவர்களுக்கான மணித்தமிழ் இலக்கணம்**

ஆசிரியர் - அ. கு. முரளிதரன். உரையாடல் மூலம் எளிமையாகப் புரிய வைக்கப்படுகிறது.

விலை ரூ. 25.00

**திருமணத்துக்குரிய 10 பொருத்தங்கள் பார்ப்பது எப்படி?**

ஆசிரியர் : ஸ்வாமி அபயானந்தாஜி தாஸ்

விலை ரூ. 25.00

**பாரத நாட்டு இசைக் கருவிகள்**

விளக்கப் படங்களுடன் எழுதுபவர் எஸ். அநுஸூயா.

விலை ரூ. 20.00

(மூன்றும் - விசாலாட்சி நிலையம் - 32, அம்மையப்பன் தெரு, இராயப்பேட்டை, சென்னை - 600 014.)

*நன்றி எவ்வளவு மில்லிகிராம்?*

**சராசரியாக ஒவ்வொரு மனிதனும் ஆண்டுக்கு 2.4 கிலோ உப்பைத் தனது உணவில் சேர்த்துக் கொள்கிறான். நன்றியை மில்லிகிராம் கணக்கில் வெளிப்படுத்தக் கூட யோசிக்கிறான்!**

**- அங்க்கே**





'டயட்' சிறப்பிதழில் ஒரு கட்டுரையில் கணவன்மார்கள் இருக்க வேண்டிய எடை ஒரு அட்டவணையில் பவுண்டு கணக்கில் கொடுக்கப்பட்டிருந்தது. உயரத்துக்கேற்ப பெண்கள் இருக்க வேண்டிய எடையைக் கிலோ அளவில் (இம்முறை இயந்திரங்கள்தானே இப்பொழுது புழக்கத்தில் உள்ளன?) காட்டும் ஒரு அட்டவணை இங்கு கொடுக்கப்பட்டுள்ளது.

# 80 நிமிடம்

# துணி துவைக்கணும்

தவிர, பெரும்பாலான பெண்கள் 'டயட்' என்று தங்களை மிகவும் சிரமப்படுத்திக் கொள்ளாமல் சில ஆரோக்கியமான விதிகளைக் கடைப்பிடித்து, கூடிய வரை தங்கள் எடையைக் கட்டுப்படுத்திக் கொள்ள விரும்புகிறவர்கள்தானே! பல வகையான உணவுகளையும் சாப்பிடலாம், ஆனால் அதனதன் கலோரி அளவை அறிந்து அதற்கேற்ப (ஒவ்வொரு வகை உணவின்) அளவை மட்டும் கட்டுப்படுத்திக் கொள்ளலாம் என்றால் தான் அவர்களுக்கு மகிழ்ச்சியாக இருக்கும்.

தவிர ஒவ்வொருவரும் அன்றாடம் செய்யும் வேலைகளால் எவ்வளவு கலோரிகளை இழக்கிறார்கள் (குடும்பத்திலேயே ஆளுக்கு ஆள் இது வித்தியாசப்படும்), கூடுதலாக எந்தப் பயிற்சியை எவ்வளவு நேரம் செய்தால் போதும் என்பதையும் தாங்களே கணக்கிட்டுக் கொள்ளும்படியாக இருந்தால் எவ்வளவு வசதியாக இருக்கும்? இதற்கான விவரங்களும், பட்டியல்களும் கீழே தரப்பட்டுள்ளன.

## பெண்கள் உயரத்துக்கேற்ப இருக்க வேண்டிய எடையைக் காட்டும் அட்டவணை :

*(குறிப்பு : ஆண்களுக்கு ஒவ்வொரு அளவுடனும் 3 கிலோவைக் கூட்டிக் கொள்ளவும்)*

| உயரம் செ.மீட்டரில் | அடி. அங்குலம் | எடை கிலோ கணக்கில் |
|---|---|---|
| 152 | 5-0 | $50\frac{1}{2}$ முதல் $54\frac{1}{2}$ வரை |
| 154 | 5-1 | $51\frac{1}{2}$ முதல் $55\frac{1}{2}$ வரை |
| 157 | 5-2 | 53 முதல் $56\frac{1}{2}$ வரை |
| 159 | 5-3 | $54\frac{1}{2}$ முதல் 58 வரை |
| 162 | 5-4 | $56\frac{1}{2}$ முதல் 60 வரை |
| 165 | 5-5 | $57\frac{1}{2}$ முதல் 61 வரை |
| 167 | 5-6 | 59 முதல் $63\frac{1}{2}$ வரை |
| 170 | 5-7 | 61 முதல் $65\frac{1}{2}$ வரை |
| 172 | 5-8 | 62 முதல் $66\frac{1}{2}$ வரை |
| 175 | 5-9 | 64 முதல் $68\frac{1}{2}$ வரை |
| 177 | 5-10 | 66 முதல் $70\frac{1}{2}$ வரை |
| 180 | 5-11 | 67 முதல் $71\frac{1}{2}$ வரை |

ஒரு நாளைக்கு ஒருவருக்கு எவ்வளவு கலோரி உணவு தேவை என்பது அவரவர் ஈடுபட வேண்டிய வேலைகளின் தன்மையையும் அளவையும் பொருத்துதான் நிர்ணயிக்கப்பட வேண்டும்.

முதலில் அவர் (ஆணானாலும், பெண்ணானாலும்) இருக்க வேண்டிய எடையின் அளவை (தற்போது இருக்கும் எடை அல்ல) அறிந்து கொள்ளவும்.

i) அதிகம் ஓடியாடாமல், (மிகுதியான தேகப் பிரயாசை தேவைப்படாத) வேலை செய்பவரானால், அந்த எடை அளவை 15 ஆல் பெருக்கினால், அவர் ஒரு நாளைக்கு உட்கொள்ள வேண்டிய உணவைக் கலோரிகள் அளவில் அறியலாம். உதாரணமாக, அட்டவணைப்படி அவர் இருக்க வேண்டிய எடை 60 கிலோ என்றால், ஒரு நாளைக்கு உட்கொள்ள வேண்டிய உணவு 60 X 15 = 900 கலோரி ஆகும்.

ii) கொஞ்சமாக அலைந்து, திரிந்து வேலை செய்பவரானால் எடையை 20ஆல் பெருக்கவும்.

iii) கடின உழைப்பாளியானால் 25 அல்லது 30 ஆல் பெருக்கவும்.

இல்லத்தரசிகள் அல்லது அலுவலகங்களில் பணியாற்றுபவர்களைப் பொருத்தவரை பெரும்பாலும் 20ஆல் பெருக்குவதே சரி.

இனி நாம் அன்றாடம் உண்ணும் பலவகை உணவுகளால் எவ்வளவு கலோரி சக்தியைப் பெறுகிறோம் என்பதைத் தெரிந்து கொள்வோம் :

200 கலோரி சக்தியைப் பெறப் பின்வருபவற்றுள் ஏதாவது ஒரு உணவுப் பண்டத்தைச் சாப்பிட வேண்டும்.

மைசூர் பாக், லட்டு, அல்லது ஜிலேபி அரைத்துண்டு மட்டும் பாயசம் அரை டம்ளர்.

### நாயும் பூனையும் பெறுகிற அதிர்ஷ்டம்!



பிரான்ஸ் தேசத்தில் மூன்றரைக் கோடி வளர்ப்புப் பிராணிகள் - அந்த நாட்டுக் குழந்தைகளைப் போல் இரண்டு மடங்கு - 55 சதவீதம் வீடுகளில் வளர்க்கப்படுகின்றன. பாரீஸில் மட்டும் 230 மிருக வைத்தியர்கள். 40 மருத்துவமனைகள். குழந்தையைப் போலவே கவனித்துக் கொள்ளும் ஆயாக்கள் ஒரு மணி நேரத்துக்கு ஒரு பிராங் வாங்குகிறார்கள்.

- இருகூரான்

## டிபன் : பிராணவாயு!

ஸீ வியூ, பார்க் வியூ, லேக் வியூ என்கிற மாதிரி இமயமலை மீது "எவரெஸ்ட் வியூ" ஹோட்டல் ஒன்று உள்ளது. இதுதான் உலகிலேயே உயரமான ஹோட்டல். (கடல் மட்டத்திலிருந்து 3876 மீட்டர் உயரம்.) அறை வாடகை ஒரு நாளைக்கு 5000 ரூபாய்! தங்கியிருப்பவர்களுக்கு அடிக்கடி மூச்சுத் திணறலும், தலைவலியும், தூக்கமின்மையும் வருவதாகப் புகார் சொல்லப்பட்ட பிறகு - அறைகளில் அடிக்கடி டிபன் வருகிற மாதிரி பிராண வாயு சிலிண்டர்கள் கொண்டு வந்து தரப்படுகின்றன. பனி மூடிய எவரெஸ்ட் சிகரத்திற்கு எதிரில் தங்கியிருப்பது என்றால் சும்மாவா? காண அரிய காட்சி ஆயிற்றே!

– அய்க்கே



அரிசி, கோதுமை, கேழ்வரகு சேமியா அல்லது சோளம் சமைத்த பின் - 200 கிராம். (ஓட்டலில் அளவு சாப்பாட்டுக்கு ஒரு சிறிய கப் அளவு சாதம் பரிமாறுகிறார்களே, அதன் எடை சுமார் 200 கிராம்), சாம்பார் - 2 கப்.

காப்பி, டீ அல்லது பால் (சர்க்கரையின்றி) - 2 கப்கள். (வேளைக்கு ஒன்று வீதம் சாப்பிடலாம்)

கோழி அல்லது மீன் கறி ஒரு துண்டு (சுமார் 70 கிராம்)

தயிர் ஒரு கப் (மோர் - தயாரிக்கப் பயன்படுத்திய தயிரின் அளவுகேற்ப)

இட்லி - 3

தோசை அல்லது சப்பாத்தி - 2

பூரி அல்லது வடை - 3

பொங்கல் அல்லது உப்புமா - $1\frac{1}{2}$ கப்

ரொட்டி - 80 கிராம்

நல்லெண்ணெய் - 6 டீஸ்பூன்.

அடுத்து நாம் அன்றாடம் செலவழிக்கும் கலோரிகளின் அளவுகளையும் தெரிந்து கொள்வோமா?

200 கலோரி சக்தியைச் செலவழிக்க (எரிக்க) நாம் செய்ய வேண்டிய வேலைகள்.

ஓடுவது 12 நிமிடங்கள்.

நடத்தல் 60 நிமிடங்கள்

நீந்துதல் 30 நிமிடங்கள்

சைக்கிள் ஓட்டுவது (8 கி. மீட்டர் வேகத்தில்) 50 நிமிடங்கள்

தோட்ட வேலை (8 கி. மீட்டர் வேகத்தில்) 40 நிமிடங்கள்

துணி துவைத்தல் (8 கி.மீட்டர் வேகத்தில்) 80 நிமிடங்கள்

சாமான்களைக் கழுவுவது போன்ற தொடர்ந்து சிறு அசைவு வேலைகள் - 4 மணி நேரம்

மனதுக்குள் படிப்பது, எழுதுவது - 14 மணி நேரம்.

(பிற வேலைகளை மேலே குறிப்பிட்டவைகளுடன் உடல் பிரயாசைக்கேற்ப ஒப்பிட்டு அவற்றிற்குத் தேவையான நேரத்தை அறியலாம்.)

இந்தப் புள்ளி விவரங்களைக் கண்டு மலைக்க வேண்டாம். உங்களுக்கு எது பொருந்துமோ அதை மட்டும் கவனித்தால் போதும். உங்களுடைய உணவுப் பழக்க வழக்கங்களும், வேலைகளும் அநேகமாய் ஒரே சீராகவே இருக்கும். ஆகவே உங்களுடைய அன்றாட 'கலோரி பட்ஜெட்'டை ஒரே ஒருமுறை கணக்கிட்டால் போதும். உணவில் நீங்கள் கடைப்பிடிக்க வேண்டிய கட்டுப்பாட்டையும், பயிற்சி அல்லது வேலை ஏதும் அதிகரிக்க வேண்டுமா என்பதையும், உணவு ஆலோசகர் உதவியின்றி, நீங்களே அறிந்து கொள்ளலாம்.

எடை ஒருமுறை சரியான அளவுக்கு வந்தபின் வேண்டுமானால், பழைய சினிமா பாட்டை தலைகீழாக்கிப் பாடலாம்.

வரவு எட்டணா, செலவு எட்டணா என்றும் மகிழ்ச்சி, ஆரோக்கியமே!

வரவு பத்தணா, செலவு எட்டணா துந்தனா, துந்தனா!

நாற்பது வயதுக்கு மேலும் 'சிக்'கென்ற உடலமைப்புடன் வளையவந்து, சுறுசுறுப்பாகச் செயல்படும் போது ஏற்படும் மகிழ்ச்சிக்கும், திருப்திக்கும் ஈடுஇணையேது?

தகவல்களுக்கு ஆதாரம் :

**நீரிழிவு நிபுணர்கள் :**

**1. டாக்டர் ஏ. சுந்தரம் M.D. எழுதிய 'Diabetic time' என்ற நூல்.**

**2. டாக்டர் வி. மோகன் M.D. அவர்களின் கட்டுரை.**

– அ. ஷண்முகசுந்தரம்


Dhanalakshmi
LOANS FOR CONSUMER DURABLES
Because what sets your heart afire shouldn't burn a hole in your pocket.
You set your heart on buying the latest TV and your wife is all excited about the new washing machine. Go ahead and buy them. The Dhanalakshmi Bank Consumer Loan Scheme will back you up.
The Bank offers Loan for consumer durables to buy the comforts of life without really feeling the pinch.
For six decades and more Dhanalakshmi Bank has helped thousands of people chart the course of their future with a sense of pride and achievement.
Come, be a part of the Dhanalakshmi family
Get in touch. We'll be with you all the way.
BANK FOR THE FUTURE
THE DHANALAKSHMI BANK LIMITED
Corporate Office : Thrissur
CHAIRMAN : V. HARIHARAN

# காசிக்குப் போகலாமா?

வாழ்நாளில் ஒருமுறையாவது கண்டிப்பாக காசிக்குப் போக வேண்டும்; அங்கே, கங்கையில் புனித நீராட வேண்டும் என்று ஒவ்வொருவரும் ஆசைப்படுகிறோம்.

காசிக்கு யாத்திரை சென்று திரும்பினால் வாழ்க்கையில் ஒரு முக்கிய கட்டம் நிறைவேறியது போன்ற பெரும் மனத் திருப்தியைத் தருகின்றது. சென்னை சென்ட்ரல் ரயில் நிலையத்திலிருந்து வாரம் இருமுறை திங்கள், சனிக் கிழமைகளில் வாரணாசிக்கு ரயில் உண்டு. திங்கட் கிழமை புறப்படும் ரயில், புதன் காலை 8 மணியளவில் அலகா பாத் சென்றடைகிறது. நாம் முதலில் அலகா பாத்தில் இறங்கி விடுகிறோம் - த்ரிவேணி சங்கமத்தில் ஸ்னானம் செய்ய.

ப்ளாட்பாரத்திலேயே நம்மை வரவேற்கின்றனர் கைடுகள். தூய தமிழில் பேசி, நம்மை அழைத்துச் சென்றார் சிவமடத்தைச் சேர்ந்த நடேச சாஸ்திரிகளின் ஏஜெண்ட். சுமார் 8 கி.மீ. தூரத்துக்கப்பால் உள்ள ''தாராகஞ்ச்'' ஸ்டேஷனுக்கு அருகில் உள்ளது மடம். ஒரு டெம்போவில் பிரயாணம். சாமான்களுடன் 6 பேர் வசதியாக உட்காரலாம். (த்ரிதண்டி மடம் போன்ற வேறு சில இடங்களும் இங்கே உண்டு - தங்குவதற்கு.)

மடத்தில் ரூம் கொடுக்கின்றனர். ஸ்நானம் செய்ததும், நதியில் நீராடுவதற்கான ஸங்கல்பத்தை (வைதிகச் சடங்கு) மடத்திலேயே செய்து முடித்து விடுகிறார் சாஸ்திரிகள். இதற்குள், நம்மை நதிக்கரைக்கு ஏற்றிச் செல்ல டோங்கா தயாராக நிற்கிறது மடத்து வாசலில். ஒரு டோங்காவில் ஐந்து



* தசாஸ்வமேத கட்டம்

பிரயாணிகளை ஏற்றிக் கொள்கின்றனர். சுமார் 1½ மைல் தூரம். டோங்காவாலா, பழக்கம் காரணமாக, நல்ல தமிழில் பேசுகிறார். நதிக்கரையில் (யமுனை) நிறைய படகுகள் தயாராய் நிற்கின்றன.

மடத்துக்குக் காண்ட்ராக்டாகப் பணி புரிபவர், நமக்கு ஒரு படகு ஏற்பாடு செய்து கொடுக்கிறார். ஒரு கிலோ மீட்டர் தூரம் படகு சவாரி. அங்கேதான் யமுனையுடன்

✱ பஞ்சகங்கா காட்....



கங்கை சங்கமிக்கிறாள். சரஸ்வதியும் அந்தர்யாமியாகக் கலப்பதால், இது த்ரிவேணி சங்கமம் ஆகிறது.

நாம் படகிலிருந்து இறங்கி, இங்கேதான் ஸ்னானம் செய்ய வேண்டும் - ஆம் நீண்ட நடு ஆற்றிலேதான். தடிமனான மரப் பலகைகளால் ப்ளாட்பாரம் போன்று நீண்ட ஒரு மேடை அமைக்கப்பட்டு இருக்கிறது, ஸ்னான கட்டத்தில். அதிலேதான் இறங்குகிறோம். மூழ்கி ஸ்னானம் செய்ய வசதியாக, மேடையின் கீழே மற்றும் ஒரு மேடை - மார்பு அளவு ஆழமே இருக்கும்படி.

ஸ்னானம் முடிந்து நம்மை கரைக்கு இட்டுச் செல்ல, படகோட்டி காத்திருக்கிறார். கரையில் நாம் வந்த டோங்காவும் காத்து நிற்கிறது - நம்மை திரும்ப மடம் கொண்டு சேர்க்க. டோங்கா, படகு இரண்டுக்குமே கட்டணம், தலைக்கு ரூ. 7/- மட்டுமே போக வர, ஆக, ரூபாய் பதினான்கு மட்டுமே செலவழித்து ஸ்னானத்தை முடித்து மடம் திரும்பினால், பகல் சாப்பாடு சூடாகக் கிடைக்கிறது.

சற்றே இளைப்பாறி, மூட்டை முடிச்சுடன் மீண்டும் ரயில்வே ஸ்டேஷன் திரும்புகிறோம். மடத்து சிப்பந்திகளும் விடை பெற்றுச் செல்கின்றனர் மடத்திலிருந்து. அனைவருக்கும் அங்கே பிழைப்பு மீண்டும் அடுத்த நாள் காலையில்தான்.

**யா**த்திரையின் இரண்டாவது கட்டமாக, அலகாபாத்திலிருந்து வாரணாசிக்குப் பயணம் செய்கிறோம்.

கான்பூரிலிருந்து கோரக்பூர் செல்லும் எக்ஸ்பிரஸ் ரயில் இரவு 8:30க்கு வந்து, வாரணாசியை நடு இரவு 12 மணிக்குச் சேர்கிறது. 137 கி.மீ. தூரத்தைக் கடந்து வாரணாசி பெரிய ஸ்டேஷன். ஓய்வு அறைகள், டார்மிடரி வசதிகள் உண்டு.

காலையில் கைடுகள் ஸ்டேஷனுக்கு வருகின்றனர். 5 கி.மீ. தூரத்தில் உள்ள ஹனுமான் காட் என்னுமிடத்தில் உள்ள, காஞ்சி காமகோடி சங்கர மடத்தில், தங்க ரூம்கள் கிடைக்கும். பல தென்னிந்திய லாட்ஜுகளும் உள்ளன. (வாரணாசி, காசி, பனாரஸ் அனைத்தும் ஒன்றே.)

கங்கை இங்கே தெற்கிலிருந்து வடக்கு நோக்கி பிரவகிப்பதில் உத்தரவாகினி எனப்படுகிறாள். ஸ்நானம் செய்ய, கங்கைக் கரையில் 64 கட்டங்கள் (ghat) உள்ளன. இதில்



✱ ஹரித்வார்

ஐந்து மட்டுமே முக்கியமானவை.

1. அஸ்ஸி காட் : அஸ்ஸி நாது என்பவர் சிரார்த்தம் செய்த இடமாம்.

2. தசாஸ்வமேத காட் : பிரம்மா இந்த இடத்தில் 10 அசுவமேத யாகங்கள் செய்தாராம்.

3. த்ரிலோசன் வருண காட் : வருண நதி இங்கே கங்கையுடன் சேர்கிறதாம். (வருண நதி ஓடும் ஊர் - வாரணாசி.)

4. பஞ்ச கங்கா காட் : அலகாபாத்தி லிருந்து பிரவகித்து வரும் கங்கை, யமுனை, சரஸ்வதி ஆகிய மூன்றுடன், இங்கே கிரிணா, தூத பாபா என்ற இரு நதிகள் சேர் கின்றனவாம். (ஓடுவது ஒரே கங்கைதான் - த்ரிவேணி சங்கமத்தில் நாம் பார்ப்பது போல், ஏதும் சங்கமிப்பதாகத் தெரிய வில்லை.)

5. மணி கணிகா காட் : இங்கே முன் ஒரு சமயம் விஷ்ணுவின் சக்ர குளம் இருந்த தாகவும், ஒருநாள் அதில் சிவனும் பார்வதி யும் நீராடும் சமயம், பார்வதியின் தோடும் (கணிகா), சிவன் அணிந்திருந்த மணி ஒன் றும் குளத்தில் விழுந்து விட்டதாம்.



✱ ஹரித்வாரத்தில் ஸ்னான கட்டம்

''சிவாலயா காட்'' என்னுமிடத்தில் நாம் படகில் ஏறி, கங்கையில் சவாரி செய்து கொண்டே வரும் போது, படகோட்டி ஒவ் வொரு இடமாகச் சுட்டிக்காட்டி, நமக்குக் கதை சொல்லிக் கொண்டே படகைச் செலுத் துகிறார். அவருக்கும் துடுப்பு போடும் சிரமம் தெரிவதில்லை. நடிகர் பாலையா ஒரு படத்தில் ஸேட்டாக வந்து பேசும் தமிழில், நாம் சிரிக்கச் சிரிக்கப் பேசுகிறார் படகோட்டி பாபுலால். வாய் பீடாவை (பான்) ஓய்வின்றி மென்று அரைத்துக் கொண்டிருக்க, இடையிடையே, சிவந்த உமிழ்நீரை, புனித(!) கங்கையில் துப்பி, தன் வாயைச் சுத்தம் செய்து கொண்டு, கங்கை நீரை அசுத்தப்படுத்துகிறார் மனுஷன். (நாள் ஒன்றுக்கு பதினைந்து ரூபாய் செலவழிக் கிறாராம் பீடாவுக்கு மட்டும்). நாம் பேச்சுக் கொடுக்கவும், குஷி பிய்த்துக் கொண்டது பாபுலாலுக்கு. அவர் சொன்னார் : ''அம்மா, இவ்வளவு தூரம் கடந்து காசிக்கு வந்து விட்டுப் போய், பொய் சொல்வது ரொம்ப வும் தப்பான காரியம். ஆனால் பாருங்கள், காசிக்கு வந்து போகும் உங்களில் பலர் ''காசியில் சடலம் பாதி எரிந்து கொண்டி ருக்கும்போதே, அதை கங்கையில் இழுத்து விட்டு விடுகிறார்கள்'' என்று பொய்யாகப் பேசுகிறார்கள். சடலங்களை எரிப்பதை படகிலிருந்தே பார்க்கலாம். நான் காட்டு கிறேன். பூராவாக எரிந்த பின்னர், பாதி எரிந்த விறகுகளையே கங்கையில் இழுத்து விடுவதைப் பார்க்கலாம்'' என்றார். அவர் கூறியது உண்மையே. நாம் பார்த்தோம். எரிக்கும் இடத்தில், புதிதாக வந்து கொண் டிருக்கும் சடலங்கள் காத்திருக்க, சடலம் எரிந்த பின்னர், விற கையே நீரில் எறிந்தனர் - அடுத்த சடலத்துக்கு விறகு அடுக்க இடம் ஏற்படுத்துவதற்காக.

இங்கே மின்சார தகன அடுப்பும் இருக் கிறது. அதில் எரிக்க, சடலம் ஒன்றுக்கு ரூ. 50/-ம், விறகினால் எரிக்க ரூ. ஆயிரமும் கட்டண மாம். பலரும் விறகையே உபயோகிக்கின்றனர்.

''அம்மை நோய் கண்டு இறந்தவர்கள், குஷ்டரோகிகள், குழந் தைகள், சாதுக்கள், பாம்பு தீண்டி இறந்த வர்கள் போன்று குறிப் பிட்ட சில சடலங்களை எரிப்பதில்லை. நீரில் இழுத்து விட்டு விடு வார்கள் - கங்கையில் ஜல ஸமாதி - இவர் கள் இந்த ஊரில் ஈசுவர ரூபமாக மதிக்கப்படு வதால்'' என்று ஒரு குட்டி திருத்தமும் சொன் னார் பாபுலால்.

கொட்டை எழுத்துக்களில், அங்கங்கே, ஹிந்தியில் பெயர் பெயின்ட் செய்யப்பட்டு இருக்கிறது. கர்நாடகா காட், ஸிந்தியா காட் - ஹரிச்சந்திரா காட், தசாச்வமேத காட் என் றெல்லாம் புராண காலத்து அரிச்சந்திரனின் எஜமான் வீரபாகுவின் சந்ததியினர் இன்றும் அங்கே இருக்கிறார்களாம் - சடலம் எரிக்க கட்டணம் வசூலித்துக் கொண்டு.

பஞ்சி கங்கா காட்டில் ஸ்னானம் செய்து, உடை மாற்றிக் கரை ஏறுகிறோம் முதன் முறையாக. கரையில் உட்கார்ந்திருக் கும் பண்டாவுக்கு கட்டாய தக்ஷணை கொடுக்க வேண்டும். தலைக்கு ரூ 1.25 அவர் (10 வயது சிறுவன்) நம் நெற்றியில் ஒரு பொட்டு வைத்து நம்மை ஆசீர்வதிக்கி றார்(!) தரிசனம் ஆரம்பமாகிறது. முதலில் பிந்து மாதவன் கோவில். இந்தியாவில் மூன்று மாதவன்கள். ராமேச்வரத்தில் ஸேது மாதவன், அலகாபாத்தில் வேணி மாதவன், இங்கே பிந்து மாதவன்.

பின்பு கணபதி, அன்னபூரணி, விசா லாக்ஷி அம்மன், விச்வநாதர் ஆலயங்களில்

தரிசனம். அனேகம் இடங்களில் 40, 60 என்று படிகள் ஏறியே தரிசனம். விச்வநாதர் ஆலயத்தை சமீபிக்கவும் கூட்டம் அதிகரிக்கின்றது. குறுகிய தெருக்கள் - வாகனங்கள் ஏதும் செல்ல முடியாது. மாடுகள் நடமாட்டம் வேறு. ஆனால், காசி மாடுகள் யாரையும் முட்டாதாம். அது மட்டுமல்ல, இந்த ஊரில் பூ மணக்காதாம் (மணம் தரும் மல்லிகை, ரோஜா போன்றவை கண்ணில் படக் காணோம்); பிணம் எரியும் போது நாற்றம் கிடையாதாம்; பல்லி சொல்வதில்லையாம்; கருடன் பறப்பதில்லையாம். தரிசனம் செய்ய வரும் யாத்ரிகளைத் தவிர, போலீஸ் கூட்டம் வேறு. ஆம், பெண் போலீஸ், ஆண் போலீஸ், ஆயுதம் தாங்கிய போலீஸ் என்று எங்கு திரும்பினாலும் காக்கி உடுப்புக்காரர்கள். மெட்டல் டிடெக்டரின் ஊடே பிரவேசிக்க வேண்டும். (டிசம்பர் 6 அயோத்தி எதிரொலியோ - பாதுகாப்பு ஏற்பாடுகள்). உள்ளே திருப்பதி போல் க்யூ ஏதும் கிடையாது. இடியான இடி. ஒருவழியாக, கையில் எடுத்துச் செல்லும் கங்கை நீரை, விச்வநாதர் மீது அபிஷேகம் பண்ணிய பின்னர், வெளியே தள்ளப்படுகிறோம். உள்ளே வரும் கும்பலால் கர்ப்பக்ருஹத்திலுள் நாம் இருப்பது சில விநாடிகளே.

தரிசனம் முடிந்து, மீண்டும் படிகளில் இறங்கி, நமக்காகக் காத்திருக்கும் படகில் ஏறி, திரும்ப நம் இடம் அடைகிறோம். முக்கியமானதைச் சொல்லவில்லையே. அதுதான் மங்கையர் மகிழ்ந்து விரும்பும் பனாரஸ் பட்டுச் சேலைகள். ரூ. 4000/- தொடங்கி, முந்நூறு ரூபாய் வரை விலை. நமக்குத் தேவையான புடவைகள் வாங்கி, ஒருவழியாக ஷாப்பிங்கை முடித்து, உணவருந்தச் செல்கிறோம்.

கோரக்பூரில் உள்ள பிரபலமான ''கீதா பிரஸ்'' பிரகரங்கள் - புராண புத்தகங்கள் - பாகவதம், கீதை முதலியன, ஹிந்தி, சமஸ்கிருதம் ஆகிய பாஷைகளில் மலிவாகக் கிடைக்கின்றன வாரணாசியில்.

யாத்திரையின் மூன்றாவது கட்டமான, கயாவுக்குப் பறப்பட தயார்ப்படுத்திக் கொள்கிறோம்.

மாலை நான்கு மணிக்கு வரும் ''டூன் எக்ஸ்பிரஸ்'' இரவு 9 மணிக்கு நம்மை கயாவில் கொண்டு விடுகின்றது.

கயையில் சிராத்தம் செய்ய வேண்டியது முக்கியமான கடமை என்று கூறப்படுகிறது. பணத்தை மொத்தமாகச் செலுத்தி விட்டால், அனைத்து ஏற்பாடுகளையும் செய்ய, பல புரோகிதர்கள் இங்கே உண்டு. மிகவும் பழமையானவர் பக்க ஆசார்யா என்னும் கர்நாடகாவைச் சேர்ந்தவர். காஞ்சி காமகோடி சங்கர மடமும் இன்னும் சில தென்விந்திய அமைப்புகளும் உள்ளன.

இந்த ஊருக்கு ''கதாதர க்ஷேத்ரம்'' என்றும் பெயர் - (கதையைத் தரித்தவர் - தோதரர் - விஷ்ணு). கதாதரர் கோவில் மட்டுமின்றி, கயா பூராவுமே, அமைதியாகவும், சுத்தமாகவும் காணப்படுகின்றது - அலகாபாத், வாரணாசியைப் போல் நெரிசல் இன்றி இங்கே ஓடும் பல்குனீ நதியும் தெளிந்த நீருடன், மிகச் சுத்தமாக பிரவகிக்கின்றது. தண்ணீர் அதிகம் இல்லை - நாம் சென்ற சமயம். காலையில் நதியில் ஸ்னானம் முடிந்து வந்ததும், கோவிலிலேயே ஒரு மண்டபத்தில் புரோகிதர் நம் பித்ருக்களுக்கு, நாம் பிண்டம் போடும் சடங்கை நடத்தி வைக்கிறார். அது முடிந்ததும், ''தத்தம்'' செய்யப்பட்ட பிண்டங்கள் விஷ்ணு பாதத்தில் சேர்க்கப்படுகின்றன.

சாஸ்திரிகளுடன் நாம் மடத்திற்குச் சென்று, ஹோமம் வளர்த்து, சிராத்தம் செய்கிறோம். பிராமணர்கள் உணவருந்திய பின்னர், அவர்களுடன் 'அக்ஷய வட'த்துக்குச் சென்று, (ஒரு பிரம்மாண்டமான ஆலமரம் இருக்கிறது) அங்கே மீண்டும் பிண்டம் போடுகிறோம். பின்னர் 'கயாவாலி' (பிராமணர்) சிராத்தம் பூர்த்தியானதற்குச் சான்றாக ''திருப்தி'' சொன்ன பிறகே, நாம் உணவருந்தச் செல்கிறோம்.

மாலை 6 மணிக்குக் கோவிலில் 'விஷ்ணு பாத'த்துக்கு சந்தன காப்பு அலங்காரம் விசேஷமாகச் செய்கிறார்கள். கோவிலில் ஒரு பாறையில் ''கால் அடி'' பள்ளமாய் உள்ளது. இதுவே விஷ்ணு பாதம்.

இரவு 9:30 க்கு வண்டி ஏறி குர்தா ரோடு வழியாக, திரும்ப சென்னைக்கு வந்து சேர்கிறோம். காசி சென்று வந்ததற்கு அடையாளமாக, நம் நண்பர்களுக்கும், உறவினர்களுக்கும் காசிக் கயிறு, கோவில் பிரசாதம் (விபூதி - குங்குமம்) கங்கை நீர் கொண்ட காசிச் செம்பும், அன்னபூரணி விக்ரஹமும் கொடுக்கிறோம். நமக்கு (மங்கையருக்கு) பனாரஸ் பட்டுப் புடவைகள். நம்முடன் வந்த நம் வீட்டு ஆடவர்க்குக் கிடைப்பவை - நம்மை பத்திரமாக அழைத்துச் சென்று, நம் தேவைகளைக் கவனித்த புண்ணியம் மட்டுமே. அதிலும் பாதிப் புண்ணியம் மனைவியைச் சேரும் என்கிறார்கள் நம் பெரியவர்கள்.

**– பாமா நரசிம்மன்**

ஒரு கப் தண்ணீரில் 4 டீஸ்பூன் டேபிள் சால்ட் கலந்து அதை அறையின் நான்கு பக்க ஓரங்களில் தெளித்து விட்டால், எறும்பு நடமாட்டம் இருக்காது.

– விஜயகீதா






- ❒ சுத்தமான நெய்யில் தயாராகும் ஸ்வீட் வகைகள்
- ❒ சுத்திகரிக்கப்பட்ட, கொலஸ்ட்ரால் தொல்லை இல்லாத தாவர எண்ணெயில் தயாராகும் கார வகைகள்
- ❒ அதிகப் படியான எண்ணெய் அகற்றப் படுவதால் நீண்டநாள் கெடாமல் இருக்கும் தென்னிந்திய பட்சணங்கள் (FREE OF OIL)

**OUR SPECIALITIES :**

- ❒ புழுங்கலரிசி கைமுறுக்கு, தட்டை, சீடை, மிக்ஸர் (FREE OF OIL), ETC.,
- ❒ மைசூர் பாகு, போளி, லட்டு, கோதுமை அல்வா, ETC.,







**SUSWAAD**

1/2 VENKATRAMAN STREET,
T.NAGAR, MADRAS - 17. PH: 8282324 P.P.

---

**கல்யாண ஸ்வீட்ஸ், சீர் முறுக்கு சீர்வரிசை பட்சணங்கள் எவ்வளவு தேவை ஆனாலும் அர்ஜெண்ட் ஆர்டர் போலில் தயார் செய்து தருகிறோம்.**

---

*Also available at:*

C/o. Unique Electronics
160, Royapettah High Road, Mylapore, Madras - 4.
Ph: 4992190
131, Mudichur Road, Thambaram West,
Ph: 403267

EXPORT ORDERS & ENQUIRIES FOR TECH. KNOWHOW SOLICITED




மங்கையர் மலர் ''டயட்'' சிறப்பிதழ் என் போன்ற பெண்மணிகளுக்கு, முப்பதைக் கடந்தவர்களுக்கு, நிச்சயம் உபயோக மான ஒன்று. வாசக சகோதரிகளுடன் சில எளிய 'டிப்ஸ்'களைப் பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். கடந்த ஆறு மாதங்களாக இம் முறைகளைப் பின்பற்றி, எந்தத் தொந்தரவும் இல்லாமல், மருந்து மாத்திரைகளைப் பற்றி நினைக்காமலே இருக்கிறேன். (கணவர் ஒரு மருத்துவர்! அவர் மன்னிக்க!)

முப்பதைக் கடந்து விட்ட பல சகோதரிகளுக்கும் முழங்கால் வலி, குதிகால் வலி, இடுப்பு வலி சர்வசாதாரண மாக இருக்கும்! அதுவும் தூங்கி எழுந்த வுடன், காலையில் நிறைய பேர் நடக்கச் சிரமப்படுவார்கள்.

1. முழங்கால், குதிகால் வலி இருப்பவர்கள் முதலில் தங்கள் காலணிகளில் கவனம் செலுத்த வேண்டும். ஃபேஷன், மாடர்ன் என்று கூறிக் கொண்டு காசையும் அதிகம் கொடுத்து வாங்கி ஹை ஹீல்ஸையும், ஃபோமுடன் கூடியதும் போடுவதை விடுத்து, சுலபமானதாக, தட்டையான செருப்புக்கள் போட்டாலே போதுமானது. நல்ல 'ரிலீஃப்' கிடைக்கும்.

2. பஞ்சு மெத்தைகளும், ஃபோம் படுக்கைகளும், ஃபோம் தலையணைகளும் (ஃபோம் கம்பெனிகள் மன்னிக்க!) நிச்சயம் இப்படிப்பட்ட பெண்மணிகளுக்கு எதிரியாகும். ஒரு பாய், பஞ்சு தலையணை போதும். இடுப்பு வலி, உடம்பு வலி தெரிவதேயில்லை. பகலில் தூக்கமும் தேவைப்படுவதில்லை. செல்ஃப் மஸாஜ் ஆக தரையுடன் ஒன்றாக பாய் பயன்படுவதால், உடம்புக்கு இதமாக இருக்கிறது.

காலையில் எழும் போது குதிகால் வலி, மூட்டு வலி, இடுப்பு வலி எதுவும் தெரிவதில்லை.

3. அடுத்து புடவை உடுத்த, மேக்-அப் செய்ய 10 நிமிடம் ஒதுக்குவது போல், பல் துலக்கி, காலைக் கடன்களை முடித்தவுடன் 10 நிமிடங்களாவது எளிய உடற்பயிற்சிகள் செய்ய, உடம்பு மேலும் வணங்கும்; குனிய நிமிர உடம்பு ரப்பர் பந்து போல ஆகும். தஸ், புஸ் என்று மூச்சு விடாமல் புத்துணர்வுடன் நாள் முழுதும் இருக்க முடியும். சம தரையில் நீட்டிப் படுத்து, இரண்டு கால்களையும் ஐந்து நிமிடங்கள் உயர்த்தியிருத்தல், புஜங்கா சனம் 5 நிமிடம் இரண்டும் போதும்.

குறிப்பாக, வேலைக்குச் செல்லும் பெண்கள் இம் மூன்றையும் கடை பிடிக்கும் போது, அலுவலகத்தில் பிற்பகல் உணவுக்குப் பின் களைப்பே தெரியாது. கடந்த ஆறு மாதங்களாக அனுபவத்தில் கண்ட உண்மை இது. வீட்டிலிருக்கும் சகோதரிகள், பகல் தூங்கி, உடம்பு பெருக்காமல் வேறு வேலைகளில் ஈடுபட உதவும்.

எந்த நோயும் இல்லாமல் சாதாரண உடல்நலம் உள்ள யாரும் இதைக் கடைப் பிடிக்கலாம். அதற்கும் மேல், இயற்கை யான உடல் உபாதைகள் உள்ளவர்கள், மருத்துவரை அணுகலாம்!

– தேன்மொழி சந்திரசேகரன்

# சின்னப் பசங்க



பொடியர்கள் கேள்விகள் கேட்க, பெரியவர்கள் பதில் சொல்ல (அல்லது பதில் தெரியாமல் விழிக்க) ஒரு க்விஸ் நடத்தினால் எப்படியிருக்கும்? வித்தியாசமாக இருக்கும் என்று படவே, நினைத்ததைச் செயல்படுத்தத் தொடங்கினோம்.

இரண்டாம் வகுப்பிலிருந்து ஏழாம் வகுப்பு வரை படிக்கும் சரண்யா, கிருஷ்ணா, அருண், தீபிகா ஆகியோர் க்விஸ் மாஸ்டர்களாக இருக்க உற்சாகத்துடன் சம்மதித்தனர்.

பங்கு கொள்வதற்காக நாம் அணுகிய பெரியவர்களில் பலர் பின்வாங்கி விட்டனர். ''சின்னப் பசங்க சிம்பிளா ஏதாவது கேட்டு பதில் சொல்ல முடியாம போச்சுன்னா அசிங்கம். அதுவும் இந்த அவமானம் பத்திரிகை மூலமா லட்சக்கணக்கானவர்களுக்கு வேறே தெரிஞ்சிடுமே' என்று விலகிக் கொள்ள, முன்வந்த ஐந்து பேரைப் பிடித்துப் போட்டோம்.

சி.ஏ. படிக்கும் ஷோபா தன் பாட்டியையும் அழைத்துக் கொண்டு வந்தார்.

''என் மனைவிக்கு எப்பவுமே கேள்வி கேட்கத்தான் பிடிக்கும். முதல் தடவை அவ பதில் சொல்வதைப் பார்க்கப் போறேன்'' என்று தன் கணவர் பார்வையாளர் பகுதியிலிருந்து கமெண்ட் அடிக்க, ''கொஞ்ச நேரம் உங்களாலே சும்மா இருக்க முடியாதா?'' என்று கேள்வி கேட்டபடி புன்னகையுடன் வந்து உட்கார்ந்து கொண்டார் லோசனா. ''என்னதான் நடக்கும் நடக்கட்டுமே'' என்கிற பாவத்தில் அமர்ந்தார் ஸ்ரீனிவாசன்.

''ஏதாவது க்விஸ் புக் இருக்கா?'' என்று நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்கு முன் ஒருமுறை பார்த்துக் கொள்ள சேதுராமன் நம்மிடம் கேட்க, இல்லை என்றோம்.

பிறகு அறைக்குள் நுழைந்தோம். அங்குதான் நான்கு க்விஸ் மாஸ்டர்களும் உட்கார்ந்து கொண்டு கேள்விகளைத் தயாரித்து முடித்திருந்தனர். கேள்விகளை நம்மிடம் காட்டச் சொன்னோம். (பாடப் புத்தகக் கேள்விகளாகக் கேட்டால் நிகழ்ச்சி போரடித்து விடப் போகிறதே என்கிற கவலை). ஆனால் அதுவே தப்பாகப் போயிற்று. அதற்குப் பிறகு நிகழ்ச்சி தொடங்கும் வரை நம் பின்னாலேயே சுற்றிச் சுற்றி வந்தாள் தீபிகா. 'யாரிடமாவது கேள்விகளை அவுட் செய்து விடுவோமா' என்ற சந்தேகம்!

''மைக் செட், ஸ்டாப் வாட்செல்லாம் தயாரா?'' என்று கம்பீரமாக சரண்யா கேட்கவும், நமக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஸ்டாப் வாட்சுக்குப் பதிலாக சாதா டைம்பீஸையும், மைக்குக்குப் பதிலாக ஒரு கிலுகிலுப்பையையும் வைத்துக் கொள்வது என்ற ஏற்பாட்டுக்குப் பெரிய மனசு பண்ணி சம்மதித்தாள் சரண்யா.

பிறகு அறையிலிருந்த நால்வரும் வந்து சோபாவில் உட்கார்ந்து கொண்டு பங்கு கொள்ள வந்தவர்களின் டென்ஷனான





# கேட்கறாங்க!

முகங்களைப் பார்த்து மகிழ்ச்சிப்பட்டவர். ஆனால் 'யார் முதல் கேள்வியைக் கேட்பது?' என்ற டெக்னிகல் பாயிண்ட்டில் அவர்களிடையே கடுமையான கருத்து வேறுபாடு ஏற்பட்டது. கடைசியில் அருண் கூறிய ஒரு யோசனை அனைவராலும் ஏற்கப்பட்டது.

''சாட் பூட் த்ரீ'' போட்டு எந்த வரிசையில் கேள்வி கேட்பது என்பது தீர்மானிக்கப்பட்டது.

வயதில் சீனியரான சரண்யா விவாதி வினாவின் ஒரே விதியை 'மைக்'கில் அறிவித்தாள். ''எல்லா விஷயங்களிலும் எங்கள் தீர்ப்பே இறுதியானது'' என்பதுதான் அது.

''விதியா இது? எங்கள் தலைவிதி'' என்று மங்களம் பாட்டி ஜோக்கடிக்க சூழ்நிலை கலகலப்பானது.

முதல் வாய்ப்பு தீபிகாவுக்கு. ''ஐந்தை ஜீரோவால் பெருக்கினால் என்ன வரும்?'' என்றாள்.

பதிலளிக்க வேண்டிய ஸ்ரீனிவாசன் ரொம்ப யோசித்தார் - கேள்வியில் ஏதோ பொடி இருக்கிறதோ என்ற பயம். பிறகு பதிலளிப்பதற்கான நேரம் முடியப் போகும் நேரத்தில் ''ஜீரோதான்'' என்றார்.

தீபிகாவுக்கு ரொம்ப ஏமாற்றம். ''அங்கிள்னு தப்பா சொல்லுவாருன்னு நெனைச்சேன்'' என்றாள் பக்கத்திலிருந்த அருணிடம் வருத்தமாக.

அடுத்த கேள்வி அருணிடமிருந்து வந்தது. அதிக உற்சாகத்தில் கேள்வியை ஏறுமாறாகக் கேட்டுவிட்டான். ''யூரின் காகரின் யார்?'' என்று கேள்வி வந்தவுடன் சிரிப்பு பரவியது.



(விண்வெளிக் கப்பலில் பயணம் செய்த முதல் வீரர் யூரி காகரின்). ''விண்வெளியில் முதன் முதலில் சிறுநீர் கழித்தவர்'' என்று சேதுராமன் விட்டாக பதிலளிக்க, மீண்டும் கும்மாளக் கூக்குரல்கள்.



''உலகத்திலேயே உயரமானவர் யார்?'' என்று கிருஷ்ணா கேட்டதும், லோசனா தலையில் தட்டிக் கொண்டார். ''டீ.வி.யிலே வந்த கின்னஸ் சீரியல்லே கூடப் பார்த்திருக்கேன். ஆனா பேர் ஞாபகத்துக்கு வர மாட்டேங்குது'' என்று தன் இயலாமையை வெளிப்படுத்த, கேள்வி மங்களம் பாட்டிக்குப் பாஸானது.

''எங்க கிராமத்திலே சச்சான்னு ஒருத்தன்.

அவனோட ஒன்னு விட்ட மாமா ரொம்ப உயரமாம். அவர் நின்னார்னா...'' மேலும் பாட்டியை 'மலரும் நினைவுகளில்' புக விடாமல் ''தப்பு'' என்று ஒரே வார்த்தையில் கட் செய்தான் கிருஷ்ணா.

யாருக்குமே விடை தெரியவில்லை. ''அமிதாப்பச்சன்தான் உலகத்திலேயே உயர மானவர்'' என்று கிருஷ்ணா அநியாயமாகச் சொல்ல ''இல்லை'' ''கிடையாது'' என்று பங்குகொள்ள வந்தவர்களிடமிருந்து மறுப் புக் குரல்கள் எழுந்தன. மாவிட்டராகச் செயல்பட்ட சரண்யா, ''எங்க தீர்ப்புதான் இறுதியானதுன்னு சொல்லியிருக்கேன் இல்லே? அமிதாப்பை விட உசரமா யாரை யாவது எங்க கண்முன்னே இப்பவே கொண்டு வந்து காமியுங்க. இல்லேன்னா எங்களுக்குத்தான் மார்க்'' என்றாள். (ஆம். யாரும் 'சரியான' பதிலைச் சொல்ல வில்லையென்றால் 'க்விஸ் மாஸ்டர் குழு' வுக்குத்தான் மதிப்பெண் என்ற முறை பின் பற்றப்பட்டது).

சரண்யாவின் அடுத்த கேள்வி இதுதான். ''ஒரு எறும்பை வெட்டினால் என்னவா கும்?'' ''பிராணி வதை தடுப்பு சங்கத்தினர் வந்து பிடிச்சுக்கிட்டுப் போயிடுவாங்க'', ''செத்தப்புறம் எமதர்மராஜன் என்னைய்க் கொப்பரையில் போடுவான்'' ''இரண்டு எறும்புத் துண்டுகள் ஆகும்'' என்றெல்லாம் தவறான விடைகள் வந்தன. ''இது கூடவா தெரியல்லே? எறும்பைக் 'கட்' செய்தால் கட்டெறும்பு ஆகும்'' என்ற பதிலை அறி வித்தாள் சரண்யா. தொடர்ந்து 'சரியான கடி' என்று விமரிசனங்கள் பறந்து வந்தன.

அடுத்து நீபிகா ஒரு 'விஷுவல்' கேள் வியை முன்வைத்தாள்.

விலுக்விலுக்கென்று கழுத்தையும், உட லையும் திருப்பிக் கொண்டு சில நடன ஸ்டெப்ஸ் கொடுத்து ''இது எந்த சினிமாப் பாட்டுக்கான டான்ஸ்'' என்றாள்.

ஷோபா பளிச்சென்று ''ஜிகுபுகு ஜிகு புகு ரயிலு'' என்று சொல்ல, நீபிகா விரோத மாக நம்மைப் பார்த்தாள். ''நீங்க கேள்வி யை இந்த அக்காகிட்டே அவுட் செய்துட் டீங்க'' என்றாள் ஒரு பாவமுமறியாத நம் மைப் பார்த்து.

''சீச்சீ, எனக்கு பிரபுதேவா டான்ஸ் தெரியாதா? தவிர ஆடும் போது நீ லேசா பாட்டைப் பாடிட்டே'' என்று தன் வெற்றிக் கான காரணங்களை ஷோபா அடுக்கிய பிறகே சமாதானமானாள் நீபிகா.

அடுத்து 'அப்சர்வேஷன் சக்தி'யை சோதிக்கும் ஒரு கேள்வி வந்தது. அங்கே தொங்கிக் கொண்டிருந்த ஒரு படத்தை அலட்சியமாக எடுத்து அதிலிருந்து எழுத் துக்களைக் கையால் மறைத்துக் கொண்டு ''நான் இரண்டு வார்த்தைகளை மறைத்துக் கொண்டிருக்கிறேன். அவை என்ன?'' என்றான் கிருஷ்ணா. படத்தில் இரண்டு பூனைகள் இருந்ததால் ஆளாளுக்கு சரடு விட்டனர். ''மியாவ் மியாவ்'' என்றார் ஸ்ரீனி வாசன். ''இரண்டே போதும்'' என்று பொறுப்புணர்ந்த இந்தியக் குடிமகனாகப் பதிலளித்தார் சேதுராமன். ''பூனைக்கும் பாசமுண்டு'' என்ற லோசனா பார்வை யாளர் பக்கமாக ஏனோ பார்த்தார், ''யாருக்கோ பாசமில்லை' என்பது போல்!



இட்லி வார்த்து
மீந்து போய் விட்டால்
இனிமேல் கவலையே
வேண்டாம். இட்லியை நன்றாக
உதிர்த்து விட்டுக் கொண்டு
தேவையான அளவு கடலை
மாவு, உப்பு, பெருங்காயம்,
பச்சை மிளகாய், கொத்துமல்லி, கறிவேப்பிலை
எல்லாவற்றையும் போட்டுப் பிசைந்து கொள்ளவும்.
மிகச் சிறிதளவு நீர் தெளித்தால் போதும். பின்னர் நன்கு
காய்ந்த எண்ணெயில் உதிர்த்துப் பொரிக்க 'இட்லி
பக்கோடா' போகும் இடம் தெரியாது.

- சுபா

இந்த வயசுல இங்கிலீஷ் கத்துக்கப் போறியான்னு கிண்டல் பண்ணுவாங்களே!

எட்டாவது வரை படித்திருக்கிறேன் இங்கிலீஷில் பேசக் கற்றுக்கொள்ள முடியுமா?

நான் B.A. படித்திருக்கிறேன். எனக்கு இந்த கோர்ஸ் யூஸ்ஃபுல்லாக இருக்குமா?

பயிற்சிக்காக அதிக நேரம் செலவிட வேண்டியிருக்குமா?

தபால் மூலம் இங்கிலீஷ் கற்றுக்கொள்ள முடியுமா?

**நீங்கள் கேட்க விரும்பும் கேள்விகள்**

பயிற்சிக் கட்டணம் அதிகமாக இருக்குமோ!

# விவேகானந்தாவின் விளக்கமான பதில்கள் இதோ!

• **வி**வேகானந்தாவின் தபால்முறை ஆங்கிலப் பயிற்சி அடிப்படை — இலக்கணம் — உரையாடற் பயிற்சி — என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. தமிழ் எழுத, படிக்கத்தெரிந்தவர்கள் தங்களது கல்வித் தகுதிக்கேற்பத் தேவையான பிரிவைத் தேர்ந்தெடுத்துப் பயிற்சி பெறலாம்.

• பாடங்கள் அனைத்தும் இனிய தமிழ் விளக்கங்களுடன் மிகச் சுலபமாகப் புரிந்து கொள்ளும் வகையில் அமைக்கப் பட்டுள்ளன.

• பயிற்சி பெறுவோர், பாடங்களை எந்த அளவுக்குப் புரிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை அறியப் பாடங்களுடன் பயிற்சி ஏடுகள் (Response Sheets) இணைக்கப் பட்டுள்ளன. இவைகளைத் திருத்தி அனுப்பும் பணியினை நமது கல்வி நிலைய ஆசிரியர் குழு மேற்கொண்டுள்ளது.

• தபால்முறைப் பயிற்சியாயிற்றே என்ற தயக்கம் வேண்டாம். பயிற்சி பெறும் மாணவர்களை நேரில் சந்தித்து விளக்க மளிக்க ஒவ்வொரு மாதமும், ஒவ்வொரு ஊரில் நேர்முகத் தொடர்பு வகுப்புகள் (Contact Seminar) நடத்தப்படுகின்றன.

• இரண்டு லட்சத்து ஐம்பதாயிரத்திற்கும் மேற்பட்டவர்கள் சேர்ந்து, பயனடைந்துள்ள ஒப்பற்ற பயிற்சி முறை இது!

• வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் தபால் மூலம் மிகக் குறைந்த கட்டணத்தில் நீங்களும் இப்பயிற்சியினை மேற்கொள்ள—லாம். பயிற்சிக்காக தினசரி அரைமணி நேரம் செலவிட்டால் போதும்!

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

அதுசரி, 'இப்பயிற்சியில் சேருவது எப்படி, எப்பொழுது சேரவேண்டும்' என்று கேட்கிறீர்களா? முதலில் ஒரு போஸ்ட்கார்டில் உங்களது முகவரியைத் தெளிவாக எழுதி எங்களுக்கு அனுப்புங்கள். பயிற்சி பற்றிய விபரங்களையும், விண்ணப்ப மனுவையும் அனுப்பிவைக்கிறோம். பிறகு உங்களது வசதிப்படி எப்பொழுது வேண்டுமானாலும் பயிற்சியினைத் தொடங்கலாம்.

**விவேகானந்தா கல்வி நிலையம்**

9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை-600 017.

# நீங்கள் இதுவரை அறியாத புதுச் சுவை

வந்துவிட்டன

# அவான்டிஸ்

## ஊறுகாய்கள்

## புதுமையான காய்கறி ஊறுகாய்களுடன் நாவில் நீரூற வைக்கும் இதர வகைகள்

**யா**ர் சொன்னது, ஊறுகாய்களின் சுவை எல்லாம் ஒன்றுதான் என்று?
மாற்ற வந்துவிட்டது அவான்டிஸ்!

உணவுடன் இணைந்து சுவைதரும் புதுமையாக **சுத்தரி, பாகற்காய், காலிஃப்ளவர், குட மிளகாய், உருளைக்கிழங்கு, கொத்துமல்லி** மற்றும் **புதினா** போன்ற சுவையான புதுவகை ஊறுகாய்களை அறிமுகப்படுத்துகிறது அவான்டிஸ்!

மேலும் நாவில் நீரூற வைக்கும் **எலுமிச்சை, மாங்காய், பூண்டு, தக்காளி** மற்றும் **மிக்ஸட் வெஜிடபிள்** போன்ற ஊறுகாய்களையும் அளிக்கிறது அவான்டிஸ்.

தயாரிப்பாளர்கள்:
அவான்டிகா
ஃபுட்ஸ் (பி) லிட்.
ஜெ.எ. டிரஸ்ட்
பில்டிங்,
சிவகாசி - 626 123

**24 வகைகள்**



பரணி அசோசியேட்,
C/O மனோ ஏஜன்சிஸ்
36, தாச்சி அருணாசலம் தெரு,
மைலாப்பூர்,
சென்னை - 600 004.




**இயற்கையான ஊறுகாய் சுவையின் மறுபெயர் — அவான்டிஸ்.**

Anugrah 1450/93 Tam

மங்களம் பாட்டியிடம் லோசனா ''பதில் தெரியல்லேன்னா பாஸ் செய்துடுங்க'' என்று எடுத்துக் கூற, ''என்ன கம்பசூத்திரம்? ஒரு தடவைக்கு இரு தடவை யோசிப்போம்'' என்று பாட்டி பதிலளிக்க, கிருஷ்ணா அந்த பதிலின் தாத்பர்யத்தைப் புரிந்து கொள்ளாமல் ''கரெக்ட். பாட்டிக்கு ஐந்து மார்க்'' என்றாள். 'இருமுறை யோசி' என்பதுதான் படத்தில் மறைக்கப்பட்ட வார்த்தைகள். ''இதென்ன கூத்து? சிரிப்புத் திருடன் சிங்காரவேலு கணக்காயில்லே இருக்கு'' என்றபடியே மதிப்பெண்களை முடிந்து கொண்டார் பாட்டி.

''இப்போ ரொம்ப சுலபமான கேள்வி'' என்று அருண் கேட்க, சேதுராமன் தனக்கு அந்தக் கேள்விக்கு பதிலளிக்க வாய்ப்பு கிடைத்ததற்காகப் புன்னகைத்துக் கொண்டார். கூடவே ''சுலபமான கேள்விக்கு பதிலளிக்க முடியவில்லையென்றால்?'' என்ற கேள்வி வேறு அவரை வாட்டியது. அவர் பயந்தது போலவே அந்த எளிமையான கேள்விக்கு அவரால் பதிலளிக்க முடியவில்லை. ''பள்ளியில் எனக்கு வலது பக்கம் யார் உட்காருவாங்க?'' என்ற அருணின் கேள்விக்கு பங்குகொண்டவர்களில் யாருக்கும் விடைதெரியவில்லை. பார்வையாளராக இருந்த அவனது அம்மா ''அஸ்வின்'' என்று பதில் கூற, அருண் மறுத்தான். ''இல்லை. அவன் என் இடது பக்கம்தான் உட்காருவான். நான்தானே என் பெஞ்சிலே மூலையிலே உட்கார்றேன். எனக்கு வலது பக்கம் யாரும் உட்கார மாட்டாங்க என்பதுதான் சரியான பதில்'' என்று கூறி மற்றவர்களின் ஏக்கத்தைப் பொங்க வைக்கும் வகையில் தனக்கே முழு மதிப்பெண்களைக் கொடுத்துக் கொண்டான்.

''இப்ப எங்களுக்கு தீபாவளிக்கு லீவு விட்டாங்க. புத்தாண்டு தினமான ஜனவரி ஒண்ணாம் தேதியும் லீவு. அடுத்தது என்னிக்கு விடுமுறை?'' என்று சரண்யா கேட்க, முதல் தடவையில் ''போகி'', ''பொங்கல்'' என்றெல்லாம் விடைகள் வந்தன. திடீரென்று இரண்டாவது ரவுண்டைத்தானே எடுத்துக் கொண்ட லோசனா ''புத்தாண்டு தினம் சனிக்கிழமை வந்தது. அடுத்த நாளான ஞாயிற்றுக் கிழமையே உங்களுக்கு விடு முறைதானே?'' என்று 'மிகச் சரியான' பதிலைக் கூறவும், சரண்யா அவருக்கு ஐந்து மதிப்பெண்களை அள்ளித் தர சம்மதித்தாள். ஆனால் ''ஒருத்தருக்கு ஒரு சான்ஸ்தான். இந்த ஆன்ட்டி ரெண்டாவது ரவுண்டிலே தான் பதில் சொன்னாங்க'' என்று தீபிகா விவாதிக்க, கூச்சலைத் தாங்க முடியாத அருண் ''இந்தக் கேள்விக்கான மதிப்பெண்களை நமக்கே போட்டுக் கொள்வோம்'' என்று முடிவெடுத்தான்.

''குரங்கு பூனைகளுக்கு அப்பத்தைப் பிரிச்சுக் கொடுத்த மாதிரி இருக்குது'' என்றார் ஸ்ரீனிவாசன்.

இதுபோல் கலகலப்பான வேறு சில கேள்விகளுடன் நிகழ்ச்சி முடிந்தது. பங்கு கொண்டவர்களில் யாருமே பத்து மதிப்பெண்கள் கூட எடுக்கவில்லை. ''40'' மதிப்பெண்கள் எடுத்த க்விஸ் மாஸ்டர்கள் குழுவே வெற்றி பெற்றது என்று நாம் அறிவித்ததும் பலத்த கைதட்டல். பங்கு கொண்டவர்கள் க்விஸ் மாஸ்டர்களிடம் போய்க் கைகுலுக்கிப் பாராட்டியதும் வித்தியாசமாக இருந்தது.

– ஜி.எஸ்.எஸ்.

## குழந்தைகளைப் புரிந்து கொள்வோம்!

அன்று அலுவலகத்தில் சேர்ப்பிக்கப்பட வேண்டிய ஓர் அறிக்கையை நான் (வீட்டில்) அவசரமாக 'டைப்' செய்து கொண்டிருந்தேன். என் குழந்தை சட்டையைப் பிடித்து இழுத்து, தான் நாய் பொம்மைக்குச் செய்திருந்த அலங்காரத்தைப் பார்க்கச் சொன்னது. எனக்கு முதலில் கோபம் வந்தது. பிறகு சிந்தித்தேன். அலுவலகமும் அறிக்கைகளும் என்றும் இருக்கும். ஆனால், இக்குழந்தைப் பருவம் விரைவில் கடந்து விடும். இது பிறகு என்றுமே கிடைக்காத ஒரு வரப்பிரசாதம். வேலையை நிறுத்தி குழந்தையை அள்ளி அணைத்து தன் கற்பனைக்கேற்ப அது செய்திருந்த அலங்காரத்தைச் சிலாகித்தேன். அதன் மதிப்பில் 'ஹீரோ'வான என்னுடைய பாராட்டுதலையே பெற்று விட்டதில் அதற்கு அளவற்ற மகிழ்ச்சி.



- எஸ். தியோடர் பாஸ்கரனின் கட்டுரையிலிருந்து

தகவல் : அ. ஷண்முகசுந்தரம்

# தயாரிப்பாளருக்கு வாசகிகளின் யோசனைகள்!

அன்றாட வாழ்க்கையில் நாம் உபயோகிக்கும் பொருட்களில் சிறு சிறு மாற்றங்கள் செய்யப்பட்டு பொருட்கள் கிடைத்தால் நன்றாக இருக்குமே என நினைக்கும் இல்லத்தரசிகள் எத்தனையோ பேர்.

உதாரணமாக ஒரு பொருளை இவ்வாறு வடிவமைத்தால் மேலும் உபயோகமாக இருக்கும் என்று ஒரு பெண்மணி எழுதினால், அதைப் படிக்க நேரும் நிறுவனங்களுக்கும் அந்த யோசனையை ஏற்று இல்லத்தரசிகளுக்கு உதவலாமே! அவர்களுக்கும் நல்ல வியாபாரம் ஆகும்.

* தற்சமயம் கிடைக்கும் வடிவம்



* புதிய வடிவம்






எண்ணெயில் பொரித்த பொருட்களை வைக்கத் தற்சமயம் கிடைக்கும் பாத்திர வடிவம் அலமாரியில் வைக்க சௌகரியமாக இல்லை. மேலும் அவை தற்காலிகமாக வைக்கும் பொருட்டே உருவாக்கப்பட்டிருப்பதால் மூடியும் ஓரசாக இருக்கிறது. அதனால் பொருட்கள் நமுத்தும் போய் விடுகிறது. இதைத் தவிர்க்க வாட்டர் ஃபில்டர், காப்பி ஃபில்டர் வடிவத்திலேயே அந்தப் பாத்திரத்தை வடிவமைத்தால் நன்றாக இருக்கும். மேல் பாத்திரம் எட்டு அல்லது பத்து அங்குல உயரம், கீழ் பாத்திரம் 3 அங்குல உயரம் என்றும் இருந்தால் நன்றாக இருக்கும். மூடியும் சம்புட மூடி போல் இறுக்கமாக இருக்கும்பட்சத்தில், பொரிக்கப்பட்ட தின்பண்டங்களை தீரும் வரை அதிலேயே வைத்துப் பயன்படுத்தலாம். அடித் தூள்களில் எண்ணெய் சேர்ந்து கொண்டு வீணாவதும் தவிர்க்கப்படும்.

## பிளாஸ்டிக் செருப்பு வைக்கும் ஷெல்ஃப் :

2. அடுக்கு மாடிக் கட்டிட வாசம் அதிகரித்துள்ளதால் இடப்பற்றாக்குறை வீட்டில். சில வீடுகளில் செருப்பிற்கென்று இடம் இருப்பதில்லை. இருந்தாலும் போதவில்லை. பெரும்பாலான வீடுகளில் செருப்பு பால்கனியில்தான். இருநூறும், முந்நூறும் கொடுத்து வாங்கும் ஷூக்கள் மழையில் நனைந்து வீணாகாமல் இருக்க, கதவுடன் கூடிய பிளாஸ்டிக் ஷெல்ஃப் உருவாக்கினால் என்ன? உட்புறம் கம்பி இருக்கலாம், வெளிப்புறம் மட்டும் பிளாஸ்டிக். நல்ல கெட்டியான பிளாஸ்டிக். காற்று போக இரண்டு துளைகள் வைக்கலாம். இல்லையெனில் தோல் செருப்புகள் பாழாகி விடும்.

– நிரஞ்சனா பாலு


காளி சமையலறை சாதனம்-
உங்கள் சிறப்பைப் பறைசாற்ற உதவும்.
நீங்கள்... சமையல் கலையில்
தேர்ச்சி பெற்ற நாகரீக நங்கை.
சிறந்தவையே உங்களுக்குத் திருப்தி
தரும்.
காளி காப்பர் பாட்டம் சமையலறை
சாதனங்கள்-மிக உயர்ந்த தரமான
ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் மற்றும்
காப்பர் பயன்படுத்தித் தயாரிக்
கப்பட்ட இவை மட்டுமே ISI
முத்திரை கொண்டவை. கிட்டதட்ட
கடந்த 50 ஆண்டுகளில் 25-க்கு
மேற்பட்ட வகைகளில்
சாதனங்களை வடிவமைத்துள்ளது
காளி. அனைத்தையுமே வாங்க
வேண்டும் என்ற ஆவல்
அனைவருக்கும் உருவாகும்.
இவற்றால் ஏற்படும் பெருமையை
அனுபவித்து மகிழுங்கள்.
kali
KOOK'S KLUB
பெயர்
முகவரி
அனுப்ப வேண்டிய முகவரி :
காளி பிராண்ட், மதராஸ் ரோடு,
கும்பகோணம் 612 002.
இந்தக் கூப்பனை அனுப்புங்கள்.
உங்களை உறுப்பினராகச்
சேர்த்துக் கொள்கிறோம்,
இலவசமாக! புதுப்புது சமையல்
குறிப்புகள் ஒவ்வொரு மாதமும்
உங்களுக்கு அனுப்பி வைக்கப்
படும்! சமையல் குறிப்புப்
போட்டிகளில் பரிசுகளை
வெல்லும் வாய்ப்பும் உண்டு.
இப்போதே பதிவு செய்து
கொள்ளுங்கள்.
kali®
அனைவருக்கும் விருப்பம்
ஒரு சிலருக்கே அதிர்ஷ்டம்!
FOUNTAINHEAD 875-93
காளி பிராண்ட், 426 பி. மதராஸ் ரோடு, கும்பகோணம் 612 002.
ஃபேக்ஸ் : 435-23048
உலகத் தரம் வாய்ந்த காப்பர் பாட்டம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

ஒரு ரிக்ஷாக்காரர் ஒரு தாயிடம் சொன்னாராம் :

"உங்க கொழந்தைய ஸ்கூலுக்கு இட்டுனு போக 25 ரூபா. புத்தகப் பையத் தூக்கினு போக அம்பது ரூபா!" - இது ஒரு நகைச்சுவைத் துணுக்குத்தான். இருந்தாலும் இது உண்மையும் கூட.

இன்றைய பள்ளிக் குழந்தைகள் தங்களது மூளையில் சுமக்கும் அறிவுச் சுமையைவிட தோள்களில் சுமக்கும் புத்தகச் சுமை 10 மடங்கு

# பள்ளிக்கூடம் போவது சுகமா? சுமையா?

அதிகம். இதனால் குழந்தைகளுக்கு எலும்புகள் சீக்கிரத்தில் தேயும் அபாயமும் முதுகுத் தண்டு வளை யும் அபாயமும் இருக்கிறது. சமீபத் தில் மனிதவள மேம்பாட்டு மையம் இந்தப் புத்தகச் சுமையைக் குறைப் பது பற்றியும், சின்னஞ்சிறார் களுக்கு வீட்டுப் பாடம் கொடுப்பது தடுக்கப்பட வேண்டும் என்பது பற்றியும் ஒரு முடிவெடுத்துள்ளது. மேலும் மாநிலங்களிலுள்ள பள்ளிகளில் சென்ட்ரல் போர்டு,



★ விஜயலட்சுமி



★ மணிமேகலா



★ சீதா



★ மைதிலி



★ லலிதா

ஸ்டேட் போர்டு என்ற பிரிவுகளும் இருக்கக் கூடாது என்றும் 'கேந்திரிய வித்யாலயா' மற்றும் 'நவோதயா' பள்ளிகள் தவிர மற்ற பள்ளிகள் அனைத்தும் 'ஸ்டேட் போர்டு' எனப்படும் மாநிலக் கல்வி மையம் தரும் பாடத் திட்டங்களையே பின்பற்ற வேண்டும் என்றும் முடிவெடுக்கப்பட்டுள்ளது. இந்த முடிவு நடைமுறைப் படுத்தப்பட்டால் அதன் விளைவு எப்படி இருக்கும்?

**திருமதி மணிமேகலா தெய்வசிகாமணி :**
முதல்வர், லியோ மெட்ரிகுலேஷன் ஹையர் செகண்டரி ஸ்கூல், அண்ணா நகர்.

"என்னைப் பொறுத்தவரை குழந்தைகள் பள்ளிக்குப் போவதை ஒரு சுகமாக நினைக்க வேண்டுமே தவிர சுமையாக இருக்கக் கூடாது. குழந்தைகள் சிட்டுக் குருவிகள் போல சந்தோஷமாகப் பறந்து திரிய வேண்டியவர்கள். அந்தப் பிஞ்சு தோள்களில் பாரத்தை ஏற்றி குழந்தைகள் நடக்கவே முடியாமல் தள்ளாடிக் கொண்டு வருவதைப் பார்க்க வேதனைதான். இந்த முறை மாற்றப்பட வேண்டும் என்ற முடிவு வரவேற்கத்தக்கது. பள்ளியில் படிக்கும் பாடங்களுக்கான புத்தகம் நோட்டுப் புத்தகம் முதலியவைகளை பள்ளியிலேயே வைத்துக் கொள்ளலாம்.

'ஹோம் ஒர்க்' விஷயமும் ஒத்துக் கொள்ளக்கூடியதுதான். 'ஹோம் ஒர்க்' செய்யாவிட்டால் மிஸ் அடிப்பார்கள் என்ற எண்ணம் குழந்தைகளின் மனத்தில் கிலியைத் தோற்றுவிக்கிறது. அந்த கிலி பள்ளிக் கூட நாட்களில் விளையாடவோ அல்லது வெளியில் செல்லவோ விடாமல் குழந்தைகளைத் தடுக்கிறது. குழந்தைகள் எப்பொழுதும் உற்சாகமாக, துள்ளலும் துடிப்புமாக இருக்க வேண்டும். வயதான பிறகு கவலைகள் தானாக வந்து விடுகிறது. துள்ளித் திரியும் பருவத்தில் ஏனிந்த ஹோம் ஒர்க் கவலை அவர்களுக்கு?

'சென்ட்ரல் போர்டு' - பாடத் திட்டங்கள் உயர்ந்தது. அது அதிகம் என்ற கூற்றை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். ஆனால் மாநிலங்களிலுள்ள பள்ளிகள் அனைத்தும் அந்தந்த மாநில பாடத் திட்டத்தைப் பின்பற்ற வேண்டுமென்பதும் சிரமமான காரியம். ஏனென்றால் மத்திய அரசு அலுவலகங்களில் பணிபுரிபவர்களுக்கு மாற்றல் நிச்சயம். அந்த நேரங்களில் இது ஒரு பெரிய பிரச்னையாகி விடும். அதனால் பாடத் திட்டங்கள் மாற்றம் நடைமுறைப்படுத்தப் பட்டால் சிரமமாக இருக்கும்."

**திருமதி கீதா பாலசுப்ரமணியம் :**
குடும்பத் தலைவி.

"குழந்தைகளுக்கு 'ஹோம் ஒர்க்' அவசியம்தான். என்னதான் ஸ்கூலில் எழுதினாலும் வீட்டிலும் எழுதும் பழக்கம் அவசியம். என் தந்தை சொல்வதை இங்கு நினைவு

சகோதரி
கமலா கேசரோலில்
சாதம் + நீர் சரியாகிவிட்
டது என்று எழுதி இருந்தார்.
கேசரோல் இல்லாதவர்கள் சாதப்
பாத்திரத்தின் வாய்க்குப் பொருத்த
மான மூடியில் மூடி மேலே ஓர் அடுக்கு
போன்ற பாத்திரத்தைக் கவிழ்த்து விட்டா
லும் சாதம் பொலபொலவென்று ரெடியாகி
விடும்.
- கே. லக்ஷ்மி


எனது
நம்பிக்கை
"சனோலா"வில்
செய்த
உணவில் தான்.
SUNOLA
சனோலா —
வாங்குவதற்கேற்ப
எளிதான
அளவுகளில்
கிடைக்கிறது.
நான் ஒரு புதுமைப் பெண். தன்னம்பிக்கை, அறிவுதிறன், தனித்தன்மை நிறைந்த உணர்ச்சிகளின் பிரதிபலிப்பு.
என்னுடைய வழிமுறைகளை நன்கு உணர்ந்ததுடன், என் குடும்பத்திற்கும், எனக்கும் தேவையான நன்மைகள் அறிந்து செயல்படுவதில் மிக உறுதியாக இருக்கிறேன்.
நான் சமையலுக்கு உபயோகிப்பது, சுவையான, ஆரோக்கியமான, நம்பிக்கைத்தரும்
சனோலா
SUNOLA
தமிழ்நாடு அக்ரோ இண்டஸ்ட்ரீஸ் கார்ப்பரேஷன் லிமிடெட்
"அக்ரோ ஹவுஸ்", திரு.வி.க. தொழிற்பேட்டை, கிண்டி, சென்னை-600 032.

> தோல்விகளுக்குப் பிறகு உண்மையிலேயே சக்திமிக்க மனிதனாக நீங்கள் திகழ வேண்டுமானால், இப்போது முதலே 'போதும் போதும், நான் பார்த்துக் கொள்கிறேன்' என்று வெற்றி தேவதையே உங்களுக்கு உத்தரவிடும்வரை முயற்சி செய்து கொண்டே இருங்கள்.
>
> - நார்மன் வின்சென்ட் ஃபீல்
>
> தகவல் : எஸ். விஜயா

கூறுகிறேன். பத்து முறை படிப்பதற்குச் சமமானது ஒருமுறை எழுதுவது என்பார். எழுதும் போது குழந்தைகளுக்கு மனத்தில் சீக்கிரமாக பதிந்து விடுகிறது. மேலும் டீ.வி. பார்ப்பதிலிருந்து ஓரளவு கட்டுப்படுத்துகிறது. ஹோம் ஒர்க் செய்யாவிட்டால் டீச்சர் அடிப்பார் என்ற நினைவு குழந்தையை ஹோம்ஒர்க்கில் கவனம் செலுத்தி டீ.வி. பார்ப்பதிலிருந்து தடுக்கிறது.

பாடத் திட்டங்கள் மாநிலம் முழுவதும் ஒன்றாக இருக்க வேண்டும் என்பது மிக அவசியமான ஒன்று. எங்களைப் போன்ற மாநில அரசு வேலையிருப்பவர்களுக்கு சிறு சிறு ஊர்களுக்குக் கூட மாற்றல் ஏற்படும். பெரிய நகரங்களில் இருக்கும் போது மத்திய அரசு பாடத் திட்டப் பள்ளியில் சேர்த்து விட்டால் வேறு ஊருக்குப் போகும் போது அந்த ஊரில் 'சென்ட்ரல் போர்டு' பள்ளி இல்லாவிட்டால் குழந்தைகள் சிரமப்படுவார்கள். இப்போது 'சென்ட்ரல் போர்டு' பள்ளி என்றால் ஏதோ உயர்ந்தது என்ற எண்ணம் உலவி வருகிறது. இந்த எண்ணம் குழந்தைகளுக்குக்கிடையே ஒரு 'காம்ப்ளெக்ஸை' உண்டாக்குகிறது. இந்த முறை கண்டிப்பாக மாற்றப்பட வேண்டும்.''

### திருமதி விஜயலக்ஷ்மி ராஜேந்திரன் :

''குழந்தைகளுக்குப் புத்தகச் சுமை அதிகம்தான். அந்தப் புத்தகப் பையை நம்மாலேயே தூக்க முடியவில்லை. அவர்களால் எப்படி முடியும்? ஸ்கூல் பக்கத்தில் இருந்து தானே வீட்டிற்கு வரத் தெரிந்தாலும் நாம் போக வேண்டியிருக்கிறது. ஏனென்றால் புத்தகப் பையை அவர்களால் தூக்க முடிவதில்லை. நாம் படிக்கும் காலத்தில் எல்லாம் புத்தகங்களை நம்முடைய டெஸ்கிலேயே வைத்து விட்டு வருவோம். வீட்டுப் பாடம் செய்ய வேண்டியவைகளை மட்டும் எடுத்துக் கொண்டு வருவோம். இப்போது ஸ்கூலிலேயே வைத்து விட்டு வந்தால் பாதுகாப்பாக இருக்குமா என்ற சந்தேகம் இருக்கிறது. நம்மால் ஒன்றிரண்டு குழந்தைகளுடையவைகளையே கவனிக்க சிரமமாக இருக்கும் போது அத்தனை குழந்தைகளுடையதையும் எப்படிச் சமாளிக்க முடியும்? இது ஓர் இரண்டுங்கெட்டான் நிலைதான்.

'ஹோம் ஒர்க்' கொஞ்சமாக இருக்க வேண்டும் என்பது என் கருத்து. குழந்தைகள் ஸ்கூலிலிருந்து வந்ததிலிருந்து 'ஹோம் ஒர்க்'தான் செய்கிறார்கள். 'பாலைக் குடி, டிபன் சாப்பிடு' என்றால் கூட 'இருங்கம்மா ஒரு சப்ஜெக்ட் ஹோம் ஒர்க்காவது முடிச்சுட்டு வரேன்' என்றுதான் பதில் வருகிறது. குழந்தைகளைப் பார்க்கப் பரிதாபமாக இருக்கிறது. ஸ்கூலில் எழுதிக் கொண்டே தானே இருக்கிறார்கள். வீட்டிற்கு வந்தாவது அவர்களுக்கு ரிலீஃப் வேண்டாமா?''

### திருமதி மைதிலி சதானந்த குரு :

''இந்தக் காலத்துக் குழந்தைகள் மிகவும் துடிப்பானவர்கள். எதையும் சீக்கிரமாக கிரகித்துக் கொண்டு விரைவில் செய்து முடிப்பவர்கள். அப்படிப்பட்ட குழந்தைகளுக்கு வேலை கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். அதனால் ஹோம் ஒர்க் மிக அவசியம். பள்ளியில் குறைந்தபட்சம் 40 குழந்தைகளாவது இருப்பார்கள். அத்தனை பேருக்கும் டீச்சரால் தனி கவனம் செலுத்தி எழுதச் சொல்ல முடியுமா? ஹோம் ஒர்க் கொடுத்தால் வீட்டில் பெற்றோரின் தனி கவனத்தில் குழந்தையின் படிப்புத் தரம் உயரும். ஹோம் ஒர்க்

இல்லையென்றால் குழந்தைகளுக்கு படிப்பின் நினைவே வருவதில்லை.

இன்றைய குழந்தைகளுக்குப் புத்தகச் சுமை அதிகம்தான். ஆனால் அவசியம். பள்ளியில் நடக்கும் பாடங்கள் என்ன வென்று தெரியாமல் வீட்டில் எப்படிச் சொல்லிக் கொடுப்பது? நாம் படித்த விதம் வேறாக இருக்கும். புத்தகங்களை வீட்டிற்குக் கொண்டு வந்தால்தான் அந்த முறையைப் பின்பற்றிச் சொல்லிக் கொடுக்க முடியும். குழந்தைகளால் தூக்க முடியாவிட்டால் பெற்றோர் தூக்கி வரலாம். வேலைக்குச் செல்லும் பெற்றோர் என்றால் ஆயா வைத்துக் கொள்ளலாம். குழந்தையின் படிப்புக்காக கூடுதலாக ரூ 50/- செலவழிக்க முடியாதா என்ன?''

**லலிதா ராஜகோபால் :**
(பத்மா சேஷாத்திரி
பள்ளி ஆசிரியை)

''மாணவ மாணவியர்கள் படுக்கும் முன் மறுநாள் அட்டவணையில் உள்ளதற்கு ஏற்றவாறு பையில் வைத்துக் கொண்டால் காலை நேரக் கெடுபிடியில் எல்லா நோட்டுப் புத்தகங்களையும் பையில் திணித்துக் கொண்டு போவதைத் தவிர்க்கலாம். ஆசிரியர்களும் ஆங்கிலத்திலோ, கணிதத்திலோ (ஒவ்வொன்றிலும் இரண்டு மூன்று பிரிவுகள் இருக்கே!) எந்தக் கிழமையில் எந்தப் பாடம் எடுக்கப்படும் என்பதை திட்டவட்டமாக முடிவு செய்து பிள்ளைகளுக்குத் தெரிவித்தால், அவர்கள் எல்லா நோட்டுப் புத்தகங்களையும் கொண்டு வருவதைத் தவிர்க்கலாம். சிறிது கவனமாக புத்தகங்களை உபயோகிக்கும் முறையைக் கையாண்டால் அவற்றை பைண்ட் செய்வதைத் தவிர்த்து, (அவசியம் என்றால் நல்ல பருமனான கிழிசல் ஏற்படாத கண்ணாடி காகிதங்களை பயன்படுத்தலாம்) பெற்றோர்கள் பிள்ளைகளின் பொதி மூட்டையை (சுமையை) சுகமான பையாகவே மாற்றி விடலாம். பெற்றோர்களும், ஆசிரியர்களும் சேர்ந்து ஒத்துழைத்தால் நம் பிள்ளைகள் பாடு யோகம்தான்.

ஆசிரியர்கள் பள்ளியில் கற்றுக் கொடுக்கும் பாடத் திட்டத்தினை கற்று விட்டார்களா என்பதை முடிந்தவரை க்விஸ், சார்ட்ஸ், கார்ட்ஸ் போன்ற முறைகள் மூலம் பள்ளி அறையிலேயே பரிசோதித்து விட்டு, அதை எப்படி நடைமுறை வாழ்க்கைக்கு பயன்படுத்துகிறார்கள் என்பதறிய வாரத்தின் கடைசி நாட்களில் சிறு சோதனை மூலம் அறியலாம். இதனால் வீட்டுப் பாடம் என்றாலே வெறுப்புத் தட்டாமல், அதில் முழுமையாக தங்களை ஈடுபடுத்தி வெற்றியும் பெறுவர்.

பேட்டி : புஷ்பாரமணி

---

# இம்மாத இல்லத்தரசி

**சமையல் கூப்பன்**

பொருள் :ஜஸ்      கடைசி தேதி : 15.2.'94

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

## எழில் கேசத்தின் ரகசியம்!




# அஸ்வினி

ஹோமியோ ஹேர் ஆயில்

**புதிய நற்குணங்களுடன் கூடிய சுத்தமான தேங்காய் எண்ணெய் கலந்தது**

- பிசுபிசுப்பற்றது.
- நரைமுடி, மற்றும் முடி உதிர்வதைத் தடுக்கிறது.
- வளமான ஆரோக்கியமான முடி வளரத் தூண்டுகிறது.

இதற்கு மேலும் கூறிட வேண்டுமா...
இன்றே உபயோகித்துப் பாருங்கள்.

**அஸ்வினிக்கு நன்றி!**

வணக்கம். நான் தற்போழுது தங்களின் அஸ்வினி ஹேர் ஆயிலை பயன்படுத்தி வருகின்றேன். அதை உபயோகித்ததில் இருந்து எனது தலைமுடி மிக நன்றாக வளரத் தொடங்கியுள்ளது. மேலும் ஒருவித உற்சாகத்தை உணர்கின்றேன்.

தங்களது தயாரிப்புக்கு எனது வாழ்த்துக்கள்.

ஹால்ஸ் நாராயணன்
ஸ்ரீ மலர் மெடிக்கல்ஸ், சாயிபாபா காலனி
கோவை 641 011.

MAC/1510

தயாரிப்பாளர்:
அஸ்வினி ஹோமியோ பார்மஸி
5-283 A, HPரோடு, ரூனாபெட், ஹைதராபாத் 500 018.

அனைத்து பிரபல கடைகளிலும் கிடைக்கும்.

**விரைவில் எல்லோர் நினைவிலும் நிலைத்து நிற்கும் ஹேர் ஆயில் — அஸ்வினி!**

## இந்த மாயாஜால கம்பளத்தின் இரகசியங்களை கண்டுகொள்ளுங்கள்




- **துவைக்கக் கூடியது & கறை எதிர்க்கவல்லது**
  ஸப்னா கறையை எதிர்க்க வல்லது மற்றும் துவைக்கும் ஒவ்வொரு முறையும் புத்தம் புதியதாக விளங்கும்.
- **நீடித்துழைக்கக்கூடியது**
  ஸப்னா கார்பெட்கள் மற்றும் மேட்கள் கிழிக்க முடியாத நூலினைக் கொண்டு நெய்யப்படுவதால் வருடாவருடம் நீடித்துழைப்பதை உறுதிப்படுத்துகிறது.
- **கவர்ச்சிகரமான டிசைன்கள்**
  பரவசமூட்டும் வண்ணங்கள் மற்றும் டிசைன்களின் அணிவரிசையிலிருந்து நீங்கள் உங்கள் அறைகளின் வண்ண எழிலுக்கேற்ப தேர்ந்தெடுக்கலாம்.
- **பன்முக உபயோகம்**
  உங்கள் இல்லத்தின் பல்வேறு உபயோகங்களுக்கு ஸப்னா கார்பெட்கள் & மேட்கள் கச்சிதமானவை. பூஜை செய்ய, உட்கார, உண்ண, படுக்க, உல்லாசப் பயணத்திற்காக மற்றும் குழந்தைகள் விளையாட போன்ற உபயோகங்களுக்கான மேட்களிலிருந்து உங்கள் இல்லத்தின் பிரதான அறைக்கு தேவையான அலங்கார மைய விரிப்பு வரையிலான மேட்கள் அணிவரிசை உள்ளது.
- **அளவு வரிசை**
  ஸப்னா கார்பெட்கள் & மேட்கள் (30x45 செ.மீ. லிருந்து 270x360 செ.மீ.) வரையிலான அளவுகளில் கிடைக்கின்றன.
- **ஜப்பானிய தொழில் நுட்பம்**
  அஸாஹோ மெஷின் மேனுஃபேக்சரிங் கம். லிட்., ஒகயாமா, ஜப்பான் நிறுவனத்தினர் வழங்கும் ஜப்பானிய தொழில்நுட்பத்தின்படி ஸப்னா கார்பெட்கள் & மேட்கள் தயாரிக்கப்படுகின்றன.

**Sapana**
CARPETS & MATS

**SAPANA POLYWEAVE PVT. LTD.**
158, C.S.T. Road, Kalina, Santacruz (East), Bombay 400 098.

AXIS/S001/17

# இச்சிதனை முகர்ந்தால்...

13

**வா**ஞ்சி இடது கால் தொடையைத் தடவிக் கொண்டான். பதினாலு வயசில் அம்மா போட்ட சூடு. பழி ஓரிடம் பாவம் ஓரிடம் என்பது அவன் விஷயத்தில் அன்றும் சரி இன்றும் சரி, சரியாய்த்தானிருக்கிறது.

அப்போது அவர்கள் குடியிருந்த வீட்டின் சொந்தக்காரருக்கு நாலும் பெண்கள்தான். மனைவி இறந்து விட்டாள். வீட்டுக்காரர் தன் பட்டறைக்குக் காலையில் சென்று விட்டால் இரவுதான் வீடு திரும்புவார். நாலு பெண்களுமே வாஞ்சியை விட பெரியவர்கள். கடைசி பெண் அவனை விட ஒரு வயது பெரியவளாயிருப்பாள். யாருக்கும் கல்யாணமாகவில்லை. அவர்களின் துணைக்கு ஊரிலிருந்து ஒரு கிழவியை அழைத்து வீட்டோடு வைத்திருந்தார் வீட்டுக்காரர். சமையல் சாப்பாடு முடிந்ததும் கிழவி பாட்டுக்கு ஒரு மூலையில் விழுந்து கிடப்பாள். பெண்கள் நால்வரும் வாசற்புறமாய் அமைந்திருக்கும் அறையில் அமர்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டும் போகும் வரும் மனிதர்களை, முக்கியமாய் பெண்களைப் பற்றி கன்னாபின்னாவென்று பேசி வம்படித்துக் கொண்டும் இருப்பார்கள். இதெல்லாம் அப்போது வாஞ்சிக்குத் தெரியவில்லை. அந்த வயதுக்கே உரிய விஷமத்தனம்தான் எல்லாரையும் போல் அவனிடமும் இருந்தது. அந்த நாலு பெண்களும் பொழுது போகவில்லையானால் வாஞ்சியை கூப்பிட்டு வைத்துக் கொண்டு அவனைச் சீண்டி விட்டு கேலி செய்து சில நாள் அவனை அழ வைத்துக் கூட அனுப்பியிருக்கிறார்கள்.

அப்படித்தான் ஒருநாள் இரண்டாவது பெண் வாஞ்சி இவர்களைக் கண்டு மெல்ல நழுவிச் செல்வதைப் பார்த்து விட்டு, ''சரியான பயந்தாங்கொள்ளியா இருக்கியே. எதுக்கு எங்களைப் பார்த்து பயந்து ஓடறே'' என்றாள்.

வாஞ்சிக்குக் கோபம் வந்தது.

''நா ஒண்ணும் பயந்து ஓடலை'' என்றான் ஆக்ரோஷத்தோடு.

''அப்போ ஆம்பளைதான்னு சொல்லிக்கறயா?''

''ஆமா!''

''ம்ஹா~ம்! நீ ஆம்பளைதான்னு நாங்க ஏத்துக்கணும்னா நாங்க சொல்றபடி நீ செய்யணும்.''

''என்ன செய்யணும்?''

''அதோ பார் தெரியுதா. அதோ அந்த பச்சை கேட் போட்ட வீட்டு வாசல்ல ஒரு பொண்ணு நிக்கறால்ல? அவகிட்ட போய்...''

''அவ்வோதான. த பாருங்க போறேனா இல்லையான்னு. கொண்டாங்க'' என்று



-வித்யா சுப்ரமணியம்

அவர்கள் கொடுத்த ரூபாயை வாங்கிக் கொண்டு ஓடினான்.

ரூபாயை அந்தப் பெண்ணி டம் நீட்டி விட்டு வாஞ்சி ஏதோ கூறினான். ஒரு க்ஷணம்தான். பளா ரென்று கன்னத்தில் விழுந்த அறையைத் தாங்க முடியாமல் தெருவில் போய் விழுந் தான். அந்தப் பெண் ஆக்ரோஷமாய் ஓடி வந்து கொத்தாக அவன் தலைமயிரைப் பிடித்துத் தூக்கி நிறுத்தி,

''ராஸ்கல்! பிஞ்சுலயே பழுத்துட்டயா? யார்ட்ட வந்து என்ன கேக்கறடா நீ! உருப் படுவியா?'' என்று திட்டிக் கொண்டே அவ னைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு வந்தாள். வாஞ்சி முன்னறை ஜன்னல் பக்கம் பார்வையைச் செலுத்தும் போது ஜன்னல் சாத்தியிருந்தது. பெண்கள் நால் வரும் சாதுவாகத் தூங்கிக் கொண்டிருந்தனர் கூடத்தில்.

அம்மாவிடம் விஷயம் சொல்லப்பட்டது. பதினாலு வயசில் காக எடுத்துக் கொண்டு பெண் தேடிப் போன பின் ளைக்கு அம்மா கொடுத்த பரிசு இன்னமும் தொடையில் தழும்பாக இருக்கிறது. அவன் எவ்வளவோ சொல்லியும் அம்மா நம்ப வில்லை. பெண்கள் நால்வரும் அம்மா விடம் அவ்வளவு பவ்யமாக நடந்து கொள் வார்கள். அதனால் அம்மாவுக்கு அவர்கள் மேல் சந்தேகம் தோன்றவில்லை.

''ஒரு பொண்ணுகிட்ட போன்னு ஒரு பொண்ணே ரூபா குடுத்தனுப்புவாளாடா? திருடியிருக்க. பொய் சொல்றே. இப்ப இன் னொருத்தர் மேல பழியும் சொல்றியா?'' என்று அறைய வந்தாள்.



அதற்குப் பிறகு அந்த வீட்டிலிருந்து காலி செய்து கொண்டு வேறு இடம் போய் வாஞ்சி தான் உண்டு தன் வேலை உண்டு என்று எவ்வளவோ டீசண்ட்டாக வளர்ந்து டீசண்ட்டான உத்தியோகம் பார்த்து கார், வீடு என்று கௌரவமாய் வாழ ஆரம்பித்தும் சடக்கென்று அம்மா பழசை உவமை சொல்லி இன்னும் 'நீ பொறுக்கிதான்' என்றதை அவனால் தாங்க முடியவில்லை.

வாஞ்சிக்கு சட்டென்று ஒரு யோசனை உதித்தது. அந்தப் பழைய வீட்டுக்குப் போய் பார்த்தால் என்ன? அது அவர்களின் சொந்த வீடுதானே? பெண்களைப் பிறகு பார்க்கவே யில்லை. இப்போது யார் யார் எங்கெங்கு கல்யாணம் பண்ணிக் கொண்டு போயிருக் கிறார்களோ? உள்ளூரில் எவளாவது ஒருத்தி இருந்து 'அன்று நடந்ததில் வாஞ்சி மீது தவறு ஏதும் இல்லை. நாங்கள் சொன் னதைத்தான் செய்தான் என்று அம்மாவிடம் வந்து சொன்னால் அம்மா மனசு மாறுமோ? பதினாலு வயசில் ஏற்பட்ட பழி நீங்கினால் இருபத்தெட்டு வயசில் விழுந்த பழியும் தன்னால் நீங்குமோ?

வாஞ்சி காரை அந்த வீடு செல்லும் பாதை நோக்கிச் செலுத்தினான்.

**வீ**டு ஹாவென்று இருளடைந்திருந் தது. நடையில் முணுக்முணுக்கென்று ஜீரோ வாட் பல்பு எரிந்து கொண்டிருந்தது.

சார்... என்று அழைத்துக் கொண்டே உள்ளே போனான்.

ஒழுங்காயிருந்தவனைத் தூண்டி விட்டு, பழி ஏற்கச் செய்து துரத்தி அடித்த வீடு. பதினாலு வருஷ அஞ்ஞாத வாசத் திற்குப் பிறகு அந்த வீட்டிற்கு வருகிறான்.

சார்... மறுபடியும் அழைத்தான். கூடத் தில் நாப்பது வாட் பல்பு அழுது கொண் டிருந்தது. யாரும் இல்லாமல். அடுக்களை யில் ஏதோ சப்தம் கேட்டது.

''யாரு?'' என்றபடி வெளியில் வந்த வளை சட்டென்று அடையாளம் தெரிய வில்லை.

''நான்... நான் வாஞ்சி! மாடி போர் ஷன்ல குடியிருந்தோமே...''

அந்தப் பெண் சட்டென்று புரிந்து கொண்டு மௌனம் அனுஷ்டித்தாள். அவள் கண்களில் ஒரு கலக்கமும் வியப்பும் மாறி மாறித் தோன்றியது.

''நீங்க...'' என்று இழுத்தான்.

''நா அனுபமா'' என்றாள். ஓ! பெரிய வள். பதினாலு வருஷத்தில் நிறைய பழுத் திருந்தாள். உடம்பு தளர்ந்து தலை நரைத்து. கன்னம் ஒட்டி லேசாய் கூன் விழுந்திருந்தது.

''எப்படியிருக்கீங்க எல்லாரும்? பெரி யவர் சௌக்யமாருக்காரா?'' என்றான்.

''ம்ஹூம்!'' என்று பெருமூச்சு விட் டாள்.

''உடம்புக்கு ஒண்ணுமில்ல. வயசாய் டுச்சு. மனசுக்கும் நிம்மதியில்லாம, போச்சு. ஆசை ஆசையா எனக்குக் கல்யாணம் பண்ணிக் குடுத்தாரு. ஒரே வருஷம்தான் வாழ்ந்தேன். மூளை ஜுரம் வந்து என் புரு ஷனை வாரிக்கிட்டு போய்டுச்சு. கொழந்தை குட்டின்னு எதுவும் பொறக் கலை. எப்படிப் போனேனோ அதே மாதிரி திரும்பிட்டேன். அடுத்தாப்பல புவனாவுக் குக் கல்யாணம் பண்ணினார். அதுக்கப்புறம் அப்பாவோட பட்டறை நஷ்டத்துல ஓட ஆரம்பிச்சு, கடன் ஜாஸ்தியாகி வித்துட் டோம். கல்யாணம் பண்ணிக் குடுத்த புவ னாவின் புருஷனுக்கு இல்லாத பழக்கம் எது வுமில்லைன்னு அப்புறம்தான் தெரிஞ்சது. நிம்மதியில்லாத ஒரு வாழ்க்கை வாழ்ந்துட் டுக்கா. கல்யாணி புருஷன் நல்லவன்தான். ஆனா பரம ஏழை. ஏன்னா அப்பாட்ட பணமில்லாததால ஏழை மாப்பிள்ளைக்குக் கட்டிக் குடுத்துட்டார். ஏதோ கம்பெனில ப்யூனார்க்காரு. பணம் பத்தலை. ரெண்டு குழந்தைங்க வேற. இழுத்துக்கோ பிடிச்

சிலர் குக்கருக்குக் கொடுக்கும் துளைகள் உள்ள டிஸ்க்கை உபயோகிப்ப தில்லை. அதைக் கயிற்றில் கட்டி (இரண்டு பக்கமும்) தொங்கவிட்டு, டூத் பிரஷ், ஸ்பூன் போன்றவற்றைச் செருகி வைக்கப் பயன்படுத்த லாம்.

- பார்வதி



போளி
செய்வதற்காகப்
பிசைந்து வைத்துள்ள மைதா
மாவை நன்கு உலர்ந்த ஆட்டுக்
கல்லில் போட்டு ஒரு ஐந்து நிமிடம்
நன்கு அரைத்த பிறகு போளி செய்தால்
போளி மிகவும் மிருதுவாகவும், விள்ளா
மல் விரியாமலும் வரும்.
- ரமா சந்திரசேகர்

சுக்கோன்னு ஒரு வேளை சோறு திங்கறாங்க. இதெல்லாம் பார்த்தா கடைசி தங்கை மீனா! இந்த வீட்டுல இருந்தாச் சரிப் படாதுன்னு தானாவே ஒருத்தனோட ஓடிட்டா. எங்க இருக்கான்னே தெரியலை.''

வாஞ்சிக்குக் கேட்கவே சங்கடமாயிருந்தது. ஊரை வளைத்து வாயில் போட்டு மென்று துப்பிய பெண்கள் இப்படிச் சீரழிந்து போவார்கள் என்று அவன் ஒருநாளும் எண்ணிக் கூடப் பார்த்ததில்லை. இந்தக் கஷ்ட நிலையில் எப்படி அவளிடம் பழைய சம்பவத்தை நினைவுபடுத்தி உதவி கோருவது? குத்திக்காட்டுவது போல் ஆகாதா? நீ பண்ணின பாவம் அதனால்தான் இப்படி ஆகிவிட்டீர்கள் என்று இடித்துக் காட்டுவது போலாகாதா? வேண்டாம் அது பற்றி இவர்களிடம் எதுவுமே கேட்க வேண்டாம் என்று தீர்மானித்தான் வாஞ்சி.

''சும்மா இந்தப் பக்கம் வந்தேன். உங்க ஞாபகம் எல்லாம் வந்தது. அதான் பார்த்துட்டு போலாம்னு வந்தேன். பெரியவர்ட்ட சொல்லுங்க. அப்ப நா வரேன்'' என்று எழுந்து கொண்டேன்.

''ஒண்ணு மட்டும் உண்மை வாஞ்சி! இப்பவும் நா அடிக்கடி உன்னை நெனைச்சுப்பேன். அறியாத வயசுல வக்ரத்தனமா உங்கிட்ட ரூபாயைக் கொடுத்து அந்தப் பொண்ணுவீட்டுக்கு அனுப்பிச்சோம் பாரு. அது எவ்ளோ பாவ காரியம்னு பின்னால தான் புரிஞ்சுது. ஒருக்கால் எங்களால நீ வாங்கின சூடுக்குதான் ஆண்டவன் எங்க எல்லார்க்குமே ஒட்டுமொத்தமா சூடு போட்டுட்டான் போலிருக்கு. ஒவ்வொருத்தர் ஒவ்வொருவிதமா கையைச் சுட்டுக் கிட்டு உதறிக்கிட்டு நிக்கறோம்.''

வாஞ்சி சட்டென்று நின்றான். ''அப்படிச் சொல்லாதீங்க. நா அதை அப்பவே மறந்துட்டேன். ஆனா அம்மாதான் மறக்கலை. அடிக்கடி சொல்லிக் காட்றாங்க. எம் மேல தப்பில்லைன்னு அவங்க எப்போதான் புரிஞ்சுக்குவாங்களோ யார் கண்டா?''

''நா சொல்றேன் வாஞ்சி அவங்ககிட்ட. நா சொன்னா நிச்சயம் நம்புவாங்க. பாவம் எங்களால உனக்கு எவ்ளோ கஷ்டம். அன்னிக்கு பண்ணின தப்புக்கு நானும் பிராயச்சித்தம் தேடிக்க வேணாமா? இப்போ நீங்க எங்க இருக்கீங்க வாஞ்சி?''

வாஞ்சி விலாசம் கொடுத்தான்.

''நீ கவலையே படாதே வாஞ்சி. உங்கம்மாகிட்ட நடந்தது என்னன்னு நானே போய்ச் சொல்றேன்.''

வாஞ்சி கண்கள் பளபளக்க விடை பெற்றுக் கொண்டான்.

கல்லூரியிலிருந்து நேராக மாத்யூஸ் வீட்டுக்குப் போய் அவளைப் பார்ப்பது என்று தீர்மானித்து விட்டாள் பத்மா. இன்னும் மூன்றே வாரம்தான் பிருந்தாவுக்கு அவகாசம் இருக்கிறது. பாவம் தனி ஒரு பெண் எங்கு போய் இடம் தேடுவாள்? வாஞ்சியும் எங்கே போனானோ கண்ணிலேயே படவில்லை.

அவள் கேட்டில் நுழையும்போதே பார்த்து விட்டார் நந்தகோபால். மாத்யூஸ் வீட்டில் இல்லை. பத்மாவிடம் தனிமையில் பேசி வெகு காலமாயிற்று. அவளைக் கொஞ்சம் சீண்டிப் பார்த்தால் என்ன என்று தோன்றியது.

''யாரது?'' என்று மாடியிலிருந்து கேட்டவர், ''ஓ! நீயா... என்ன?'' என்றார் அதட்டலாக.

''மாத்யூஸை பார்க்க வந்தேன்.''

''மேலே ரெஸ்ட் எடுத்துட்ருக்கா கீழே அனுப்பட்டுமா. இல்ல நீ இங்கே வந்து பார்க்கறியா?''

'பாவம் பிள்ளைத்தாச்சி கீழே இறங்க வேண்டுமா' என்று நினைத்த பத்மா, ''பரவால்ல நானே போய் பார்க்கறேன்'' என்று மேலே ஏறத் தொடங்கினாள்.

''இதோ இந்த அறை'' என்று கட்டிக் காட்டினார்.

பத்மா உள்ளே நுழைந்தாள். அறை இருட்டாயிருந்தது.

''இரு நா லைட் போடறேன்'' என்று அவரும் உள்ளே நுழைந்தார். அறையில் வெளிச்சம் பரவிய பிறகுதான் அங்கு மாத்யூஸ் இல்லை என்பதும், தானும் நந்தகோபாலும் மட்டும் இருப்பதும் அறைக் கதவு தாளிடப்பட்டிருப்பதையும் கண்டு திகைத்துப் போய் நின்றாள் பத்மா.

என்ன ஆயிற்று இந்த வாஞ்சிக்கு? இப்படிக் கண்ணிலேயே படாமல் மறைந்து விட்டார் என்று வியந்தாள் சரண்யா. பிருந்தாவை நினைத்த போது மனசு என்னமோ செய்தது. கை நிறைய நாலு காசு புழங்க ஆரம்பிக்கும் நேரத்தில் இடத்தை காலி பண்ணு என்று சொல்வது எவ்வளவு கொடுமை. சொந்தக்காரர் தானாக இப்படி நோட்டீஸ் விட்டிருக்க மாட்டார். யாரோ சொல்லித்தான் இந்தக் காரியத்தை செய்திருக்கிறார்.

நிச்சயம் நந்தகோபால்தான் இந்தச் சதிக்குக் காரணகர்த்தாவாயிருக்க வேண்டும். மாத்யூசுக்குக் கூடத் தெரியாமல் அவளது செல்வாக்கை விபரீதமாய் பயன்படுத்தி அவர்களுக்கு இடர் செய்கிறார். இப்படி நடந்து கொள்கிறாயே உனக்கு வெட்கமாக இல்லை என்று நாக்கைப் பிடுங்கிக் கொள்கிறார்போல் அந்தாளை நாலு வார்த்தைக் கேட்டு விட்டு வந்தால் என்ன?

ம்! போய் பார்ப்போம். ஒருக்கால் பெற்ற பெண்ணே நாலு கேள்வி கேட்டால் திருந்தக் கூட வாய்ப்பிருக்கிறது. இப்படி நினைத்த சரண்யா சற்று முன்னதாகவே சொல்லி விட்டு பாங்க்கை விட்டு வெளியில் வந்து ஆட்டோ ஒன்றைப் பிடித்தாள்.

''எல்லாரும் சேர்ந்து என்னை என்னன்னு நெனைச்சுக்கிட்டீங்கடி? படிச்சுட்டா பெரிய மனுஷியாய்டுவீங்களோ? என் பொண்ணையே எனக்கெதிரா திருப்பி விட்ட உன்னை என்ன பண்றேன் பாரு. இனிமே நான் தேவையில்லன்னுதானே என்னை ஏளனம் பண்ற எல்லாரோடயும் சேர்ந்துகிட்டு என்னைத் துச்சமா பார்த்த உன்னையும் துச்சமா பார்க்க வெக்கறேன். துளித் துணி இல்லாம உன்னைப் படம் எடுத்து உன் வீட்டு வாசல்லயே போஸ்டர் அடிக்க ஒட்டலை... நான் நந்தகோபால் இல்லை...!'' கேமராவில் பிலிம் லோட் பண்ணிக் கொண்டே கருவினான் நந்தகோபால்.

எவ்வளவுதான் படித்து விட்டாலும் பழைய பத்மா இன்னமும் கொஞ்சம் அவளுக்குள் இருக்கத்தான் செய்தாள் என்பது அவள் உடல் நடுங்கியதிலிருந்து தெரிந்தது.

மழையில் நனைந்த கோழிக் குஞ்சு மாதிரி வெடவெடவென்று நடுங்கினாள்.

''வேணாங்க. மரியாதையா கதவைத் தொறந்து என்னைப் போக விடுங்க. இல்லன்னா பொல்லாதவளாய்டுவேன்'' என்று நடுங்கிக் கொண்டே வாய் குழறப் பேசியவளைப் பார்த்துப் பெரிசாய் சிரித்தான்.

''மரியாதை நா உனக்குக் குடுக்கணுமா? சபாஷ்! வா குடுக்கறேன்'' என்று பாய்ந்து அவளது புடைவையைப் பற்றிக் கொண்டான். வீல் என்று கத்திக் கொண்டே அவனிடமிருந்து விடுபடப் பாடுபட்டாள்.

ஆட்டோவுக்கு பணம் கொடுத்து விட்டு உள்ளே வந்தாள் சரண்யா. வீட்டில் யாரையும் காணவில்லை. வேலைக்காரன் பின்பக்கம் வேலையாக இருந்தான்.

''அம்மா இல்லையாப்பா?''

''இல்லைங்கம்மா. வெளியே போயிருக்காங்க.''

''அய்யா?''

''அய்யா மாடில இருக்கார்.''

''சரி நான் பாத்துக்கறேன்'' என்று மாடிப்படி ஏறும் போதுதான் அங்கு ஏதோ சப்தம் கேட்டதை உணர்ந்தாள். கூடவே யாரோ ஒரு பெண்ணின் அலறலும் மெலிசாய் கேட்டது.



'சிட்ரஸ்' - எலுமிச்சை, சாத்துக்குடி, கமலா, கிச்சிலி போன்றவற்றின் தோல்களை வீசி எறியாமல், குளிப்பதற்குமுன் அவற்றினால் முகத்தை நன்றாகத் தேய்த்துவிட்டு வறண்ட பிறகு குளியுங்கள். அவற்றின் சுளைகளைக் கூழ் போல் செய்து தேய்த்துக் கொண்டு குளித்தாலும் முகவசீகரம் அதிகமாகும்.

- விஜயகீதா

பதற்றத்தோடு படிகளைக் கடந்து எந்த அறை என்று ஒவ்வொரு அறை வாசலிலும் நின்று கேட்டாள். இதோ இங்கிருந்துதான் சப்தம் வருகிறது. அந்த அறை வாசலில் நின்று கதவை இடிக்கலாமா என்று நினைத்தவள் அடுத்த கணம் மனசு மாறினாள். உள்ளே இருப்பது யார் என்று தெரியவில்லை. கதவை இடித்தால் உஷாராகி விடுவார் நந்தகோபால். அவரைக் கையும் களவுமாய் பிடித்து வாங்கு வாங்கென்று வாங்க வேண்டும். இந்தனை வயசாகியும் பெண் வெறி போகவில்லை போலிருக்கிறது.

சரண்யா ஜன்னலுக்கு வெளியில் ஒரு ஸ்டூலைப் போட்டுக் கொண்டாள். அதில் ஏறினாள். வெண்டிலேட்டரை மூடியிருந்த கண்ணாடியை மெல்ல சாய்த்து கீற்றாய் ஒரு திறப்பு செய்து கொண்டு கண்ணை வைத்து பார்த்தவள் அதிர்ந்தாள். அ..ம்..மா! என்று பதறிப் போனாள். தாரை தாரையாய் கண்ணில் நீரும் சீற்றமும் பொங்கிய வழிய ஸ்டூலிலிருந்து இறங்கி வந்து வெறி பிடித்தவள் மாதிரி கதவை இடித்தாள்.

ஸ்தம்பித்துப் போனார் நந்தகோபால். புடைவை கிழிந்து ரவிக்கை கிழிந்து முகம் கழுத்தெல்லாம் காயங்களோடு பெரிசாய் அழுதாள் பத்மா.

என்ன செய்வதென்று புரியாமல் திகைத்துப் போய் நின்றிருந்தார் அவர். அந்த ஒரு க்ஷணத்தை பயன்படுத்திக் கொண்டு சட்டென்று புடவையால் கழுத்தை சுத்தி போர்த்திக் கொண்டு ஓடி வந்து கதவைத் திறந்தாள் பத்மா.

வெளியே நின்றிருந்த சரண்யாவைக் கண்டதும் இருவருமே அதிர்ந்து போனார்கள். சரண்யாவா இது? இல்லை பத்ர காளியா? கண்கள் இரண்டும் நெருப்பை கக்க முகமெங்கும் அக்னிக் குழம்பை பூசிக் கொண்டு எரிமலையாய் நின்றிருந்தவளைக் கண்டு நந்தகோபாலே ஒரு கணம் துணுக்குற்றார்.

''நீ ஏம்மா இங்கே வந்தே?''

''மா.. மாத்யூச...'' பத்மா கேவினாள்.

''வந்த எடத்துல இந்த ஆளுக்கு உன் மேல ஆசை வந்துடுச்சாக்கும். என்ன மிஸ்டர் நந்தகோபால் உங்களுக்குப் பொண்ணு வேணும்னா ஏன் வயசான வங்களை தொந்தரவு பண்றீங்க? கமான் நா ரொம்ப யங் கேர்ள்! இன்னும் கல்யாணம் ஆகாத கன்னி கழியாத பொண்ணு வாங்க! உங்க வெறியை எங்கிட்ட தீர்த்துக்கங்க. உங்களுக்குத் தேவை ஒரு பொண்ணு அது யாரார்ந்தா என்ன? கமான் நேரத்தை வீணாக் காதீங்க. அம்மா நீ வெளியே போய்டு!''

''சரண்யா...!'' பத்மா பெரிசாய் அலறினாள்.

(தொடரும்)

---

திருமண இல்லங்களில் பணம்,
(திரும்ப) ரிசர்வேஷன் டிக்கெட்டுகள்
மற்றும் விலையுயர்ந்த ஆடைகள்
கொண்ட சூட்கேஸ் காணாமல்
போனால் சம்பந்தப்பட்டவர்கள் மிகுந்த
துயரத்துக்குள்ளாகின்றனர். வங்கிகளில் உள்ளவை
போன்று சுவர்களில் லாக்கர்களைப் பொருத்தி
அவற்றை விருந்தினர்களுக்கு வாடகைக்கு விட்டால், சத்திர
நிர்வாகிகளுக்குக் கூடுதல் வருவாயும் கிடைக்கும்; வந்தவர்
களும் நிம்மதியாக நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வார்கள். திரு
மணங்கள் நடைபெறாத மாதங்களில் ஒன்றிரண்டு நாட்கள்
தங்கும் வெளியூர் பயணிகளும் இவற்றைப் பயன்படுத்திக்
கொள்ளலாம். ஆயிரக்கணக்கில் செலவு செய்து திரு
மணத்தை நடத்துகிறவர்கள் ஓர் ஆளை அமர்த்தி காலணி
களுக்கு டோக்கன்கள் வழங்கிப் பாதுகாக்க ஏற்பாடு செய்
தால், (ஒரு ஜோடியின் விலை ரூ. 200 ஐத் தொடும் இந்நாட்
களில்) அவற்றின் இழப்பையும் தவிர்க்கலாம்.

– அ. ஷண்முகசுந்தரம்

* Alliance invited for Vathima, Bharadwaja, Uthiratathi, 164/21, B.E. (Agri), fair, good looking, from well employed boys below 30. Contact : Mr. P.V. Krishnan, C/o. P.K. Venkateswaran, Bhawani Division, Sutton Estate, Katary - (P.O.) Nilgiris - 643 213.

★ வல்லம்பர் இனத்தைச் சேர்ந்த விதவை பெண், வயது 35, மாநிறம், உயரம் 5 அடி. குடும்பப் பாங்கான பெண்ணிற்கு வரன் தேவை. சாதி தடையில்லை. மனைவி இறந்தவர்களும், விவாகரத்து பெற்றவர்களும் விண்ணப்பிக்கலாம். தொடர்பு கொள்க : வி. கிருஷ்ணமூர்த்தி, 20, வாடிகனேரி மேட்டுத் தெரு, திருச்சி - 8.

★ இந்து யாதவர், உயரம் 155 செ.மீ., மாநிறம், வயது 30, சம்பளம் ரூ. 3300, அரசுப் பணி பொது சுகாதாரத் துறை வேலையில் உள்ள பெண்ணுக்கு, நிரந்தர வேலை, 38 வயதிற்குட்பட்ட மணமகன் தேவை. தாழ்த்தப்பட்ட இனத்தைத் தவிர மற்ற இனம் சம்மதம். முகவரி : Sri. V. Govindasamy, 115, East Raja Street, Mannargudi, N.Q.M. District - 614 001.

★ கவரா நாயுடு, வயது 29, எஸ்.எஸ்.எல்.சி. படித்து, தையல் வேலைத் தெரிந்த குடும்பப் பாங்கான மணமகளுக்கு நாயுடு இனத்தில் நிரந்தர அரசாங்க வேலையில் இருக்கும் மணமகன் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். முகவரி : A. Sundaresan, 11/1-81 Pudusampalli, Raman Nagar (P.O). Metturdam - 636 403. Salem District.

* Alliance invited from well placed/well employed grooms for Vadamal, Bharathwaja/23/150cms, Uthiram, fair, M.Sc., (Maths), (studying B.Ed.) girl. Subsect no bar. Send horoscope to R. G. Subramanian, 193, Sivasubramanian Road, R.S. Puram, Coimbatore - 641 002.

★ துளுவ வெள்ளாளர், +2, டைப், [illegible], 7-ல் செவ்வாய் சுத்தம், 153 செ.மீ./700/தனியார் நிறுவனம்/ஈரோடு/நடுத்தரக் குடும்பம்/உடன் பிறவுகள் சம்மதம்/நற்பண்புகளுடன், ஆரோக்கியமான மணமகன் தேவை. முகவரி : எம். ரவிசந்திரன், 230, ரயில்வே காலனி, ஈரோடு - 638 002.

* Suitable alliance invited for girl Brahacharanam/Kausika/Aswini/29 yrs/5'1"/BA/Domestically trained. Correspond : M.S. Gowri Shankar, Stenographer, O/o. S.D.O. Phones, Chittoor - 517 001 (AP).

* Alliance invited for Smartha, Kannada, Bharatwaja, Brahmin girl, 25, M.Sc., Central govt. job at Madras, 5 feet, fair, 3500 p.m., Boy should be well educated, well employed. Smartha, Madhwa. Subsect no bar. Contact : K. V. Sathyanarayanan, Plot No. 21, Themal Nagar, South Malai Kovil, Thirvarambur, Trichy - 620 013.

## மணமகன் மணமகள் தேவை

* Alliance invited for Thengalai, Kousika, Ayilyam, 35/170/fair graduate girl. Also graduate girl for her brother Mirugasirusham 38/180 cms/M. Com., BGL ACS/6800. Box No. 30048

* Alliance invited for CSI/Mukkulathore boy BSc/28/5'7"/2500 Tata Tea, Near Pollachi from employed Teacher (CSI/RC) and for his sister MCom/24/5'5"/LIC from Central/PSU/State employed boy. Box No. 30049

★ சோழிய வெள்ளாளர் 34/MA/College Lecturer/செவ்வாய் தோஷம், வரனுக்கு வேலையில் உள்ள பெண் தேவை. சகோதரி M.Com. M.Ed../ 39/5000/College Lecturer பெண்ணிற்கு, வேலையில் உள்ள மாப்பிள்ளை தேவை. பெட்டி எண் : 30050

* Mutual/Seperate alliance for fair Brahmin, graduate girl, 31/165/2500 and for her brother PG, employed in Multinational Company at Singapore 27/165, wanted PG/Professional/Medics degree girl, caste no bar. Box No. 30051

★ [illegible], [illegible], [illegible], 43/165 செ.மீ., [illegible], Deaf & Dumb வீட்டு வேலைகளை செய்பவை செய்யும் பெண்ணிற்கும் சகோதரர் அவ்வாறே 33/165 செ.மீ., சிவந்த, 2000/- Part time accountant வேலையில் உள்ள பெண் தேவை. சகோதரர், Deaf & Dumb [illegible] 27/170 செ.மீ., 1500/- அரசாங்க வேலையில் உள்ள வரனுக்கு நிரந்தர வேலையில் உள்ள பெண் தேவை. பெண் கொடுத்து பெண் எடுக்க சம்மதம். எளிய திருமணத்திற்கு முதலிடம். பெட்டி எண் : 30052

* Alliance for Iyer Brahacharanam, Goundinya girl, Revathi/30/5"/B. Sc., and for her brother Magam I.T.I./35/5'6", Rs 4500/- own house, Private firm Contact : M. R. Nagarajan, 227, Anbazhagan Nagar, Minjur, Ponneri Taluk, Chengai M. G. R. Dt., Pin: 601 203.



Printed and Published by V. MURALI on behalf of MESSRS BHARATHAN PUBLICATIONS PRIVATE LIMITED, at the BHARATHAN PRESS, 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Madras - 600 097.
Editor : MANJULA RAMESH. Managing Editor : V. MURALI
Telephones – Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Director : 2345621.
Annual Subscription : India Rs. 84/-; Overseas : Rs. 600/- (Air Mail); Rs. 250/- (Sea Mail);
Half Yearly Subscription : India Rs. 42/-; Overseas : Rs. 300/- (Air mail); Rs. 125/- (Sea Mail).

க்ரைம் கலந்த புதுமையான குடும்பத் தொடர்கதை



# ப்ரீப

# 1 காயத்ரி

ஒன்பது மணி டி.ஸி. 10 விமானம் புறப்படத் தயாராக இருந்தது. இரண்டு மணி நேரம் தாமதமாகி, புறப்படத் தயாராக இருந்தது. மணி பதினொன்று.

வானிலை சரியில்லை. கீழே தரையில் சிப்பந்திகள் நின்று கொண்டு அவசரமாக பாரங்களை ஏற்றிக் கொண்டிருந்தார்கள்.

''சீக்கிரம் சீக்கிரம்'' என்று அடிக்கடி குரல்கள்! டிரக்கில் உள்ள கிரேன் கடைசியாக ஒரு பெரிய பெட்டியை மேலே தூக்கி விமான வாய்க்குள் நுழைத்துக் கொண்டிருந்தது.

விமானத்தின் அடி வயிற்றில்' அது வழுக்கிக் கொண்டு போனதும், அந்த 'கார்கோ' பகுதிக் கதவு சாத்தப்பட்டது. அதில்தான் விதி விளையாடுகிறது என யாருக்கும் தெரியாது.

அன்று பார்த்து க்ரௌண்ட் இஞ்சினீயர் வரவில்லை. கார்கோ கதவை மூடி அதன் தாழ்ப்பாள்களைச் சரியாகப் பொருத்துவதற்காக தனி நியதிகள் உண்டு. அந்தக் கதவை அடைத்து விட்ட பிறகும் மேலும் 10 விநாடிகள் விசை ஒன்றை அழுத்திக் கொண்டே இருக்க வேண்டும்.

கடைசியாக தாழ்ப்பாள் சரியாகப் பொருந்தி இருக்கிறதா என்று உறுதிப் படுத்திக் கொள்ள ஒரு துவாரம் வழியாகவும் கண்ணால் பார்க்க வேண்டும்.

அன்று அது கவனிக்கப்படவில்லை! கவனித்திருந்தால் கதவின் தாழ்ப்பாள் ஒரு விதத்தில் சரியாகப் பொருந்தவில்லை என்று தெரிய வந்திருக்கும்.

விமானம் பத்து நிமிடத் தாமதத்தில் புறப்பட்டது.

சிப்பந்திகள் அன்று நிதானம் இழந்ததற்குக் காரணம் இருந்தது. ரயில்வே ஸ்ட்ரைக் என்பதால், தபால் அதிகாரிகள் இருநூறு தபால் பைகளைக் கடைசி நிமிடத்தில் அங்கே கொண்டு தள்ளி இருந்தார்கள்.

ஸ்ரீவேணுகோபாலன்

பைகளுக்கு இடம் கொடுத்து அடுக்கு வதே நேரத்தை அதிகமாக்கி விட்டது.

எல்லாமே அவசர அவசரமாக நடந்து. அதன் விளைவில் ஒரு சின்ன நியதி கடைப் பிடிக்கப்படாமல் போய் விட்டது. வழக்க மான இஞ்சினியர் இல்லாத காரணத்தால்!

கதவின் தாழ்ப்பாள் சரியாகப் பொருந்த வில்லை என்றால் உள்ளே விமானி முன் னால் ஒரு எச்சரிக்கை விளக்கு எரியும்.

ஆனால் அன்று விதி நடத்திய கோளா றில், ஒரு பிரத்தியேகத் தவறு நடந்து அந்த விளக்கும் எரியவில்லை.

எனவே 'எல்லாம் ஓகே' என்கிற நிலை யில் விமானத்தைக் கிளப்பிய போது 11 மணி 11 நிமிடம் 00 விநாடி!

தடத்தில் ஓடி விமானம் மேலே கிளம்பி யது. கண்ட்ரோல் டவருடன் வழக்கமாய பேச்சுக்களை வொயர்லெஸ்ஸில் பேசிக் கொண்டார்கள்.

மணி 11:30; 56க்கு விமானம் 11,500 அடி உயரே ஏறி விட்டது.

நிமிடத்துக்கு 2200 அடி வீதம் விமானம் மேலும் ஏறிக் கொண்டிருந்தது.

அந்த உயரத்தில் கார்கோ பகுதி கதவில் 5 டன் அழுத்தம் விழுந்ததில் கதவு பிரமப் பட்டுக் கொண்டிருந்தது.

அதற்கு மேல் ஒரு நிலைக்கு விமானம் ஏறத் தொடங்கியதும், அந்தப் பின் கதவால் தாள இயலவில்லை. படீரென்று அதன் தாழ்ப்பாள்ப் பகுதி தெறித்தது.

கதவு துண்டாகி பின்புறத்தில் ஒரு பகுதி யையும் உடைத்து விட்டு ஆகாயத்தில் எகிறிப் போனது.

இதனால் காற்று அழுத்தம் உள்ளே வித்தியாசப்பட கார்கோ பகுதியின் மேல் கூரை நொறுங்கி அமுக்கியது.

அந்த மேற்கூரைதான் விமானத்தின் பின்புறம் உட்கார்ந்திருக்கும் பிரயாணி களுக்குத் தரைப் பகுதி.





அந்தத் தரைப் பகுதி நொறுங்கவே அந்தக் கடைசியில் உட்கார்ந்திருந்த பிரயாணிகள் வெளியே உறிஞ்சப்பட்டு, வானவெளியில் தங்கள் வீட்டுகளோடு மறைந்து போவார்கள்.

பிரயாணப் பகுதியில் புகுந்த வெளிக் காற்று, பைலட் பகுதி வரை நிறைந்து விட்

## பூண்டுப் பொடி 1

4 பல் பூண்டு, ஒரு ஸ்பூன் பொட்டுக்கடலை, ஒரு கரண்டி வறுத்த வேர்க்கடலை, மிளகாய்ப் பொடி ஒரு ஸ்பூன், தேவையான அளவு உப்பு சேர்த்து மிக்ஸியில் பொடி செய்து விடுங்கள்.

- சீதா



டது.

காபினுக்குள் பனி விழுந்து விட்டது. உள்ளே வந்த காற்று தரைத் தூசிகளை மேலே கிளப்பிப் பறக்க விட்டது.

டிஸி 10 கட்டுப்பாடு இழந்து இடது புறம் தானாகத் திரும்பியது. அதே நேரம் அதன் மூக்கு கீழே பூமியை நோக்கித் திரும்பியது.

திகைத்துப் போன கமாண்டர் தமது வொயர்லெஸ் மூலம், ப்ளைட் ஆபீசரைக் கேட்டார்: ''என்ன நடந்திருக்கு?''

''பின்பகுதி உடைஞ்சு போச்சு!'' என்றார் ப்ளைட் அதிகாரி.

''மூக்கு கீழே சாயுதே! உடனே அதை மேலே தூக்குங்க!'' என்றார் பைலட்.

''அதைத்தான் செய்யறேன். முடியலை! இஞ்சின் சொன்னபடி கேட்கலை.''

11:40:16க்கு மூக்கு 20 டிகிரி கோணத்தில் தரையைப் பார்த்துத் திரும்பியது.

7200 அடிக்கு விமானம் இறங்க, தரையை நோக்கி அது போகும் வேகம் அதிகமாகியது.

''கடவுளே, தரையிலே போய் நாம்ப மோதப் போறோமே!'' என்றார் கமாண்டர் கவலையுடன்.

11:41:31க்கு அந்த துரதிர்ஷ்ட விமானம் தரையில் ஒரே வேகத்தில் மோதி ஆயிரம் துண்டுகளாகச் சிதறியது.

அத்துடன் 116 பிரயாணிகளும் 200 தபால் பைகளும் சிதறிப் போயின.

இந்தக் கதை தொடங்குவதற்கு எட்டு வருடங்களுக்கு முன்பாகவே இந்த விபத்து நடந்து விட்டது.

● ● ● ● ●

**ச**மயங்களில் ஆபீஸ் வேலை செய்யும் போது 'வீட்டுக்குப் போய் இப்போது ரெஸ்ட் எடுத்தால் நன்றாக இருக்குமே!' என்று எல்லோருக்கும் தோன்றுவதுண்டு.

அட்வகேட் வசந்தாவுக்கும் அந்த நினைவு அன்று தோன்றியது ஆச்சரியமல்ல.

கோர்ட்டிலும் மத்தியான வேலைகளை அவசர அவசரமாக முடித்து வீட்டுக்கு உடனே ஓடிவிட எண்ணினாள்.

கோர்ட்டில் நடந்தது ஒரு 'தாம்பத்திய உரிமை' கேஸ்! தன்னோடு மனைவி வாழ வேண்டும் என்று கணவன் கேஸ் போட்டிருந்தான்.

தன்னைக் கணவன் கொடுமை செய்கிறான் என்று வாதித்தாள் மனைவி.

கணவனுக்காக ஆஜராகி இருந்தாள் வசந்தா!

கூண்டில் நின்று அவன் மனைவியை எக்கச்சக்கக் கேள்விகளால் திணற அடித்தாள்.

மனைவி அழ ஆரம்பித்து விட, கேஸ் தள்ளி வைக்கப்பட்டது.

பரபரப்புடன் வசந்தா கோர்ட்டை விட்டு வெளியேறினாள்.

வீட்டுக்குள் நுழைந்ததுமே ஒரு மிதப்பான பரவசம் அவளைச் சூழ்ந்து கொண்டது.

முகம், கை, கால் கழுவி, ஒரு கப் காப்பி அருந்தி விட்டு சோபா மீது சாய்ந்து கொண்டாள்.

ஒரு நிம்மதி, அமைதி, சலனமில்லாத சுகம்.

இதுதான் ஓர் ஆனந்த லயிப்பு என்று மனத்தில் எண்ணிக் கொண்டாள்.

மணி ஆறுக்குப் பெண் லதா வந்தாள்.

லதா காப்பி அருந்தி விட்டு நேராகத் தன் அறைக்குப் போய் பாடங்களில் புகுந்து விட்டாள்.

கணவர் பிரசாத் வந்தால் வீடு தூள் பறக்கும்.

பிரசாத்தும் அட்டகாசமாகப் பேசுவான். சளைக்க மாட்டான். அதுவும் வசந்தாவைக் குஷிப்படுத்துவதில் அவனுக்கு ஈடு அவன்தான்! ஏதோ புதிதாகத் திருமணம் ஆனவர்கள் போல் ஒரு



இதோ அறிமுகமாகின்றது சகேலி. பக்க விளைவுகளிலிருந்து முழு பாதுகாப்பு தரும். முதல் நான்ஸ்டீராய்டல் கருத்தடை மாத்திரை. வாரம் ஒரு முறை பயன்படுத்தும் எளிய முறை. குமட்டல், தலைவலி, எடை கூடுதல் ஆகிய கவலைகளிலிருந்து உங்களுக்கு விடுதலை.

**ஏன் பக்க விளைவுகளை உண்டாக்குவதில்லை?**

சகேலி சென்ட்குரோமன் மருந்தினால் தயாரிக்கப்பட்டுள்ளமையால், பக்க விளைவுகள் ஏற்படுவதற்கான வாய்ப்பே இல்லை. கடந்த 22 ஆண்டு காலமாக ஆராய்ச்சியில் ஈடுபட்ட லக்னோவில் உள்ள மத்திய ஆராய்ச்சி நிலையத்தின் தயாரிப்பே சகேலி.

சென்ட்குரோமன் நான்-ஸ்டீராய்டல் என்பதால் உடலை பாதிப்பதோ அல்லது எந்தவித மாற்றத்தை உண்டாக்குவதோ இல்லை. இது சினைப்படுத்தப்பட்ட பெண் கருவானது கருப்பையில் தங்கி கருத்தரிப்பு நடைபெறுவதை தடுக்கின்றது சகேலி. உங்களுக்குத் தேவையான அனைத்து பாதுகாப்புகளையும், பக்க விளைவுகள் இல்லாமலேயே தருகின்றது.

# கவலை இல்லாத இன்பம்

சென்ட்குரோமன்
**சகேலி**
கருத்தடை மாத்திரை
வாரம் ஒரு முறை

**வாரம் ஒரு முறை மட்டும்?**

முதல் மூன்று வாரங்களுக்கு சகேலி வாரம் இருமுறை சாப்பிட வேண்டும். மாத்திரை சாப்பிட ஆரம்பித்த நான்காவது மாதத்திலிருந்து, சகேலியை வாரம் ஒரு முறை உண்டால் போதுமானதாகும். மருந்து உண்ணும் முறை குறிப்புகளை படித்து, இதனை எளிதாக பின்பற்றலாம்.

இனி குழந்தை வேண்டும் என நீங்கள் முடிவு செய்யும்போது, சகேலி பயன்படுத்துவதை நிறுத்திவிடவும். இதனால் நீங்கள் எப்போது விரும்புகின்றீர்களோ, அப்போது கர்ப்பம் தரித்துக் கொள்ளலாம். இதனால் நீங்கள் விரும்பும் வகையில், இடைவெளி விட்டு குழந்தைகள் பெற்றுக்கொள்ளலாம்.

இது தொடர்பாக நீங்கள் இன்னும் அதிகம் அறிய விரும்பினால், அருகில் உள்ள மருத்துவரிடம் தொடர்பு கொள்ளவும்.

மேலும் விபரங்களுக்கு எழுதவும்:
மெடிக்கல் ப்ராடெக்ட்ஸ் டிவிஷன்
இந்துஸ்தான் லேடெக்ஸ் லிமிடெட்
பூஜப்புரா, திருவனந்தபுரம்-695012

Mudra:HLL:489 TM

புத்தம் புது உற்சாகம் அவனுக்குத் தோன்றி விடும்.

அந்த அதிக உற்சாகத்தைக் கண்டுதான் அவள் அடிக்கடி யோசிப்பது உண்டு.

இப்படி அளவில்லாமல் அனுபவிக்கிறோமே, இது சரியில்லையோ, இது எதிலாவது கொண்டு போய் விடுமோ என்று ஒரு கலக்கம் அவளைப் பற்றிக் கொள்ளும்.

அப்போதெல்லாம் அவளுக்குக் கடவுள் நினைப்புதான் தோன்றும். கடவுளே எல்லாம் சரியாக இருக்க வேண்டுமே என்று நினைத்துக் கொள்வாள்.

டாண் என்று ஏழு மணி அடிக்க வசந்தா ஆவலோடு வாசலை நோக்கிப் பார்வையை ஓட்டி இருந்தாள்.

ஒவ்வொரு கார் சத்தத்துக்கும் அவள் பரபரப்பு அதிகமாகி விடும்.

நேரே துள்ளிக் கொண்டு வாசல் பக்கம் ஓடி வருவாள்.

அன்று பல தடவை அது போல் செய்து ஏமாந்து விட்டாள்.

நேரம் ஏழே கால் ஆகியது. ஏழரை ஆகியது. முக்கால் ஆகியது.

இப்போது உள்பரபரப்பு கூடி விட்டது!

ஏன்! ஏன் இன்னும் வரவில்லை? என்ற தத்தளிப்புகள் தோன்றிய போது எட்டே காலுக்கு அவன் வந்து சேர்ந்தான்.

அவளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே கிடையாது. என்ன காரணமாம்? என்று பொய்யான கோபத்தில் அவனைக் கேட்டாள்.

''வேலை அதிகமாப் போச்சு போ! பாம்பே க்ளையண்ட் வந்துட்டான்!''

வழக்கமான பதில்தான் அது.

'பொய் சொல்வாருங்க! வீட்டுக்கு லேசில் திரும்ப மாட்டார்' ராத்திரி பன்னிரண்டு மணிக்கு வருவார்'

அந்தக் குரல் திடீரென்று அவளது மனத்துள் கேட்டது.

ஒருகணம் அவளுக்கே அது வெலவெலப்பைக் கூட்டியது.

ஓ! கோர்ட்டில் அந்த மனைவி பேசினாளே! அவள் பெயர் என்ன? பத்மினி! பழைய ஆக்ட்ரஸ் பத்மினி போல் அழகாகத்தான் இருந்தாள். ஆனால் அவளது துயரம்தான் அவளை அலங்கோலமாகக் காட்டியது.

தன் கணவனைப் பற்றிக் கூறும் போது அவள்தான் எப்படிச் சொன்னாள்?

'ஒரு விஷயம் ஆபீஸைப் பற்றி சொல்ல மாட்டாருங்க! எதுக்கெடுத்தாலும் ஆபீஸ் மேலே பழியைப் போடுவார்! லீவு நாளிலே கூட ஆபீஸ் போறேன் என்பார்...'

வசந்தா யோசித்த நிலையில் நின்றாள். மனதில் ஒரு அரிப்பு வந்திருந்தது. ஆமாம். பிரசாந் கூட அப்படித்தானே! ஆபீஸைப் பற்றி ஒரு வார்த்தை கூறியதில்லை! அது என்னமோ அவளது அறிவுத் தேவைக்கு அப்பாற்பட்டது போல்... அவள் அதற்காக அலட்டிக் கொண்டது இல்லை!

ஆனால் இன்றைக்கு...

இன்றைக்கு ஏதோ அவள் மனம் மாறினால் போல இருக்கிறதே!

''ஹேய்! என்ன ஒரே யோசனை!'' என்று ஒரு கூல்டிரிங்கை கையில் எடுத்து அவள் முன்னால் பிரசாந் வந்திருந்தான்.

அவன் குரலும் உற்சாகமும் அவளைச் சிறிது பரவசப்படுத்தியது.

ஒருகணத்தில் அவளது கலக்க நினைவு மறைந்தது போல் இருந்தது.

''இன்னிக்கு என்ன? ராஜாவுக்கு ஆபீஸ்லே...'' என்று இழுத்தாள்.

''கரெக்டா சொல்லிட்டியே! இன்னும் கூட நேரம் ஆகியிருக்கும்! ஆனால் ராணி ஞாபகம் வாட்டிடுத்து. ஓடி வந்துட்டேன்!'' என்றான் அவன்.

அந்த விநாடியில் அவளது பரவச நிலை திரும்பி வந்து விட்டது! சீ! அவரைப் போய்

## மசாலா தொக்கு

ஒரு தக்காளி, ஒரு வெங்காயம், இஞ்சி, இரண்டு பச்சை மிளகாய், ஒரு பல் பூண்டு, அரை ஸ்பூன் சோம்பு, உப்பு சேர்த்து அரைத்த விழுதை ஒரு ஸ்பூன் எண்ணெயில் கடுகு தாளித்தபின் பச்சை வாசனை போகும்வரை வதக்கி எடுங்கள். சுவையான மசாலா தொக்கு தயார்.



- கீதா

> **தக்காளி தொக்கு**
>
> வாணலியில் ஒரு ஸ்பூன் எண்ணெய் விட்டு, கடுகு, சோம்பு, தாளித்தபின் பொடிப்பொடியாக நறுக்கிய தக்காளியைத் தேவையான அளவு உப்பு, காரம் போட்டு வதக்கி எடுங்கள். ஐந்து நிமிடத்தில் சுவையான தொக்கு தயார்.
>
> \- கீதா



ஏதோ நினைக்கப் போவோமே என்று எண்ணினாள்.

தோட்டத்தைப் பார்த்த சன்னல் ஓரம் இருவரும் மெத்தை நாற்காலியில் அமர்ந்து கொண்டார்கள்.

வெளியே மினுமினுவென்று கறுக்கு இருள் திரண்டு கொண்டிருந்தது. உள்ளே வந்த வாடையில் மல்லிவாசம் மெல்லிதாக மிதந்தது.

கண்களை மூடினாள்! ஒரு ஆனந்த லயிப்பு அவை மீது விழுந்தன.

''ஹேய்! என்ன இது! சோப்பு விளம்பரத்திற்குப் போஸ் கொடுக்கறியா?'' என்று சீண்டினான் பிரசாத்.

''நோ, நோ, பிரசாத்! உண்மையிலே நான் எனக்குள்ளேயே லயிக்கப் போயிருக்கேன்! பத்து வருஷத்துக்கு முந்தி எப்படி இருந்தோம், ஞாபகம் இருக்கா? இந்த மாதிரி நிம்மதியா உட்கார முடிஞ்சுதா! அப்படி உட்காரத்தான் இடம் கிடைச்சுதா! சாண் அகல வீட்டிலே ஒண்டுக்குடித் தனம்...

ஒரு நீண்ட மூச்சில் இழைந்தவாறு அவள் கண்களை மூடினாள்.

பத்து வருடங்கள் சரசரவென்று பின் னால் ஓடியது.

அந்தப் பழைய காலம் உண்மையில் ஒரு பயங்கர நரகம் போல் இன்னும் தோன் றியது.

பணம் இல்லாது தவித்துத் திண்டாடிய வெறும் வறுமை நாட்கள் அவை.

அவைகளை அவள் எப்படி மறக்க முடியும்? இப்போது நினைத்தால் கூட மனத்தில் அதன் காப்பு கசிந்து வழி கிறதே!

அதுவும் கல்யாணம் ஆன புதிது!

புக்ககம் வந்து சேர்ந்ததும் அவ னுடைய அப்பாவும் அம்மாவும் ஒருத்தர் பின் ஒருத்தராக நோயில் விழ, இவர் குடும் பத்துப் பணம் அத்தனையையும் செல வழிக்க, பலன், பிரசாத் கை வெறுங்கை ஆனதுதான் மிச்சம்! அவரது அப்பாவும் அம்மாவும் ஒரே தினத்தில் வைகுண்ட யாத் திரை போய் விட்டார்கள்.

அந்தச் சமயத்தில் வசந்தா படித்துக் கொண்டிருந்த நேரம். புக்ககம் வந்த பிறகும் தொடர்ந்து படிக்கலாம் என்று பிரசாத் சொல்லி விட்டார். உண்மையில் அவர் வற் புறுத்திதான் அவள் சட்டப் படிப்பு படிக்க ஆரம்பித்தது.

எனவே அவளது பாரமும் பிரசாத்தின் மீது விழ, அப்பா, அந்த நாட்களை நினைத் தாலே மனம் கருக்காகக் கருள்கிறது!

''பிரசாத் ஒண்டுக்குடித்தனத்திலே கஷ்டப்பட்டோம் நினைவு இருக்கா? கல் யாணம் ஆன புதுசு. தனியா இருக்கிறதுக்கு இடம் கிடையாது...''

முகத்தைச் சிலிர்த்து விட்டு நிறுத்தி னாள் வசந்தா.

''இந்தா. அதை எப்பவும் நினைக் காதே! இப்போ இருக்கிற நிம்மதி போயிடும்!'' என்றான் பிரசாத்.

அவள் கண்ணைத் திறக்க விட்டு...

''நினைக்கலை'' என்று ஒரு வார்த் தைகளை மட்டும் கூறினாள்.

ஆனால் மனம் மட்டும் அதை நினைத் துக் கொண்டே இருந்தது. அவளால் அந்த நினைப்பைத் தடுக்க முடியாது போல் தோன்றியது.

அந்த நிலவரத்தின் போதுதானே அந்த பயங்கரம் நிகழ்ந்தது?

ஆமாம்!

ஒருநாள் அலங்க மலங்க வந்தார் இரவு எட்டு மணிக்கு!

''என்ன? என்ன? என்ன?'' என்று பலமுறை கேட்ட பின்னால் பிரசாத் மெது வாக ஒவ்வொரு வார்த்தையாகச் சொன் னான்.


Designer 3 Blade
Tycoon Rainbow
Designer 4 Blade
Hexagon.
Sona cabin
Tycoon Rainbow Table
Chiki
Sona Oscillating Wall
Freshair Deluxe
எங்களது
மனமார்ந்த
நல் வாழ்த்துக்கள்
Mini Super
khaitan
Freshair
Heavy Duty Exhaust Fan
கேதான்
பெயர் ஒன்றே போதுமானது
Sona Pedestal
Iron
Warmblo
Geyser
Cooler
Sandwich Toaster
Oven Toaster Griller

''பத்தாயிரம் வேணும்! பணத்தை இரண்டு நாளில் கட்டா விட்டால் வேலை போயிடும்! ஒரு எக்கச்சக்க சூழ்நிலை'' என்றான் பயங்கரமாக.

சீக்கிரமே யோசித்து சீக்கிரமே ஒரு தீர்மானத்துக்கு அவள் வந்தாள்.

அவளது நான்கு நகைகளும் மார்வாடிக் கடையில் இருந்தன.

''அப்படியே விலைக்குக் கொடுத்துட்டு, வட்டி போக மிச்சத்தை எடுத்திட்டு வாங்க'' என்று தயக்கமில்லாமல் கூறினாள்.

அவனுக்கும் வேறு வழியில்லை! காலையில் எழுந்ததும் ஓடினான். அப்படியும் எட்டாயிரம்தான் தேறியது. மீதி 2000க்கு தனது அண்ணன் வீடு சென்று... கெஞ்சி...

அப்பா! நரக நாட்கள் அவை!

தினம் தினம் முழுசாகச் சாப்பிடவே கஷ்டமாகி விட்டது.

இந்த லட்சணத்தில் கருத்தடை வேலை செய்யாமல் கர்ப்பம் வேறு... கடவுளே, நினைத்தாலும் இப்போது வயிற்றைக் கரைக்கிறது.

நல்ல வேளை. அதன் பிறகு வாழ்க்கை நிதானமாக ஓடியது. சோதனை வரவில்லை.

அவரும் கஷ்டப்பட்டு உழைத்தார். இரவு வருவதற்கே நேரமாகியது. அவ்வளவு உழைத்தார்.

கொட்டு கொட்டென்று அவள் விழித்து உட்கார்ந்திருப்பாள்.

''ஒண்ணும் பயப்படாதே! டைரக்டருக்கு என் மேலே ரொம்ப நம்பிக்கை வந்துடுத்து! ஏதாவது நன்மை பிறக்கும்!'' என்று சமாதானப்படுத்துவான் அவன்.

அவளுக்கு நம்பிக்கையே வந்ததில்லை.

''பயப்படாதே, இன்னும் கொஞ்ச நாள் தான்! ஒரு பெரிய தூக்காகத் தூக்கப் போகுது பார்! அதிர்ஷ்டம்! நம்ப வறுமை எல்லாம் பஞ்சாப் பறந்து போயிடும்...'' என்றான் அவன் ஒருநாள்.

ஓர் இரவு பிரசாத் மிகவும் தாமதித்து வர அவனது முகத்தையும் தோற்றத்தையும் பார்த்து அவள் பயந்தே போய் விட்டாள்.

''என்னங்க! ஏதாவது நடந்திச்சா?'' என்று கலக்கமுடன் கேட்டாள்.

''ஒண்ணுமில்லை ஒண்ணுமில்லை'' என்று அவன் சொன்னானே தவிர, அவனால் சரியாகச் சாப்பிட முடியவில்லை. சரியாக உறங்க முடியவும் இல்லை.

இரண்டு நாட்கள் அந்த நிலைமை நீடிக்க, சரி, மற்றொரு பணக் கஷ்டம் வந்திருக்கிறது என்று அவள் வேதனைப்பட ஆரம்பித்தாள். பின்வர் சென்ற நாட்களில் அவன் மெள்ள மெள்ள சுபாவத்துக்கு வந்து விட்டான்.

மீண்டு வந்தான், ரொம்பத் தெம்பாகவும் பேசினான்.

''பார்த்துக்கிட்டே இரு வசந்தா! கொஞ்ச நாளிலே நம்ப நிலையே மாறப் போகுது பாரு!'' என்று மார்தட்டினான்.

அவளுக்கு நம்பிக்கை இல்லை. இருந்தாலும் ஒப்புக்காகப் புன்னகை காட்டினாள்.

ஆச்சரியம்! பிரசாத் சொன்னதே நடந்து விட்டது! அதிர்ஷ்டம் ஏதோ சொட்டுகளாக வரவில்லை! கொட்டு மழையாக வந்தது.

''பூம்'' என்று ஒரு ஜால வித்தை போல் எல்லாம் மாறி விட்டது! பணம் கொழித்து, ஒரு கவலையில்லாத சுக வாழ்க்கை வந்தாகி விட்டது. இரண்டே இரண்டு மாதங்களுக்குள் நடந்து விட்டன அவை!



## புதினா பொடி

வதக்கிய புதினா இலைகள் ஒரு ஸ்பூன், பொட்டுக்கடலை ஒரு கரண்டி, மிளகு ஒரு ஸ்பூன், இஞ்சி ஒரு துண்டு, தேவையான அளவு உப்பு சேர்த்துப் பொடி செய்து விடுங்கள்.

– கீதா





# மைதிலீஸ்

மலேஷியா, ஹாங்காங்கில் அழகுக் கலை ஹேர்கட்டிங், சிறப்பு பயிற்சி மேற்க் கொண்டு உலக அளவில் ஹாங்காங்கில் நடைபெற்ற அழகு கலை சம்பந்தமான பொருட்காட்சியில் கலந்து கொண்ட பின்னர் தமிழக மகளிருக்காக மைதிலீஸ் நிறுவனத்தின் உரிமையாளரான

> திருமதி S. மைதிலிபாபு அவர்கள் இலவச ஆலோசனை 15 நாட்களுக்கு அளிக்கின்றார்.

(15-1-94 to 31-1-94) வெளிநாட்டு மாணவிகளுக்கு 15 நாட்களில் அழகு கலை சம்பந்தமான அனைத்து சிறப்பு பயிற்சிகளும் அளிக்கப்படும் கட்டணம் தனி.

அழகுகலை நிலையம் துவங்க கட்டணம் ரூ.7000 காலம் 1 மாதம்

### அழகுக்கலை பயின்ற நிபுணர்களுக்கான அட்வான்ஸ் கோர்ஸ்கள் 2 நாட்கள் மட்டும்

1. எலெக்ராளஸிஸ் ரூ. 2000,
2. நறுமண சிகிச்சை முறை ரூ. 2,000.
3. புருவத்தை பெரிதுபடுத்துதல் ரூ. 2,500.
4. கெமிக்கல், ஹெர்பல் 20 Products Preparations ரூ. 2,500.
5. சைனீஸ் டெக்னிக்கலில் ஹேர் டிசைன்ஸ், கட்டிங், கொண்டைகள், முடியை கலர் செய்து பள பளபாக்குதல் கட்டணம் ரூ. 2,500.
6. லக்ஷ்மி, சரஸ்வதி போன்ற 9 வகை, மேக்கப்புகள் ஆடை, ஆபரணங்களுடன் விளக்கமாக சொல்லி கொடுக்கப்படும் கட்டணம் ரூ.2,500.

### மைதிலி ஹெர்பல் நிறுவனத்தின் சிகிச்சைகள்

மைதிலீஸ் ஹெர்பல் பேஷியல் அரோமா பேஷியல் தெர்மோ பேஷியல் முகப்பரு வராமல் தடுத்தல், கருப்பு கலர் நீக்குதல், புதிய சைனீஸ் பேஷனில் ஹேர் கட் செய்தல், முடிக்கு ஹெர்பல் சாயமிடுதல் ஹென்னா கன்டிஷனர், செய்தல், பொடுகு தொல்லை நீக்குதல், முடி கொட்டுவதை தடுத்தல் இளநரை வராமல் தடுத்தல் முடியை கருளாக்குதல், கை, கால் உடம்பில் உள்ள சுருக்கங்களை நீக்குதல், பரத நாட்டியத்திற்கு மேக்கப் போடுதல் இயற்கை முறையில் இணைக்க வைத்தல் முகத்தில் உள்ள தேவையில்லாத முடியை நீக்குதல் புருவத்தை பெரிதுபடுத்துதல் மணமகள் அலங்காரம்.

புத்தாண்டு வாழ்த்துக்களுடன் எங்களின் புதிய அழகான A/cயுடன் கூடிய புதிய கட்டிடம் மகளிரின் வசதிக்காக இயங்குகின்றது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.



## Mrs. B. S. MYTHILI

Dip in Hair dressings. River Academy Honkong
Dip in Teachers Training IVETE South America

**மைதிலீஸ் மகளிர்**
**ஹெர்பல் கிளினிக் A/C**
**No. 1 பிரகாசம் ரோடு**
**பனகல் பார்க் தி.நகர்**
**சென்னை - 600 017.**

**நிர்வாக அலுவலகம் :**
**14, ராம்ஸ் பஜார்,**
**3, பிரகாசம் ரோடு**
**பனகல் பார்க், தி.நகர்**
**சென்னை - 600 017.**

**ஹாஸ்டல் வசதி உண்டு**

**தொலைபேசி எண்-8282863**

## எங்கள் நிறுவனத்தில் சென்ற பிரிவில் பயிற்சி பெற்ற மாணவிகள்


செல்லம்
மலேசியா


அமுதா
மலேசியா


விஜயா
கட்டாக்


ஹெலன்
ஆந்திரா


தனலெக்ஷ்மி
சென்னை - 91


S. அமுதாகனகராஜன்
பாண்டி


மேரி
சென்னை-87.


ரூபி
சென்னை.


சுலோக்ஷனா
விழுப்புரம்.


ஹசின்பேகம்
திருச்சி - 18.


Mrs. ஜாய்
தஞ்சாவூர்


காந்திமதி
காரைக்கால்


சுகந்தி
திருப்பூர்


S. ஜெயாமகேந்திரன்
மதுரை


G. J. விஜயா
மதுரை




**கொத்துமல்லி தொக்கு**

ஒரு கப் நன்கு சுத்தம் செய்யப்பட்ட கொத்துமல்லி, 2 பச்சை மிளகாய், ஒரு துண்டு இஞ்சி, தேவையான அளவு உப்பு சேர்த்துத் தண்ணீர் விடாமல் அரைத்து எடுங்கள்.

- கீதா

''ஹேய் என்ன? பழமையை நினைச் சுட்டே இருக்கியா?'' என்று பிரசாத் கேட்ட தும்,

திடுக்கிட்டு அவள் விழித்தாள். அப்பா! அத்தனையும் பழம் காலம்தானே! என்று பெருமூச்சுடன் நினைத்தாள். பெரிய புன் னகை ஒன்று பூத்துக் கொண்டு அவனுடன் டைனிங் ஹாலுக்குப் புறப்பட்டுப் போனாள்.

இரவு அவள் நிம்மதியாக உறங்க வேண்டியவள். ஆனால் ஏன் அந்தப் பெண் ணின் உருவம் அடிக்கடி அவள் மனதில் வந்தது. ''நான் நிச்சயம் என் புருஷனை நம்ப மாட்டேங்க!'' என்று கோர்ட்டில் அவள் அடித்துச் சொன்னது நினைவுக்கு வந்தது!

அந்தப் பெண்ணின் தோற்றம் அடிக்கடி திரும்பி வர, இரவுத் தூக்கம் சுரத்தில்லாமல் வடிந்து சென்றது.

காலையில் எழுந்ததும், பத்திரிகைகள் புரட்டியதும், அந்தச் செய்தி கண்ணில் பட்டது. சிறிது கூடத் தயங்காமல்,

''பிரசாத், பிரசாத்!'' என்று அழைத்துக் கொண்டே படுக்கை அறைக்கு விரைந்தாள் அவள்.

அப்போது மணி காலை ஏழு! அவன் மெதுவாக சோம்பல் வளைத்து எழுந்தான்.

''பாருங்க, பிரசாத்! கம்பெனியிலே உங்களோடு வேலை பார்த்தாலே சபாபதி! அவனைப் பற்றி செய்தி வந்திருக்கு...''

''பேர் என்ன சொன்னே?'' என்று சுரத்து இல்லாமல் கேட்டான் அவன்.

''சபாபதி...''

''ஓ'' என்று கூறிய அவனது முகம் ஒரு கணம் பின்னுக்கு இழுத்தது. கண்கள் எங் கேயோ பார்க்க, ஒரு நிழல் அவன் நெற்றி யில் படர்ந்து செல்வது போல் தோன்றி யது.

வசந்தாவின் ஒரு கால் பின்னுக்கு இழுத் தது. சபாபதி பெயரை எப்போது சொன்னா லும் பிரசாத்திடம் ஒரு சின்ன மாறுதலாவது தோணுவதை அவள் முன்பே கவனித் திருக்கிறாள்.

சமயங்களில் அவனே சொல்லியிருக் கிறான்.

''பாவம்! சபாபதி! நான் சொன்னது தான் முக்கியமாப் போயிடுத்து! அதனாலே தான் அவனுக்கு சிறை தண்டனை கிடைச் சுது. ஊம்ம்ம்'' என்று அங்கலாய்ப்புடன் கூறியிருக்கிறான்.

இப்போது பரபரப்பாக அந்தப் பேப் பரை வாங்கிப் படித்தான்.

'சபாபதியின் மனைவி கௌரி அரசாங் கத்திற்கு ஒரு விண்ணப்பம் விடுத்திருக் கிறாள். தன் கணவன் ஒரு நிரபராதி. பணத்தை அவன் திருடவும் இல்லை; யாரை யும் கொலை பண்ணவும் இல்லை. உண்மைக் குற்றவாளியைக் கண்டுபிடியுங் கள்! என் கணவரை அவசியம் விடுதலை செய்யுங்கள்!'

பேப்பரில் இந்தச் செய்திதான் வந்தி ருந்தது.

மிக மெதுவாக பேப்பரை மடித்து வைத் தான். ''வசந்தா! நான் சீக்கிரம் போகணும்! சீக்கிரம் சமையல் ரெடி பண்ணு...!'' என்றான்.

''ஏன், என்ன விஷயம்?'' என்றாள் அவள்.

''ஊம்...'' என்று இழுத்த அவன், ''ஆபீ ஸிலே வேலை இருக்கு!'' என்றான் கீழே குனிந்து கொண்டு.

(தொடரும்)


Sathya®

# சொல்ல விரும்புகிறோம்

★ 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்பதற்கிணங்க அமைந்திருந்தது 'ஞானி' சிறுகதை. பாட்டியின் 'ஹோய்' ஒலியில்தான் எத்தனை அர்த்தங்கள். நெஞ்சைத் தொட்டது.
பெங்களூர் - 5, யோகாம்பாள்.

★ பாட்டியை கதை நாயகியாக்கிய 'ஏ.கே', மணிரத்தினத்திற்கு மிகவும் நெருங்கியவரா?
பாண்டிச்சேரி, வி. விஜய், வி. சந்யா.

★ மணமான புதிதில் தான் நடந்து கொண்ட விதத்தை அலசி அதற்கு வருந்தி, தான் சாய்ந்து கொள்ள, ஏக்கங்களை, ஆசைகளைப் பகிர்ந்து கொள்ள ஒரு அந்நியோன்யமான துணை தேடும் ஓய்வு பெற்ற ஒரு ஆணின் மனக்கிலேசங்களைத் துல்லியமாகப் பிரதிபலித்துக் காட்டியது மாலதியின் என் இனிய தோழி சிறுகதை.
திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

★ கையில் எது கிடைத்தாலும் 'உள்ளே' தள்ளிக் கொண்டிருப்பவர்களுக்கும், அதனால் ஏற்படும் வயிற்றுக் கோளாறுகளால் அவதிப்படுபவர்களுக்கும், பல்வேறு மருத்துவ முறைகள் மூலம் அவற்றைத் தவிர்க்க வகை செய்யும் பயனுள்ள கட்டுரையாக அமைந்திருந்தது - 'சாப்பாட்டுக்குப் பின் சங்கடம் ஏன்?' கட்டுரை! அந்தப் பகுதியை 'கட்' பண்ணி, டாட் சிறப்பிதழோடு ஒட்டி விட்டேன்.
கட்டமராபாளையம், சி. கண்ணன்.

★ கல்யாண சிலன் - 3 ல் குறிப்பிட்டிருந்த திருமணத்தில் சமூக சேவை விலை மதிப்பற்றது. இன்று பெரிய இடத்துத் திருமணங்களுக்கு அழைப்பு அனுப்பிவிடும் அந்தப் பெரிய இடத்துப் புள்ளிகள் தங்களது வீட்டு விசேஷங்களுக்கு வருகை தரும் நபர்களின் மத்தியில் ஏழை, பணக்கார வேறுபாட்டினை சம்பந்தப்பட்டவர்களை வரவேற்பதிலேயே வெளிப்படையாகக் காட்டி விடுவார்கள். இவர்களின் நடுவில், அனைவரையும் ஒரே சீராக வரவேற்று உபசரித்த பரசுராமன், கமலா பரசுராமன் தம்பதியர்களின் பெருந்தன்மையைப் போற்றுவதற்கு வார்த்தைகளே புலப்படவில்லை.
தோட்டக்குறிச்சி, வளையாபதி.

★ ''புத்தாண்டு வாழ்த்துக்கள் செய்து பாருங்கள்'' என்று அட்டைப் படத்தில் வெளியிட்டதன் மூலம், செய்முறை இதழின் உள்ளே இருப்பது பற்றிய குறிப்பையும், வாசகர்களுக்கு புத்தாண்டு வாழ்த்துக்களையும் ஒரே சமயத்தில் வெளிப்படுத்திய மங்கையர் மலரின் சாமர்த்தியத்தை எண்ணி வியக்காமல் இருக்க முடியவில்லை.
தூத்துக்குடி, என். சம்பத்.

★ மாங்கல்ய தாரணம் முடிந்ததும் மணமகனும், மணமகளும் மேடையின் முன்பு பதினைந்து நிமிடங்கள் அமைதியாக அமர்ந்தால், விருந்தினர் ஒவ்வொருவராக வந்து, மலர் தூவி, பரிசுகள் வழங்க வாய்ப்பாக இருக்கும் என்று ஒரு வாசகி எழுதியிருந்தார். இன்றைய அவசர யுகத்தில் மக்களுக்கு அவ்வளவு பொறுமை இருக்கிறதா? மாங்கல்ய தாரணம், பரிசு/மொய் வழங்குதல் (கூடத்தில் 5, 6 இடங்களில் நிரை கவுண்ட்டர்கள் முளைத்து இவை வசூலிக்கப்படுகின்றன), போஜனம், தாம்பூலப்பையுடன், 'வரட்டுமா, நல்லது, மகிழ்ச்சி' இவை மின்னல் வேகத்தில் நடந்து முடிகின்றன. சில ஆண்டுகளில், அவரவர் ஊரிலிருந்தே பரிசுப் பொருள்களையும், வாழ்த்துக்களையும், அனுப்பி, ஆங்காங்குள்ள சிறந்த ஹோட்டல்களில் சிறப்பு விருந்துக்கும் முன் கூட்டி ஏற்பாடு செய்யப்படலாம்.
சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

★ தவிர்க்க முடியாத தபால் செலவுடன், வாழ்த்து மடல்களின் விலையும் அதிகரித்து வரும் இந்நாளில், குறைந்த செலவில் வித்தியாசமான முறையில் வாழ்த்து மடல்கள் தயாரித்து அனுப்ப யோசனை கூறியிருக்கும் மங்கையர் மலரை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.
மதுரை, எஸ். சுஜாதா.

★ தேவநாதனின் அவரைப் பேசவிடுங்கள் என்ற கட்டுரை ஒவ்வொரு தம்பதியரும் படித்து பயன் பெற வேண்டியது. இக்கட்டுரையைப் படிக்கும் ஒவ்வொரு குடும்பத்தையும் இது சிந்திக்க வைக்கும் என்பது மறுக்க முடியாத உண்மை.
மதுரை, ஆர்.ஏ. வளர்மதி.

★ ஆ..... பரோட்டாவில் இத்தனை விதமா? கே. பாக்யலஷ்மி அவர்களே! இதோ உங்களுக்கு பரோட்டா பாக்யலஷ்மி என்று பட்டம் கொடுத்து பரோட்டாகிறேன். சாரி! பாராட்டுகிறேன். நன்றி!
சென்னை - 91, நாமகிரி ராமன்.



நோபல் பரிசுகள் வழங்கப்படத் தொடங்கி 95 ஆண்டுகளாகி விட்டன. ஆண்டுதோறும் (சில ஆண்டுகளைத் தவிர) அமைதிக்கான பரிசு வழங்கப்பட்டாலும் இதுவரை அவற்றைப் பெற்ற பெண்மணிகள் ஒன்பது பேர்தான். "குடும்பப் பூசல்களுக்குக் காரணம் பெண்கள்தான்" என்ற மேம்போக்கான கருத்து நம் நாட்டில் உண்டு. அப்படியிருக்க சர்வதேச அளவில் அமைதிக்காகப் பெரும் சாதனைகள் செய்த அந்த ஒன்பது பெண்மணிகளின் வாழ்க்கைப் பக்கங்களைச் சிறிது புரட்டுவோமா?



* ஜேன்



* எமிலி

### பெர்தா வான் சுட்னர் :

நோபல் பரிசு பெற்ற வருடம் – 1905

இவர் நோபல் பரிசை ஏற்படுத்திய ஆல்ஃப்ரட் நோபலின் தோழி மட்டுமல்ல. சமாதானத்துக்கான



# அமைதி வேண்டிய

* பெர்தா



* பெட்டி



* அன்னை தெரசா

பரிசையும் நோபல் தன் உயிலில் சேர்க்கத் தூண்டுகோலாக இருந்தவரும் கூட.

போரை எதிர்க்கும் உணர்வுடன் இவர் எழுதிய பிரபல நாவல்தான் "உங்கள் ஆயுதங்களைக் கீழே போடுங்கள்."

பெர்தா-நோபல் சந்திப்பு ஏற்பட்டதின் பின்னணியே சுவாரசியமானது. பெர்தா ஆஸ்திரியாவைச் சேர்ந்த ஓர் உயர்குடும்பப் பெண்மணி. ராணுவத்தில் பெரும் பதவி வகித்த அவர் தந்தை இறந்து விட, பெர்தாவின் தாயார் சூதாட்டத்தில் சொத்துக்களை எல்லாம் இழந்து விட்டார். இந்த நிலையில் தன் சொந்தக் காலில் நிற்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்ட பெர்தா, சுட்னர் குடும்பத்தில் அவர்களது நான்கு பெண்களுக்குப் பாடம் கற்பிப்பவராகச் சேர்ந்தார். ஆனால் வேறொரு திருப்பம் காத்திருந்தது. அந்தப் பெண்களின் சகோதரனான ஆர்தர் அழகும், புத்திசாலித்தனமும் கொண்ட பெர்தாவை விரும்பினார். ஆர்தரின் தாயாருக்கு இது பிடிக்கவில்லை. பாரிஸில் உள்ள ஒரு வயதான கனவான் தனக்கு உதவியாளர் தேவை என்று செய்த விளம்பரத்துக்கு விண்ணப்பிக்குமாறு பெர்தாவை வற்புறுத்தினார். தன்னால் அக் குடும்பத்தில் பிரச்னை உண்டாவதை விரும்பாத பெர்தா அப்படியே விண்ணப்பித்து அந்தக் கனவானுக்கு உதவியாளராகவும் சேர்ந்தார்.

ஆனால் பல நூறு மைல்களுக்கு அப்பால் இருந்தாலும் ஆர்தரால் பெர்தாவை மறக்க முடியவில்லை. மீண்டும் மீண்டும் பெர்தாவை அணுகினார். பெர்தா மனதை மாற்றிக் கொள்ள, அவரும் ஆர்தரும் திருமணம் செய்து கொண்டனர். மீண்டும் கணவனுடன் திரும்ப வேண்டிய நிலை ஏற்பட்டது. நோபலுக்கு வருத்தம், தன்னிடம் வேலை செய்த ஒரு திறமையான உதவியாளரை இழக்கிறோமே என்று (ஆம். அவர்தான் அந்த 'வயதான கனவான்'). இருந்தாலும் வாழ்த்தி விடைகொடுத்தார். கடித மூலம் நோபல் - பெர்தா நட்பும் கருத்துப் பரிமாற்றங்களும் தொடர்ந்தது.

ஆர்தர்-பெர்தா இருவருமே நல்ல எழுத்தாளர்கள். நிறைய நூல்களை எழுதினர். முதலில் புரட்சி, போராட்டம் போன்ற கொள்கைகள் சார்ந்த விஷயங்களில் கவனம் செலுத்தினாலும் பின்னாளில் ஆக்கபூர்வமாக சீர்திருத்தக் கருத்துக்களை தம் நூல்களில் புகுத்தினர். ஆஸ்திரியாவில் இவர்கள் புகழ் பரவியது.

லண்டனிலுள்ள அமைதி அமைப்பைப் பற்றிக் கேள்விப்பட்ட பெர்தா தனது அடுத்த நாவலுக்கு அதுவே கருப்பொருளெனத் தீர்மானித்தார். இதைப் பற்றி ஆராய ஆராய போரின் கொடும் விளைவுகளையும், அதனால் யாருக்குமே பயனில்லை என்பதையும் தெளிவாக அறிந்து

# பெண்மணிகள்

கொண்டார். இதிலிருந்து அவரது நூல்களில் சமாதானத்தை வற்புறுத்திப் பலவிதங்களில் எழுதினார்.

நோபல் தனது உயிலில் சமாதானத்துக்கான தனது பரிசை பெர்தாவுக்கு அளிக்க வேண்டும் என்று எழுதியிருந்ததாக அவரது சொந்தக்காரர் அறிக்கை வெளியிட்டார். ஆனால் பல ஆண்டுகள் பெர்தாவுக்குப் பரிசு கொடுக்கப்படவில்லை. அப்படி இருக்கையில் 'குறைவான தபால் தலை ஒட்டப்பட்டு' ஒரு உறை தனக்கு வந்திருப்பதாக பெர்தா அறிந்த போது அதிகப்படி பணத்தைக் கட்டி எரிச்சலுடன் அந்த உறையைப் பிரித்தார். பிரித்தவுடன் பெரு மகிழ்ச்சி அவருக்கு. நோபல் பரிசு அவருக்கே என்ற அறிவிப்புதான் அது என்பதை நீங்கள் ஊகித்திருப்பீர்கள். ஆனால் நோபல் தன் உயிலில் எழுதியதால்தான் அவருக்கு அந்தப் பரிசு அளிக்கப்பட்டதோ என்றெண்ணி அவரது சேவையைக் குறைத்து மதிப்பிடக் கூடாது. 1905ல் பெர்தாவுக்குப் பரிசு கொடுக்க வேண்டுமென்ற தாக்கல் மிக அதிகமான வேட்பாளர்களிடமிருந்து நோபல் சமாதானப் பரிசுக் குழுவுக்கு வந்தது. அவர்கள் சமாதான இயக்கங்களைச் சேர்ந்தவர்கள் மட்டுமல்ல, பல்வேறு நாடுகளில் சட்டசபை உறுப்பினர்களும், பெரும்புள்ளிகளும் கூட.











வெள்ளி கொலுசுகளைப்
பளபளவென ஆக்க ஓர் எளிய வழி.
அதை அரை டம்ளர் தண்ணீரில் ஷாம்பூ
போட்டுக் குலுக்கி அதில் அரை மணி நேரம்
போட்டு வையுங்கள். பிறகு கசக்கி, சுத்தமான
தண்ணீரில் தேய்த்துக் கழுவுங்கள். நன்றாக
ஈரம் போகத் துடைத்துப் பாருங்கள்.
தேடாதீர்கள் அழுக்கை... டைம் வேஸ்ட்.
கண்ணைக் கூசும் பளபளா கொலுசு!
- பி. மஞ்சுளா

பெர்தா தன் வாழ்நாள் முழுதும் சமாதானக் கொள்கைகளைப் பரப்பினார். அமெரிக்காவில் 1904ல் ஒரு சொற்பொழிவுக்காகச் சென்ற போது ஜனாதிபதி தியோடர் ரூஸ்வெல்ட் அவரை வெள்ளை மாளிகைக்கு அழைத்துக் கௌரவித்தார்.

பொது வாழ்விலிருந்து பெண்கள் விலகியிருந்த, விலக்கப்பட்டிருந்த கால கட்டத்தில் பெர்தாவின் அமைதிப் பணிகள் நிச்சயம் பாராட்டப்பட வேண்டியவையே.

## ஜேன் ஆடம்ஸ் :

**நோபல் பரிசு பெற்ற வருடம் - 1931**

அமெரிக்காவிலுள்ள இல்லினாய்ஸ் மாநிலத்தில் பிறந்தவர் ஜேன் ஆடம்ஸ். ஜேனின் அப்பா ஒரு அரசியல்வாதி. ஆபிரகாம் லிங்கனின் நண்பரும் கூட.

ஜேன் தன் பட்டப் படிப்பைப் பயின்ற கல்லூரி ஒரு கிறித்தவ போதனைக் கூடமும் கூட. சமூக சேவையின் முக்கியத்துவத்தை அப்போதே உணர்ந்து கொண்டார் ஜேன்.

முப்பது வயது முடிவதற்கு முன்பே 1889ல் தன் தோழி ஒருவருடன் சேர்ந்து ஜேன் சமூக மையமொன்றை சிகாகோவில் துவக்கினார். அருகில் உள்ள குடியிருப்பில் ஏழைகள்தான் எக்கச்சக்கம் - அதுவும் இத்தாலி, போலந்து, அயர்லாந்து, ஜெர்மனி போன்ற பல நாடுகளைச் சேர்ந்தவர்கள். 'ஹல் மேன்ஷன்' என்ற பெயரில் ஜேனால் தொடங்கப்பட்ட அந்த சமூக மையம் அந்த மக்களுக்குக் கல்வி, பொழுதுபோக்கு ஆகிய இரண்டு வகைகளிலுமே உதவியது. விரைவில் அந்தப் பகுதி மக்களுக்கு பாரதியின் கண்ணன் போல 'தோழியாய், மந்திரியாய், நல்லாசிரியனாய், தெய்வமாய், சேவகியாய்' விளங்கினார் ஜேன். விரைவிலேயே ஜேன் சிகாகோவில் பெரும்புள்ளியானார். வெளிநாட்டிலிருந்து வந்து குடியேறியவர்கள் அமெரிக்காவில் நாலாந்தரமாக நடத்தப்படுவதற்குக் கடும் எதிர்ப்பு தெரிவித்தார். இந்த நிலை மாற சமூக நீதியும், சட்டத் திருத்தமும் தேவையென்று போராடினார்.

1914ல் முதல் உலகப் போர் வெடித்தது. இந்தச் செய்தியை அறிந்ததும் ஜேனுக்கு முதலில் தற்கொலை செய்து கொள்ளலாமா என்று தோன்றியதாம். ஆனால் ஆக்கபூர்வமான பணிகளில் இறங்கினார். அமெரிக்காவிலுள்ள எல்லா மகளிர் இயக்கங்களையும் ஒன்றுகூட்டி வாஷிங்டனில் ஒரு மாநாடு நடத்தினார். ஜேனைத் தலைவியாகக் கொண்ட 'மகளிர் அமைதிக் கட்சி' உருவானது. நெதர்லாந்தில் சர்வதேச அமைதி மாநாடு நடந்த போது ஜேன் தலைமையேற்ற கட்சிக்கும் அழைப்பு சென்றது. நாற்பதுக்கும் மேற்பட்ட பெண் உறுப்பினர்களுடன் ஜேன் ஐரோப்பாவுக்குப் பயணமானார்.

இந்தப் பயணத்துக்கு ஏகப்பட்ட முட்டுக்கட்டைகள். ''அபத்தமானது. பயனில்லாதது'' என்று ஜேனின் இயக்கத்தை வர்ணித்தார் தியோடர் ரூஸ்வெல்ட் (பின்னாளில் இவரும் நோபல் பரிசு பெற்றார்). ''புறாக்களின் அரண்மனை'' என்று அவர்கள் சென்ற கப்பல் (கிண்டலாக) வர்ணிக்கப்பட்டது. பிரிட்டிஷ் அரசு வழியில் அந்தக் கப்பல் செல்லத் தடைவிதித்தது; பிறகு ஒரு வழியாக அனுமதித்தது.

1915ல் ஹேக் என்ற இடத்தில் நடந்த மாநாட்டில் சர்வதேச மகளிர் குழு ஒன்று அமைதிப் பணிக்காக உருவாக்கப்பட்டது. இதன் தலைவியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் ஜேன்தான். பல்வேறு ஐரோப்பிய நாடுகளுக்கு நேரடியாகச் சென்று அமைதி நிலவ முயற்சிகள் எடுத்துக் கொண்டார். லண்டன், பெர்லின், வியன்னா, ரோம், பாரிஸ் ஆகியவை இவர் சென்ற இடங்களில் சில. இது போன்ற முயற்சி அதுவரை நடந்திராத ஒன்று என்பது குறிப்பிடத்தக்கது.

வெளிப்படையாகப் போரை ஜேன் விமர்சித்ததைப் பலர் விரும்பவில்லை. தேசபக்திக்கு எதிரான செயல் என்றே அதை அவர்கள் கருதினார்கள். ஜேன் பத்திரிகைகளால் ஒதுக்கப்பட்டார். அவர் துவங்கிய சமூக மையம் கலவரங்களின் மையமாக உருவகப்படுத்தப்பட்டது.



K.T.KUNJUMON
Presents
A.R.S.பிலிம் இண்டர்நேஷனல்

## இது உலகமெல்லாம் நடந்து கொண்டிருக்கும் கதை

''சிந்துநதிபூ'' படத்தைப் பார்த்தால் கணவன், மனைவியரிடையே நிலவும் பாசமும், பந்தமும், தாய் குழந்தைகளுக்கிடையே காட்டும் தாய்ப்பாசமும், தந்தை குழந்தைகளுக்கிடையே உள்ள பந்தமும், யாராலும் பிரிக்க முடியாதது என்பது நிதர்சனமான உண்மை என்பது புரியும்.



ஆனால் ஹேக் மாநாட்டில் அவர் உருவமைத்த சர்வதேசப் பிணைப்புக்கள் செயல்படத் தொடங்கின. அதன் தொடர்ச்சியாக ஜுரிச்சில் நடந்த ஒரு மாநாட்டில் "சர்வதேச மகளிர் அமைதி மற்றும் சுதந்திரக் குழு" என்ற ஒரு நிரந்தர அமைப்பு உருவானது. இந்த சர்வதேச இயக்கத்தின் தலைவரானார் ஜேன். அமைதிப் பணிக்காக நிதி சேர்ப்பதில் ஜேன் காட்டிய ஆர்வமும் திறமையும் குறிப்பிடத்தக்கது.

## எமிலி க்ரீன் பால்ச் :

### நோபல் பரிசு பெற்ற வருடம் - 1946

இவரும் ஒரு அமெரிக்கர்தான். பாஸ்டன் நகரின் பிரபல வழக்கறிஞர் ஒருவரின் மகள். ஃபிலடெல்பியாவிலுள்ள கல்லூரியில் படித்த போது கல்லூரி நிர்வாகம் இவருக்கு ஒரு பரிசளித்தது. எதற்குத் தெரியுமா? 'மிகச் சிறந்த அக அழகு'க்காக. அதாவது அந்த அளவு மனிதாபிமானமும், நற்பண்புகளும் அப்போதே சுடர்விட்டன அவரிடம். மேற்படிப்புக்கு அவர் ஆராய்ச்சிக்காக எடுத்துக் கொண்ட தலைப்பு "ஏழைகளின் துயர்துடைப்பில் அரசின் கடமை" என்பதாகும்.

சமூகசேவையில் ஈடுபட்டபோதே அமெரிக்கத் தொழிலாளர் கூட்டமைப்பில் பங்குகொண்டார். ஒரு சமயம் கெரெட் தயாரிப்புத் தொழிலாளர்களின் பிரதிநிதியாகவும் இவர் வாதாடியிருக்கிறார்.

பாஸ்டனில் உள்ள கல்லூரியில் பொருளாதார ஆசிரியையாகப் பணிபுரிந்த போது மாணவர்களை வியர்வை சொட்ட வேலை வாங்குபவர் என்ற பெயர் இவருக்கு. பாடங்களும், நூலகமும் போதாது. நேரடியாகவும் சென்று மக்களின் பிரச்னைகளை சந்தித்தால்தான் பொருளாதாரத்தைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியுமென்று வலியுறுத்தினார். அவர் புகழ் பரவியது.

குறைந்தபட்ச ஊதியத்தை நிர்ணயிக்கும் வகையில் சட்டம் உருவாக்க ஒரு குழுவை அமெரிக்க ஐக்கிய நாடுகள் அமைத்தது. அந்தக் குழுவின் தலைவராக எமிலியை நியமித்து கௌரவப்படுத்தியது அரசு.

"நமது ஸ்லாவ் சககுடிமக்கள்" என்ற நூல் எமிலிக்குப் பெரும் பாராட்டுதலைப் பெற்றுத் தந்தது. அமெரிக்காவில் குடியேறிய ஸ்லாவ் இன மக்களின் நிலையை அற்புதமாகப் படம்பிடித்திருந்தார் எமிலி அந்த நூலில்.

உலகப் போர் உருவானதும் வகுப்பறையிலிருந்து வெளியுலகிற்கு வந்தார் எமிலி. "போர் என்பது கிறித்தவ மதத்தால் ஒப்புக் கொள்ளப்படாதது. எனவே போர் உடனே நிறுத்தப்பட வேண்டும்" என்று அறிவித்தார். ஜேன் ஆடம்ஸைத் தலைவியாகக் கொண்ட மகளிர் அமைதிப்படையில் சேர்ந்தார். தன் ஆசிரியை வேலைக்கு முழுக்குப் போட்டார்.

ஸ்காண்டிநேவியா, ரஷ்யா ஆகிய நாடுகளுக்குச் சென்று அமைதியை வலியுறுத்தும் பணி எமிலியிடம் ஒப்படைக்கப்பட்டது. ஜேன் நீண்ட நாள் நோய்வாய்ப்பட்டிருந்த போது அவரது பொறுப்புகளை செவ்வனே நிறைவேற்றினார் எமிலி. போர் நிறுத்தத்துக்குச் சில புதிய வழிமுறைகளையும் எமிலி பரிந்துரைத்தார். போரில் அமெரிக்கத் தலையீடு இருப்பதை வன்மையாகக் கண்டித்தார் எமிலி. அதனால் பல அமெரிக்கர்களால் வெறுக்கப்பட்டார்.

பின்னாளில் ஜேனைத் தலைவியாகக் கொண்ட நிரந்தர மகளிர் அமைதி இயக்கம் தோன்றிய போது அதன் செயலாளர் பதவி எமிலியைத் தேடி வந்தது. 1937ல் ஜேன் இறந்தவுடன் எமிலி அந்த இயக்கத்தின் தலைவியானார். தன் இயக்கத்தில் அரசியல் கலக்கக் கூடாது என்பதில் மிகத் தீர்மானமாக இருந்ததால் எமிலி சங்கடமான சூழ்நிலையை சந்திக்கவும் நேர்ந்தது.

யாரையும் புண்படுத்தாத நகைச்சுவை எமிலியின் முக்கிய பலம். போதை மருந்து ஒழிப்பு, சர்வதேச விமான விதிகள், ஆயுதக் குறைப்பு ஆகிய துறைகளில் எமிலியின் பங்கு கணிசமானது. ஸ்பெயின் உள்நாட்டு



கிணற்றில் தினம் நீர் இறைக்கும் போது சக்கரம் (ராட்டிணம்) மிகவும் கடினமாக இருந்தால், கரகரவென்று சப்தம் வந்தால், ஒரு ஸ்பூன் விளக்கெண்ணெயை சக்கரத்தின் இரண்டு பக்கங்களிலும் தடவினால் மிகவும் ஈஸியாக, நீர் இறைக்க எளிதாக வரும். இது என் அனுபவத்தில் கண்டது.

- பி. வி. சாந்தி

வெண்டைக்காய் கறி செய்யும் போது சிறிது தயிர் ஊற்றி வதக்கினால், மொரமொரப்பாய் சுவையாய் இருக்கும். வழவழப்பும் இருக்காது. இது என் சொந்த அனுபவம்.

- வி. சி. கமலா



யுத்தத்தைத் தணித்ததிலும் எமிலிக்கு முக்கியப் பங்கு உண்டு.

பெர்ல் துறைமுகத்தை ஜப்பானியர்கள் தாக்கியது எமிலிக்குப் பெரும் அதிர்ச்சி. யாரும் அறியக் கூடாது என்பதில் உறுதியாக இருந்த எமிலி முதன் முறையாக கொடுங் கோலன் ஹிட்லர் அறிய வேண்டுமென்று பிரார்த்தித்தாராம்!

எமிலி இறந்த போது அவரது வயது 94.

## மைரீட் காரிகன்,

## பெட்டி வில்லியம்ஸ் :

**- நோபல் பரிசு பெற்ற வருடம் (இருவரும்) - 1976**

ஒரே ஆண்டில் நோபல் பரிசைப் பகிர்ந்து கொண்ட இந்த இருவருக்குமிடையில்தான் எத்தனை வேறுபாடுகள்! பெட்டி உயரமானவர், கரடுமுரடாகப் பேசுபவர், நடைமுறைவாதி. மைரீட் உருவத்தில் சிறியவர், பெண்மை நிரம்பியவர், எப்போதும் புன்னகைத்துக் கொண்டிருப்பவர், நிரம்ப உணர்ச்சிவசப்படுபவர்.

இந்த இருவரையும் இணைத்தது ஒரு விபத்து.

பிரிட்டிஷ் ராணுவத்துக்கும், பிரிட்டனிலிருந்து அயர்லாந்து பிரிய வேண்டும் என்று எண்ணிச் செயல்பட்ட ஐரிஷ் குடியரசுப் படைக்குமிடையே கடும் பகைமை நிரம்பிய நேரம். பிரிட்டிஷ் ராணுவ வீரர்கள் சாலையில் காரை ஓட்டிக் கொண்டு சென்ற ஐரிஷ் குடியரசுப் படை வீரன் ஒருவனைச் சுட்டு விட்டனர். ஓட்டுனர் இறந்து விட, அந்தக் கார் இலக்கின்றி ஓடியது. தன் மூன்று குழந்தைகளுடன் சென்று கொண்டிருந்தாள் ஒரு தாய். அவர்கள் மீது வேகமாக மோதியது அந்தக் கார். இரு குழந்தைகள் அங்கேயே இறந்து விட, தாயும், மூன்றாவது குழந்தையும் உயிருக்கு ஊசலாடிய நிலையில் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டனர்.

இந்தச் சோக நிகழ்ச்சி பெல்ஃபாஸ்ட் நகரையே உலுக்கியது. மைரீட் காரிகன் மறு நாள் அளித்த தொலைக்காட்சிப் பேட்டியில் (விபத்தில் படுகாயமடைந்து இரு குழந்தைகளைப் பறிகொடுத்தது அவரது சகோதரி தான்) தேம்பியபடியே ''மக்கள் விரும்புவது வன்முறையை அல்ல. இதை அனைத்து ராணுவத்தினரும் புரிந்து கொள்ள வேண்டும்'' என்று கூறினார்.

அதே விபத்தை நேரடியாகப் பார்த்தவர் பெட்டி வில்லியம்ஸ். பெட்டியும் மைரீட் காரிகனும் இணைந்தது அந்தச் சமயத்தில் தான். அதுவரை? இருவரும் அமைதி விரும்பிகள்தான் என்றாலும் ''பிரிட்டிஷ் ராணுவத்திடம் ஐரிஷ் ராணுவப்படை சரணாகதியடைந்து அதனால் அமைதி பிறக்கக் கூடாதா?'' என்று எண்ணியவர் பெட்டி. சிறு வயதிலிருந்தே பிரிட்டிஷ் ராணுவத்திடம் தீராத வெறுப்பு கொண்டிருந்தவராக விளங்கினார் மைரீட். ஆனால் அந்தக் கோரமான சாலை விபத்துக்குப் பிறகு யார் யாரிடம் பணிய வேண்டுமென்பதை விட முக்கியமான விஷயம் உடனடியாக அமைதி ஏற்பட வேண்டுமென்பதுதான் என்ற முடிவுக்கு இருவரும் வந்தனர்.

ஆனால் சூழ்நிலை அவர்களுக்குச் சாதகமாக இல்லை. பிரிட்டிஷ்காரர்களைத் துரத்தி விட்டு தெற்கு அயர்லாந்துக் குடியரசும், வட அயர்லாந்துடன் இணைய வேண்டுமென்ற வெறியில் நாட்டையே சுடுகாடாக்கிக் கொண்டிருந்தது ஐரிஷ் குடியரசுப் படை. பிரிட்டிஷ் ராணுவத்தினருக்கெதிராக மட்டுமில்லாமல் அப்பாவி கிறித்தவ மக்கள் மீதும் அணுகுண்டு வீசத் தயங்கவில்லை அவர்கள்.

மற்றொரு புறமோ பிரிட்டிஷ் அரசு மட்டுமில்லாமல் தீவிர ப்ராடஸ்டென்ட் அமைப்புகளும் சிறு சிறு இயக்கங்களாக உருவாகி பழிக்குப் பழி வாங்க முனைந்திருந்தன. மனிதாபிமானம் மடிந்து கொண்டிருந்தது. ''குண்டடி பட்டு இறக்கும் தருவாயிலிருந்த பிரிட்டிஷ் ராணுவ வீரரொருவருக்கு ஆறுதலித்தேன். இதைப் பார்த்த சில கத்தோலிக்கப் பெண்மணிகள் என்மீது கடும் சொற்களை வீசினர். மனித உயிரின்

UMS

ஸ்டெபிலைஸர்



# எடுத்துச் சென்றேன் TDP ஆதாயம் + 10 வருட உத்திரவாதம்”



(உண்மையான மனநிம்மதியை எடுத்துச் சென்றேன்)



நீங்கள் ஒரு ஸ்டெபிலைஸரை வாங்கும் முன் சிந்தியுங்கள் ஒரு கணம்... அதில், யு எம் எஸ்-ஸைப் போல TDP (டைம் டிலே புரோகிராம்) ஆதாயம் உள்ளதா என்று. ஏனெனில் உங்களுடைய ஃப்ரிட்ஜ், வாஷிங் மிஷின் போன்ற 500 VA வரை மின்சாரம் உபயோகிக்கப்படும் உபகரணங்களுக்கு அடிக்கடி ஏற்படும் பழுதிற்கும், நீண்டகால பராமரிப்பு இல்லாத ஓட்டத்திற்கும் இடையேயுள்ள வேறுபாட்டை யு எம் எஸ்-ஸின் டிடிபி ஆதாயம் உணர்த்துகிறது. ஒவ்வொரு மின் ஏற்றத்தாழ்வுக்கும் பின், சீரான மின்னோட்டம் உங்கள் உபகரணத்திற்குள் சென்றடையும் முன் சிறிது கால அவகாசம் தேவைப்படுகிறது. அங்கே உங்களுக்காக யு எம் எஸ்-ஸின் டிடிபி ஆதாயம் வேலை செய்கிறது. யு எம் எஸ் ஸ்டெபிலைஸரின் சிவப்பு இண்டிகேட்டர் ஒவ்வொரு சமயமும் உங்களுக்கு டிடிபி ஆதாயம் செயல்பட்டுக் கொண்டிருப்பதை அடையாளம் காட்டுகிறது. மேலும், யு எம் எஸ் ஸ்டெபிலைஸரின் சிறப்பு தொழில் நுட்ப வல்லமை பெற்ற யு எம் எஸ் நிறுவனத்தின் தயாரிப்பு என்பதிலேயே விளங்கும். யு எம் எஸ் ஸ்டெபிலைஸர் மட்டுமே பூச்சியோ புழுதியோ நுழைய முடியாதவாறு சீல் செய்யப்பட்ட டை காஸ்ட் மேல் பாகத்தைக் கொண்டது. இதன் உள்ளே அமைக்கப்பட்டிருக்கும் செதில் போன்ற அமைப்புகள் மூலம் வெப்பம் எளிதாக வெளியேறுகிறது.

**UMS ஸ்டெபிலைஸர் தன்னைக் காக்கும் உங்கள் உபகரணத்தையும் காத்திடும்.**

**யு எம் எஸ் ரேடியோ பேக்டரி பிரைவேட் லிமிடெட்** தபால் பெட்டி எண் : 3771, அவினாசி ரோடு, கோயமுத்தூர் - 641 018. போன் : 213377, 213378 கிளைகள் ● 165, கிரீம்ஸ் லேன், சென்னை - 600 006. போன் : 8273339, 8275871, 8278061 ● 25, கக்கன் வீதி, செனாய் நகர், மதுரை - 625 020. போன் : 44727

மதிப்பையே மக்கள் அறிந்து கொள்ளவில்லையே என்று வருத்தப்பட்டேன்'' என்று பின்னாளில் வருத்தப்பட்டார் பெட்டி.

இந்த இரண்டு பெண்மணிகளையும் இணைத்த பெருமை சியரன் மெக்கியோன் என்ற செய்தித்தாள் நிருபரைத்தான் சேரும். ''நீங்கள் இருவருமே அமைதி விரும்பிகள். சக்திவாய்ந்தவர்கள். ஒரு அமைப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். அது பெண்களுக்கான அமைப்பாக மட்டும் இருக்க வேண்டாம். பொதுவானதாக இருக்கட்டும்'' என்றார் அவர். அப்படி உதயமானதுதான் ''அமைதியை உதவும் மக்கள் இயக்கம்''. இந்த இயக்கம் இந்த இருவரின் தலைமையிலும் வடக்கு அயர்லாந்து, பிரிட்டன் ஆகிய இரு இடங்களில் பலவித ஊர்வலங்கள் நடத்தியது - அபாயகரமான சூழலிலும். ஐரிஷ் குடியரசுப் படை இந்த இயக்கத்தை பிரிட்டிஷாரின் கைக்கூலி என்று வர்ணித்தது. 'எந்தவிலை' கொடுத்தும் அமைதியை நிலவ விடுவது என்பது அபத்தம் என்றன சில பத்திரிகைகள். ஆனால் இந்த இயக்கம் சர்வதேச நாடுகளில் கவனத்தைப் பெற்றது.

1976-ல் இருவரும் அமெரிக்கா சென்றனர். எதற்குத் தெரியுமா? ஐரிஷ் படையினர் துப்பாக்கிகளும், அணுகுண்டுகளும் வாங்கப் பணத்தை அனுப்ப வேண்டாம். இது தீவிரவாதத்தை வளர்க்கும்'' என்று அமெரிக்காவிலுள்ள ஐரிஷ்காரர்களைக் கேட்டுக் கொள்ளத்தான்.

இந்த இரு படைகளின் மோதலைத் தவிர்க்க முயற்சி எடுத்துக் கொண்டது மட்டுமல்ல, சிதைந்த தொழிற்சாலை மற்றும் பள்ளிக்கூடங்களைப் புதுப்பிக்கவும், சிறு தொழில் துவங்கக் கடனளிக்கும் நிறுவனங்கள் உருவாகவும் உதவி செய்தனர் இந்த இருவரும். ஏனென்றால் வறுமையும், வேலையில்லாத் திண்டாட்டமுமே வன்முறையின் முக்கிய காரணங்கள் என்பதை அவர்கள் அறிந்திருந்ததுதான்.

1978ல் மற்றவர்களுக்கும் வாய்ப்பளிக்கும் விதத்தில் இவர்கள் இருவரும் தாங்கள் துவக்கிய அமைதி இயக்கத்தின் தலைமைப் பதவியிலிருந்து விலகினர். அதற்குப் பிறகு அந்த இயக்கம் சிறுகச் சிறுகத் தேய்ந்துவிட்டது. தலைமைப் பதவியிலிருந்து விலகி, நோபல் பரிசையும் பெற்றுக் கொண்டபின் அவர்கள் முன்பு போல அமைதி இயக்கத்தில் ஈடுபாடு காட்டவில்லை என்று விமர்சிக்கப்பட்டனர். அதனாலென்ன? அவர்கள் ஏற்கெனவே எடுத்துக் கொண்ட முயற்சிகளையும், புரிந்த சாதனைகளையும் குறைத்து மதிப்பிட்டு விட முடியுமா என்ன?

## அன்னை தெரசா :

**நோபல் பரிசு பெற்ற வருடம் - 1979**

அன்னை தெரசாவின் நோபல் பரிசுப் பேச்சைக் கேட்க வந்திருந்த பெண்ணுரிமை இயக்கத்தினர் மிகவும் உற்சாகமாகக் காணப்பட்டனர். நெடுநாட்களுக்குப் பிறகு ஒரு 'பெண்மணிக்கு' அந்தப் பரிசு கிடைத்ததில் அவர்களுக்கு உற்சாகம். ஆனால் அவர்களது உற்சாகம் நீடிக்கவில்லை.

''இன்றைக்கு அமைதியை அழிப்பதில் முதலிடம் வகிப்பது எது தெரியுமா? கருச்சிதைவுதான். ஆம். அது ஒரு நேரடிப் போர். அன்னையே செய்யும் கொலை'' என்று நோபல் பரிசு விழாவில் அன்னை தெரசா கூறியதும் பெண்ணுரிமை இயக்கவாதிகள் முகம் சுளித்தனர். அவர்கள் அன்னையைப் பற்றிப் புரிந்து கொள்ளாதவர்களாக இருந்திருக்க வாய்ப்பு உண்டு. தெரசா வாய்ச்சொல் வீரரல்ல. ''ஒவ்வொரு குழந்தையுமே கடவுளின் பரிசு. எந்தக் குழந்தையுமே வேண்டாத குழந்தையல்ல. உங்களுக்கு எந்தக் குழந்தையாவது தேவையில்லையென்றால் அதை என்னிடம் கொடுத்து விடுங்கள்'' என்றும் அங்கேயே அறிவித்தார்.

நோபல் பரிசு பெற்ற இந்தியர் என்றுதான் அன்னை தெரசா குறிப்பிடப்படுகிறார் என்றாலும் அவர் பிறந்தது யூகோஸ்லேவியாவில். துருக்கியர்களின் ஆளுகைக்கு உட்பட்டிருந்த தங்கள் நாடான அல்பேனியா சுதந்திரம் பெற வேண்டுமென்று முயற்சி எடுத்துக் கொண்டவர்களில் தெரசாவின் தந்தையும் ஒருவர். தெரசாவுக்கு ஒன்பது



உடலின் எடையைக் குறைக்க விரும்புகிறவர்கள் கொழுப்புப் பொருட்கள், மாவுப் பண்டங்கள், பட்டாணி, சர்க்கரை, உப்பு, இறைச்சி, ரொட்டி போன்றவற்றைச் சாப்பிடாமல் ஒதுக்கிவிட வேண்டும். இதனால் உடலின் எடை குறையும். இடுப்பின் அளவு குறைய ஆயுட்காலம் நீடிக்கும்.

- எஸ். விஜயா சீனிவாசன்

ஓர் ஆழாக்கு கடலைப் பருப்புடன் 2 டீஸ்பூன் உ. பருப்பும், 2 டீஸ்பூன் பச்சரிசி, அரை ஸ்பூன் ஓமமும் போட்டு மிஷினில் அரைத்து, உப்பு, காரப் பொடி போட்டுக் கலந்து கரைத்து பஜ்ஜி செய்தால் ருசி, சூப்பரோ சூப்பர்.

- ஆர். பார்வதி



வயதாகும் போது அவர் அப்பா இறந்து விட்டார். தெரசா, அவரது சகோதரி, அவர்களது தாய் ஆகிய மூவருமே மதத்தின்புறம் தங்கள் முழுக் கவனத்தைச் செலுத்தத் தொடங்கினர். ஏழைகளுக்கு உதவுவதிலும் சமூக சேவை செய்வதிலும் தெரசாவுக்கு சிறு வயதிலிருந்தே நாட்டமிருந்தது. 18வது வயதில் ''லொரெட்டோ சகோதரிகள்'' என்ற மதபோதகப் பள்ளியில் சேர முடிவு செய்தார் தெரசா. அதாவது தன் வாழ்நாள் முழுவதும் கிறித்தவத் தொண்டுக்கே அர்ப்பணிக்கும் பணி அது.

அல்பேனிய ராணுவத்தில் உயர் பதவி வகித்த தெரசாவின் ஒரே சகோதரனுக்கு இந்த முடிவில் ரொம்ப வருத்தம். அழகும், திறமையும் கொண்ட தன் சகோதரியின் வாழ்நாள் இப்படி 'வீணாவதா?' என்று. தெரசா அண்ணனுக்கு எழுதிய பளிச் பதில் இதுதான். ''இருபது லட்சம் பிரஜைகளை ஆளும் அரசனிடம் வேலை செய்வதை நீ முக்கியமாகக் கருதுகிறாய். இந்த உலகத்துக்கே அரசனான கடவுளிடம் தீவிர சேவகி ஆக நான் ஆசைப்படுகிறேன். நம்மில் யார் செய்வது சரியானது சொல்லேன்.''

அம்மாவையும், சகோதரியையும் நிரந்தரமாகவே பிரிவது கஷ்டமான காரியமாக இருந்தாலும், கடவுள் தன்னைப் படைத்தது சமூக சேவைக்கே என்று உறுதியாக நம்பிய தெரசா அவர்களை விட்டுப் பிரிந்தார். தான் சார்ந்த அமைப்பின் கட்டளைக்கிணங்க கல்கத்தாவிலிருந்து 300 மைல் தொலைவிலுள்ள டார்ஜிலிங்கிலுள்ள மிஷனில் பணி புரிந்தார். 1937ல் முழுமையான துறவறத்தை மேற்கொண்டார். தெரசா என்றும் தன் பெயரை மாற்றிக் கொண்டார் (அதுவரை அவரது பெயர் அக்னஸ்).

பிறகு கல்கத்தாவிலுள்ள புனிதமேரி உயர்நிலைப் பள்ளியில் பூகோள, சரித்திர ஆசிரியையாகவும், பிறகு அதே பள்ளியின் முதல்வராகவும் பணிபுரிந்தார். சிறந்த ஆசிரியை என்று பெயரெடுத்திருந்தாலும், தெரசாவின் மனத்தில் நிம்மதி இல்லை. பணக்காரர்களின் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்த போதே அவர் மனம் வெளியே உள்ள சேரிகளில் ஏழ்மையும், நோயும் தாண்டவமாடுவதை எண்ணி வருந்தியது. கான்வென்ட்டின் சட்டதிட்டங்கள் அவர் பணியை ஒரு எல்லைக்குள் (மதம்) கட்டிப் போட்டிருந்தது. ஏழைகளோடு கலந்து பழகி அவர்களுக்கு உதவுவதற்காக அந்த அமைப்பிலிருந்து விடுதலை கோரினார் தெரசா. மிகுந்த தயக்கத்தோடு இரு வருடங்களுக்குப் பிறகு வாடிகன் இதற்கு அனுமதியளித்தது.

அனுமதி கிடைத்ததும் உடனே செவிலியருக்கான மூன்று மாதப் பயிற்சி ஒன்றை மேற்கொண்டார். உடனடியாக வீடில்லாத குழந்தைகளுக்கு ஒரு திறந்தவெளிப் பள்ளிக்கூடத்தை ஏற்படுத்தினார். விரைவில் அவரது முன்னாள் மாணவிகளிடமிருந்து நிதி கிடைத்தது. புடவையுடன், வங்காள மொழியைப் பேசியபடி தங்களுக்கு அன்புடன் உணவளித்து, நோய் தீர்க்க முன்வந்திருக்கும் இந்த வெளிநாட்டுப் பெண்மணியை குடிசைவாசிகள் ஆச்சரியத்துடனும், அன்புடனும் பார்த்தார்கள். விரைவில் அவருக்குப் பல உதவிக்கரங்கள் நீண்டன. தெரசாவும் அவரது உதவியாளர்களும் 'தர்மத்தின் தூதுவர்கள்' என்றே அழைக்கப்பட்டார்கள். அனாதைக் குழந்தைகளுக்கு இருப்பிடம், பள்ளி, நடமாடும் மருந்தகம், தொழுநோய் தீர்க்கும் மையம், முதியோர் விடுதி என்று இந்தக் குழுவின் பணி பெருகிக் கொண்டே போனது. இந்தச் சிறு அமைப்பு பெருகி 1986ல் இதில் 1600 செவிலியர்கள் பணிபுரியுமளவுக்கு வளர்ந்தது. வாடிகன், ஹார்வர்ட் பல்கலைக் கழகம் ஆகியவை உட்பட பல அமைப்புக்கள் இவரை கௌரவித்தன. ''வாழும் துறவி'' என்ற தலைப்போடு தன் அட்டைப் படத்தில் இவர் புகைப்படத்தைப் பிரசுரித்து 1975ல் தன்னை கௌரவித்துக் கொண்டது பிரபல டைம் பத்திரிகை.

மிகவும் எளிமையான வாழ்க்கையை வாழ்பவர் என்றாலும் சில விஷயங்களில்

மிகக் கண்டிப்பானவர் தெரசா. நோபல் பரிசு விழா முடிந்ததும் அன்று மாலை ஒரு பெரும் விருந்தும், நடன நிகழ்ச்சியும் ஏற்பாடு செய்யப்படுவது வழக்கம். தான் பரிசு பெறும் சமயத்தில் இந்தப் பழக்கத்தை நீக்கி விட்டு அதனால் மிச்சமாகும் பணத்தைக் கல்கத்தாவில் வசிக்கும் ஏழை மக்களுக்கு அளிக்க வேண்டுமென்ற வேண்டுகோளை முன்வைத்தார் தெரசா. முதலில் தயங்கிய நோபல் குழு, தெரசாவின் பிடிவாதத்தைக் கண்டு வளைந்து கொடுத்தது. உண்மையான அன்புக்கும், அன்பின் வடிவமான அன்னை தெரசாவுக்கும் முன் யார் தான் வளைய மாட்டார்கள்?

## ஆல்வா ரேய்மர் மிர்டல் :

**நோபல் பரிசு கிடைத்த வருடம் – 1982**

ஸ்வீடனைச் சேர்ந்தவர். பின்னாளில் அமைதிக்கான நோபல் பரிசைப் பெற்றாலும் பதினான்கு வயதிலேயே 'போராடியவர்'. அவர் இருந்த கிராமப் பகுதியில் பெண்களுக்கு உயர்கல்வி கிடையாது. அடிப்படைக் கல்வியைப் படித்து விட்டுக் குடும்ப வாழ்க்கைக்குத் தயாராவதுதான் அங்கு பெண்களின் நிலை. தந்தையை நச்சரித்து உள்ளூர் பள்ளி அதிகாரிகளிடம் பெண்களும் உயர்கல்வி படிக்க வழிவகுக்கச் சொன்னார் ஆல்வா. ஒருவழியாக நிர்வாகம் ஒத்துக் கொண்டது.

ஆல்வா மகா துணிச்சல்காரர். மூன்று பல்கலைக் கழக மாணவர்கள் சைக்கிளிலே ஒரு நீண்ட பயணத்திற்குப் புறப்பட்டனர். ஒரு இரவு தங்குவதற்காக ஆல்வாவின் தந்தையின் அனுமதியைக் கோரினர். மறு நாள் நான்கு பேரும் சைக்கிள் டூரைத் தொடங்கினர் - ஆம். ஆல்வாவும் அதில் கலந்து கொள்ளத் தீர்மானித்து விட்டார். இந்த டூர் அவரது வாழ்வில் ஒரு மைல் கல். அதில் கலந்து கொண்ட சட்ட மாணவர் குன்னார் மிர்டலுக்கும் இவருக்குமிடையே காதலரும்பி பிறகு திருமணத்தில் முடிந்தது. அதற்குள் தன் பட்டப்படிப்பை முடித்திருந்தார் ஆல்வா (குன்னாரும் பொருளாதாரத்தில் நோபல் பரிசு பெற்றார். வெவ்வேறு துறைகளில் கணவர், மனைவி இருவருமே பரிசு பெறுவதென்பது இவர்கள் விஷயத்தில் மட்டுமே நடந்திருக்கிறது).

''மக்கள் தொகைப் பிரச்னையால் ஏற்படும் நெருக்கடி'' என்ற தலைப்பில் இத்தம்பதியினர் வெளியிட்ட நூல் பரவலான புகழைப் பெற்றுத் தந்தது. 1936ல் நர்சரி மற்றும் கிண்டர்கார்டன் ஆசிரியர்களுக்கான பயிற்சிப் பள்ளியைத் தொடங்கி வெற்றிகரமாக நடத்திய ஆல்வா பெண்களுக்கு சம உரிமை வேண்டும் என்று போராடியவரும் கூட.

இரண்டாம் உலகப் போரின் போது ஸ்வீடன் நடுநிலை நாடாக விளங்கியது. தன் நாட்டிலும், ஐரோப்பாவின் வேறு சில பகுதிகளிலும் குவியும் அகதிகளின் நிலையைப் பற்றி அதிக கவனம் செலுத்தத் தொடங்கினார். 1949ல் ஐக்கிய நாடுகளின் சமூகச் செயல்பாடுகள் பிரிவின் இயக்குனராக நியமிக்கப்பட்டார். ஐக்கிய நாட்டின் செயலகத்தில் இப்படி ஒரு மிக உயர்ந்த பதவியைப் பெற்ற பெண்மணி என்ற பெருமை வந்தடைந்தது. ஆல்வாவின் சாதுர்யமாகப் பழகும் விதம் மற்றும் சர்வதேச அரசியலறிவு ஆகியவற்றை உணர்ந்த ஸ்வீடன் அரசு இவரை 1955ல் நமது இந்தியத் தூதராக நியமித்தது. இந்தியப் பிரதமர் நேருவின் தனிமதிப்பைப் பெற்றார் ஆல்வா. இந்தப் பதவிக் காலம் முடிந்ததும் ஐக்கிய நாடுகள் பொதுக் குழு ஆல்வாவை ஆயுதக் குறைப்புப் பிரிவின் சிறப்பு உதவியாளராக நியமித்தது. பல நாடுகளின் ஆயுதக் குறைப்புக்கு ஆல்வாவின் பெருமுயற்சிகளும் காரணமாக அமைந்தது.

1962ல் ஸ்வீடன் நாட்டின் அமைச்சரானார் ஆல்வா. இவருடைய இலாக்காக்கள் - ஆயுதக் குறைப்பும், மாதா கோவில் செயல்பாடுகளும். பன்னிரெண்டு ஆண்டுகள் அமைச்சரவையில் பணிபுரிந்து ''ஸ்வீடிஷ் அரசியலின் அற்புத மூதாட்டி'' என்று பெயர் பெற்றார். 1968ல் ஸ்வீடன் தன் அனைத்து அணு ஆயுதக் கருவிகளையும் ஒழிக்க எடுத்த



வீட்டில் அலங்காரங்கள் செய்யும்போது பிளாஸ்டிக் பூச்சரத்தால் (அல்லது) காகிதப் பூச்சரத்தால் செய்வோம். அவற்றை ஆணி தேடி அல்லது பெரிய ஜாலியிலோ கட்டிக் கஷ்டப்பட்டு மாட்ட வேண்டாம். உங்கள் விருப்பம் போல் அவற்றில் செலோடேப் ஒட்டி அலங்கரிக்கலாம். தேவையில்லாமல் ஆணி அடித்து அவற்றை வீணாக்காதீர்கள்.

– கி. மஞ்சுளா

வேலைக்குச் செல்லும் சகோதரிகளே, உங்களுக்கு ஒரு நற்செய்தி! தினம் கேஸ் அடுப்பில் சாதம் வடிக்கும் வரை, அதாவது அது வேகும் வரை இனி தாமதிக்க வேண்டாம். உலையில் அரிசி போட்டவுடன் நன்கு ஒரு கொதிவரும் வரை ஸ்டவ்வில் வைக்கவும். பின் கொதி வந்ததும் இறக்கிக் கீழே வைத்துவிட்டு சாம்பார், பொரியல், ரசம் செய்துவிட்டு, பின் சாதப் பாத்திரத்தை அடுப்பில் ஏற்றி வைத்து மீண்டும் கொதி வந்தவுடன் வடிக்கவும். சாதம் புழுங்கல் அரிசி (அ) பச்சரிசி எதுவானாலும் மல்லிகைப் பூ போல இருக்கும்.

- பி. வி. சாந்தி

முடிவில் ஆல்வாவுக்குப் பெரும் பங்கு உண்டு. ''ஐக்கிய அமெரிக்க நாடுகளும், ரஷ்யாவும் எப்படித் தங்கள் அணு ஆயுதப் போட்டியை நடத்துகின்றனர்?'' என்ற நூலில் வல்லரசுகளின் தவறான போக்கைத் தயங்காமல் சாடினார் ஆல்வா.

நோபல் பரிசை வாங்க அவர் வந்த போது அவர் தயாரித்த உரையை அவரது இரு பெண்களில் ஒருவர்தான் படிக்க வேண்டியிருக்குமென்று எதிர்பார்த்தனர். ஆனால் நலிந்த உடல்நிலையிலும் தானே அந்த உரையைப் பேசினார் அந்த 81 வயது மூதாட்டி.

## டா அங் சான் சூ குயி :

### நோபல் பரிசு பெற்ற வருடம் - 1991

நோபல் பரிசு அறிவிக்கப்பட்ட போது மியன்மார் (பர்மா) நாட்டில் தன் வீட்டுச் சிறையில் இருந்தார் சூகுயி. 1989லிருந்தே எதிர்க்கட்சித் தலைவரான இவரை அவர் வீட்டிலேயே சிறை வைத்திருந்தது பர்மா வின் ராணுவ அரசு. 1990லிருந்து அவர் தன் பிரிட்டிஷ் கணவரையும் இரு மகன்களை யும் சந்திப்பதிலிருந்து தடுக்கப்பட்டார். ''நோபல் பரிசுக்குத் தான் தேர்ந்தெடுக்கப் பட்ட விஷயம் என் மனைவிக்குத் தெரியுமா என்று கேட்கிறீர்கள். அவள் உயிரோடு இருக்கிறாளா என்பதே எனக்குத் தெரியாத போது இந்தக் கேள்விக்கு என்ன பதி லளிப்பது?'' என்று பேட்டியளித்தார் ஹார் வர்ட் பல்கலைக் கழகத்தில் பேராசிரிய ராகப் பணிபுரியும் மைக்கேல் ஹாரிஸ். அவரது சந்தேகத்திற்கு அடிப்படை உண்டு. தன்னை சிறைப்படுத்தியதை எதிர்த்து உண்ணாவிரதம் இருந்த சூகுயியின் உடல் நிலை மோசமடைந்ததாகச் செய்திகள் வந்து கொண்டிருந்தன.

''சுதந்திரப் போராட்டத்தை அமைதி யான முறையில் மிகச் சிறப்பாக நடத்துபவர் களில் ஒருவரான சூகுயிக்கு இந்தப் பரிசை அளிப்பதின் மூலம் எங்கள் ஆதரவைத் தெரிவிக்கிறோம்'' என்றது நோபல் குழு.

1945ல் ரங்கூனில் பிறந்த சூகுயி பிரிட் டிஷ் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு பர்மா தனிநாடாக அடித்தளமைத்த யூ அங்சான் என்பவரின் பெண்ணாவார். சூகுயிக்கு இரண்டு வயதாகும்போதே அவர் தந்தை படுகொலை செய்யப்பட்டார். சிறந்த ராஜ தந்திரியாகக் கருதப்பட்ட சூகுயியின் அன்னை 1960ல் இந்தியத் தூதராக நியமிக் கப்பட்டார். இந்தியாவிலும் சில ஆண்டுகள் கல்வி பயின்ற சூகுயி பி ஆக்ஸ்போர்ட் பல்கலைக் கழகத்தில் அரசியல், தத்துவம், பொருளாதாரம் ஆகியவற்றைப் பயின்றார். பின்னர் நன்நோய்வாய்ப்பட்ட அம்மா வுக்கு சேவை செய்ய பர்மாவுக்குத் திரும்பி னார். அந்த ஆண்டே அவரது அம்மா இறந்து விட்டார்.

நாட்டின் தலைமையை ஏற்றிருந்த ராணுவம் கொடுங்கோலாட்சி புரிந்தது. சூகுயியின் தலைமையில் புரட்சி வெடித் தது. முப்பது ஆண்டுகள் பர்மாவைத் தன் கட்டுக்குள் வைத்திருந்த நெவின் என்ற ராணுவத் தளபதி ராஜினாமா செய்ய வைக்கப்பட்டார். தொடர்ந்த தேர்தலில் 82 சதவீதப் பாராளுமன்ற உறுப்பினர்கள் சூகுயியின் குடியரசைச் சேர்ந்தவர்களாக அமைந்தனர். ஆனால் மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட அரசை இயங்க விட வில்லை ராணுவம். தேர்தல் முடிவுகள் செல் லாது என்று அறிவித்து சூகுயியை சிறைப் படுத்தியது ராணுவம்.

நோபல் பரிசை வாங்கக் கூட அவர் அனுமதிக்கப்படவில்லை. தன் கணவருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் ''இவ்வளவு கஷ்டங் களை நான் அனுபவித்தாலும் ஏதோ உருப் படியான காரியத்தில்தான் ஈடுபட்டிருக்கி றேன் என்ற திருப்தி எனக்கு இருக்கிறது. பர்மிய மக்களை இப்போதுள்ள திறமை யற்ற, ஊழல்மிகுந்த அநியாய ஆட்சியி



அடிக்கடி மருந்து உபயோகிப்பவர்கள், சமயத்தில் ஒரே மாதிரி இருக்கும் மாத்திரைகளைக் கண்டதும் குழப்பம் வரும். இதைத் தவிர்க்க, மாத்திரை வாங்கிய கையோடு ஒரு சிறிய துண்டு பேப்பரில் 'எதற்கு அந்த மாத்திரை, எத்தனை வேளைக்கு?' என்பதை எழுதி, மாத்திரை அட்டையில் ஸ்டாப்லர் பின் போட்டு விடுங்கள். உங்களுக்கு மட்டுமின்றி மருந்துகள் உபயோகிக்கும் மற்றவர்க்கும் குழப்பம் இராது.

- கி. மஞ்சுளா

விருந்து விடுவிப்பதே என் லட்சியம்'' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

## ரிகோ பெர்டர் மென்சு :

**நோபல் பரிசு பெற்ற வருடம் - 1992**

இவருக்கு நோபல் பரிசு கிடைத்தது பலருடைய விமர்சனங்களுக்கு ஆளாகியது. நோபல் பரிசுக் குழுவே கூட ''இவரது ஒவ்வொரு செயலும் அமைதியை மேம்படுத்தும் முயற்சி என்று நாங்கள் எண்ணவில்லை. ஆனாலும் ஒட்டுமொத்தமாகப் பார்க்கும் போது இவர் அமைதியான வழியில்தான் தன் போராட்டத்தைத் தொடர்ந்து கொண்டிருக்கிறார்'' என்றது. என்ன போராட்டம்? அமெரிக்காவிலுள்ள சில வெளிநாட்டினர் (முக்கியமாக இந்தியர்கள்) இரண்டாம்தரக் குடிமக்கள் போல் நடத்தப்படுவதற்கெதிரான போராட்டம்தான். அமெரிக்கர்களாகக் குடியேற்றம் பெற்றாலும் இந்தியர்கள் பலருக்கெதிராக இழைக்கப்படும் அநீதிகளுக்கெதிராகக் குரல் கொடுப்பதில் முன்வரிசையில் உள்ளவர் மென்சு.

மென்சு உயர்பள்ளிப் படிப்பைக் கூடப் படிக்காதவர். ஆனால் மிகுந்த பேச்சுத் திறமை கொண்டவராக விளங்குகிறார். ''தனது நாடான அமெரிக்காவிலும் சரி, உலக அரங்கிலும் சரி, இன்று ஜாதி, கலாசாரம், போன்ற எல்லைகளைக் கடந்து நிற்கிறார்'' என்று அவரைப் பாராட்டியது நோபல் பரிசுக் குழு.

மெக்ஸிகோவுக்குத் தெற்கே உள்ளது கெளடமலா. இதிலுள்ள மயன் என்ற வகுப்பைச் சேர்ந்த மென்சு தன் பெற்றோரும் சகோதரரும் அங்குள்ள ஆட்சியினரால் படுகொலை செய்யப்பட்டதும் 1981ல் மெக்ஸிகோவுக்குப் பறந்தார். இவரது இரு சகோதரிகள் கொரில்லாப் படையில் சேர்ந்து அரசுக்கெதிராகப் போராடுகின்றனர். மெக்ஸிகோவுக்குச் சென்ற பிறகு மிகச் சில முறைகளே தன் தாய்நாட்டு மண்ணை அவர் மிதித்தார்.

1983ல் அவர் எழுதி வெளியான அவரது சுயசரிதை அவருக்குப் பெரும்புகழை சர்வதேச அளவில் தேடித் தந்தது. பதினோரு மொழிகளில் வெளியான இந்த நூலில் ஒரு உழவனின் மகளாகப் பிறந்த தனது இளவயதுத் துன்பங்களை விவரித்திருக்கிறார். தான் ஒரு செல்வந்தரின் வீட்டில் வேலைக்காரியாக இருந்ததையும் அவர் மறைக்கவில்லை. தன் குடும்ப உறுப்பினர்கள் துன்புறுத்தப்பட்டதையும், அவர்கள் கொலை செய்யப்பட்டதையும் அவர் நுணுக்கமாக விவரித்திருந்தது உலகெங்கும் பரபரப்பை ஏற்படுத்தியது.

மெக்ஸிகோவில் ரோமன் கத்தோலிக்க அமைப்பு அவருக்கு அடைக்கலம் அளித்தது. ''உழவர் ஒற்றுமைக் குழு'' என்ற பெயரில் மனித உரிமைகளுக்காக அங்கு போராடத் துவங்கினார் மென்சு. இதே பெயரில் கெளடமலாவில் இவரது தந்தை ஒரு இயக்கத்தை நடத்தியதுண்டு.

அமெரிக்கா மற்றும் ஐரோப்பாவைச் சேர்ந்த பல நாடுகளிலிருந்து அவருக்குப் பேச அழைப்பு வந்தது. இதனால் மென்சு ஒன்றும் மகிழவில்லை. ''கவுடமலாவில் 4000 பேர் 'மறைந்து' விட்டனர்'' என்றால் ''என்ன அநியாயம்'' என்று கேட்பவர்கள் அதிர்ச்சியடைகிறார்கள். அவ்வளவுதான். அதற்கு மேல் நடைமுறையில் அவர்கள் எதுவும் செய்யத் தயாராக இல்லை'' என்றார்.

விரைவில் சிறுபான்மை மக்களின் உரிமையை வலியுறுத்த அவர்களது ஆண்டாக 1993ஐ அறிவிக்க வைத்தார். தனக்குக் கிடைத்த நோபல் பரிசுத் தொகையை அமெரிக்காவிலுள்ள இந்தியர்களின் உரிமைகள் கிடைக்கத் தான் மேற்கொள்ளப் போகும் போராட்டத்திற்குப் பயன்படுத்தப் போகிறாராம்.

நோபல் அமைதிப் பரிசை பெற்ற ஒன்பதாவது பெண்மணியான மென்சு மிக இளைய வயதிலேயே (33) இப் பரிசைப் பெற்றவர் என்ற பெருமைக்கும் உரியவர்.

- அருண் சரண்யா

இணைப்பு அட்டை வண்ணப்படம் :
ஓவியர் வேதா

# பிள்ளைப் பருவத்திலே...

## சென்ற இதழில்...

**ரா**முவும் அவர் மனைவி ஜெயாவும் புடவை வாங்கக் கடைக்குப் போகிறார்கள். அங்கே ராமுவின் பால்ய சிநேகிதி காயத்ரியைச் சந்திக்கின்றனர். காயத்ரி செல்வத்தின் உச்சியில் இருப்பவள். கணவர் பெரிய பதவியில் இருப்பவர். ராமுவையும், ஜெயாவையும் ஒரு நாள் சாப்பிட அழைக்கிறாள். அதை யேற்று ஒருநாள் இருவரும் காயத்ரி வீட்டிற்குப் போகிறார்கள். ஜெயாவிடம் காயத்ரி சின்ன வயதில்தான் ராமுவைப் பார்த்து மோகமாகிப் போனதைத் தன்னை மறந்து பேசுகிறாள். ராமு திகைக்கிறார்...

**எ**ன் மனைவியின் முகத்தை நோக்கக் கூசினேன்.

''பாரேன், ஜெயா! ஒருநாள் சாயந்திரம் இவன் வீட்டுக்குப் போயிருந்தேன். ஒரு நாள் என்ன, தினமும் சாயந்திரம் ஆச்சன்னா, இவன் வீட்டுலே இவன் கூடத்தான் இருப்பேன். அன்னிக்கு இவனோட அம்மா சமையல் அறையிலே உட்கார்ந்து அடை வார்த்திட்டு இருந்தார். அது எப்படி அடை வார்த்திட்டு இருந்தார்னு அத்தனை ஞாபகம் வச்சிட்டுச் சொல்றேன்னு கேட்கறியா? ஞாபகம் நல்லா வச்சிட்டுத்தான் சொல்றேன். கேளு'' திரும்பி என்னைப் பார்த்தாள். ''ராம், அப்பா, அம்மாவை விசாரிக்க மறந்துட்டேனே?'' என்றாள்.

''அப்பா இல்லை, காலமாயிட்டார். அம்மா, லக்ஷ்மி கூட பம்பாயில் இருக்கார்.'' என் குரலில் கருதி இறங்கி பிசிறு தட்டுவது எனக்குத் தெரிகிறது.

''அம்மா வந்தால் சொல்லி அனுப்பு. வந்து பார்க்கறேன். நமஸ்காரம் பண்ணி, ஆசீர்வாதம் வாங்கிக்கணும். அப்புறம் கேளு, ஜெயா! இவன் அம்மா என்னைப் பார்த்து, 'ஒரு அடை சாப்பிடேண்டீ, காயத்திரி!'ன்னார். சரி, மாமினு சொல்லிட்டு உட்கார்ந்தேன். அப்ப இவன் தங்கை லக்ஷ்மி என்கிட்ட, 'எங்க அண்ணாவுக்கு அடைன்னா ரொம்பப் பிடிக்கும்'னாள். 'எனக்கும்தான்'னு நான் சொன்னேன். 'அப்புறம் என்ன பிடிக்கும்?'னு லக்ஷ்மி கேட்டாள். நான் திரும்பி ராமிடம், 'உனக்கு என்னென்ன பிடிக்கும்?'னு கேட்டேன். இவன், 'கதை கேட்கப் பிடிக்கும், கதை படிக்கப் பிடிக்கும், கதை சொல்லப் பிடிக்கும்'னான். 'எனக்கும் அதெல்லாம் பிடிக்கும்'னு நான் சொன்னேன். அப்புறம்னு கேட்டாள் லக்ஷ்மி. 'அப்புறம் ராமையும் பிடிக்கும்'னேன். லக்ஷ்மியும் அவள் அம்மாவும் கிரியோ கிரின்னு சிரிச்சாங்க. எதுக்கு சிரிக்கறாங்கன்னு எனக்குப் புரியல்லே. ராம் பாட்டுக்கு அடை தின்னுட்டு இருந்தான். இல்லையா, ராம்? உனக்கு ஞாபகம் இருக்கோ?''

தலையை அசைத்து வைத்தேன்.

கையிலிருந்த பத்திரிகையை டீப்பாய் மீது வைத்து விட்டு, கெஞ்சலாகப் போதுமே என்பது போல காயத்திரியைப் பார்த்தேன். அவள் ஜெயாவை அணைத்தபடி சாய்ந்து உட்கார்ந்திருந்தாள். பழைய சின்னப் பெண்ணாகவே மாறி இருந்தாள். அந்தஸ்து, ஆடம்பரம், பெரிய இடத்துத் தோரணை ஆகியவை எல்லாம் சென்ற இடம் தெரியவில்லை. பழைய காயத்திரியாகவே ஆகி விட்டிருந்தாள்.

**தொ**டர்ந்து சொல்லத் தொடங்கினாள். ''அப்ப இவனோட அம்மா கேட்டார், 'ஏண்டி காயத்திரி, எங்க ராம்மைக் கல்யாணம் பண்ணிக்கிறியா?'னு. நான், 'சரி, மாமி'னு உரக்கவே வாயில் அடை வின்னலோடு சொன்னேன்.'' காயத்திரி நகைத்

குறுநாவல்



தாள். சற்று நாணம் கலந்து இருந்தது நகைப்பில்.

காயத்திரியின் அணைப்பை இதமாக அனுபவித்தபடி ஜெயா என்னைப் பார்த்துச் சிரித்தாள். அச் சிரிப்பில் கபடு இல்லை. காயத்திரியோடு சேர்ந்து இவளும் சிறுமி ஆகி விட்டாளோ என்று தோன்றியது எனக்கு.

''இதெல்லாம் இப்ப இவளைப் பார்த்ததும் ஞாபகத்துக்கு வருது. இப்படிப் பழைய சந்தோஷ நிகழ்ச்சிகளை நினைக்கப் பார்த்து திரும்பவும் ஆனந்தப்படறது தான் வாழ்க்கைன்னு கூட தோணுது.''

ஜெயா கேட்டாள் : ''ஏன்? உங்க சந்தோஷத்துக்கு என்ன குறைச்சல்? அரண்மனை மாதிரி பங்களா. வீட்டுக்காரருக்குப் பெரிய உத்தியோகம். கைகொள்ளாத வருமானம். தங்கமான ரெண்டு குழந்தைகள்; ஆஸ்திக்கு ஒண்ணு, ஆசைக்கு ஒண்ணு. கூப்பிட்ட குரலுக்கு வந்து எதிரே நிற்க ஆள், அம்பு, எடுபிடி. சந்தோஷமாகத்தானே இருக்கணும்?''

''உம்? அதெல்லாம் சந்தோஷம்னா சொல்றே? இல்லே, ஜெயா! தேவையானது இருக்கறதுலே சந்தோஷம் கிடையாது. நிம்மதி இருக்கும். நிம்மதி, அமைதி இதெல்லாமே சந்தோஷம் இல்லே. சந்தோஷங்

- [illegible]. ராமசாமி

றது எட்டிப் பிடிக்கிறதுலே இருக்கு. முயற்சிலே இருக்கு. முயற்சி செய்து அடைஞ்சிட்டோம்னா, சந்தோஷம் போயிடறது. நம்மை தேடிட்டு சந்தோஷம் வரக் கூடாது. நாம் அதைத் தேடணும். என் வீட்டுக்காரர் என் மேலே ரொம்பப் பிரியமாத்தான் இருக்கார். என்னைத் தவிர வேறு ஒருத்தியை அவர் நினைக்கப் பார்க்கறது இல்லேன்னு எனக்குத் தெரியும். இத்தனைக்கும் ஊர் ஊராப் பறக்கறவர். நாடு விட்டு நாடு போறவர். ஓட்டல், லாட்ஜ்னு தங்கறவர். வழி தவறிப் போறதுக்கு நிறைய வாய்ப்பு இருக்கு. ஆனால் அவர் அப்படி தவர்றது இல்லே. கட்டுப்பாடு இருக்கு. கட்டுப்பாடு இல்லாமல், தளர்ந்த வாழ்க்கை வாழறது உபயோகமில்லேங்கறது அவர் எண்ணம். ரெண்டு புத்தகம் அவர் பெட்டிலே எப்போதும் இருக்கும். ஒண்ணு கீதை, இன்னொண்ணு திருக்குறள். என்னாலும் அவரை விட்டு இன்னொரு ஆணை நினைக்கப் பார்க்க முடியாது. ஏன் இதைச் சொல்றேன்னா, நான் ராம்மை உன்கிட்ட இருந்து பிரிச்சுடுவேனோன்னு நீ பயப்படத் தேவையில்லைனு சொல்றதுக்காகத்தான்.''

''ஐயையோ! என்ன வார்த்தை சொல்றீங்க, அக்கா! அப்படி நான் நினைக்கவே இல்லே.''

காயத்திரியின் அணைப்பில் ஜெயா நன்கு ஆழ்ந்திருப்பது புரிந்தது. ஒரு பெரிய மனுஷியின் அணைப்பு அது. விடுபட்டால் திரும்பக் கிடைக்குமோ என்பதான அணைப்பு. மனதுக்கும், உடலுக்கும் இதம் தரும் அணைப்பு.

இந்த அணைப்பு, பிணைப்பு நல்லதுக்குத்தானா? என் மனம் எண்ணமிட்டது.

''அப்புறம் கேளு, ஜெயா! உன்கிட்டச் சொல்லாமல் வேறு யார்கிட்டச் சொல்லி ஆனந்தப்படறது? பள்ளிக்கூடத்துலேருந்து திரும்பி வீட்டுக்குப் போய் புத்தகப் பையை எறிஞ்சுட்டு, யூனிஃபார்ம், ஷூ இதையெல்லாம் கழட்டிப் போட்டுட்டு, ஸ்கர்ட்டை மாட்டிட்டு, அம்மா தர ஹார்லிக்ஸை ருசி பார்க்காமல் மடக், மடக்குனு குடிச்சுட்டு இவனைப் பார்க்க இவன் வீட்டுக்கு ஓடி வருவேன். இவன் ஸ்கூல்லேருந்து வந்திருக்க மாட்டான். தவிச்சிட்டு காத்திட்டிருப்பேன். வாடி, விளையாடலாம்பாள் லக்ஷ்மி. போடி, நான் வரல்லேம்பேன் எரிச்சலோடு. லக்ஷ்மிக்குக் கூட சித்தே பொறாமையாக இருக்கும். பின்னே இருக்காதா? சொந்த அண்ணன். அவள் கூட சிரிச்சு, பேசி, விளையாடாமல் எங்கிருந்தோ வந்த என்கூட அவன் ஆடி, ஓடி, பாடறான்னா, ஒரு சின்னப் பொண்ணுக்குப் பொறாமையா இருக்காதா? 'எங்க அண்ணாவுக்காகத்தானே காத்திட்டு இருக்கே?'னு அடிக்கடி கேட்பாள். 'ஆம்பளைப் பசங்க கூட விளையாடக் கூடாதடீ!' என்பாள்.

''இவன் ஸ்கூல் ஆத்தங்கரைக்கு அந்தப் பக்கம் இருந்தது. ஆறு மணி சுமாருக்கு மத்தப் பசங்களோட பேசிச் சிரிச்சிட்டு, ஆடி அசைஞ்சு வருவான். இவனைக் கண்டதும் எனக்கு நிலை கொள்ளாது. ஓடிப் போய் நடுத் தெருவுலே இவனைக் கட்டிக்குவேன். வீடு, வாசல், தெருமுனைலே நிற்கறவங்க, செல்றவங்க நின்னு கன காரியமா இதை வேடிக்கை பார்ப்பாங்க. பார்த்துச் சிரிப்பாங்க. எதுக்குச் சிரிக்கிறாங்கங்கறது எனக்குப் புரியாது. வாயைத் திறந்து, அண்ணாந்து இவன் முகத்தைப் பார்ப்பேன். கடுகடுன்னு இருக்கும். நான் என்ன தப்பு செய்தேன்னு தோணும். கையைப் பிடிச்சிட்டு வீட்டுக்கு வருவான். தனியா ரகசியமா ஒருநாள் சொன்னான். 'காயத்திரி, நடுவீதிலே அப்படி ஓடி வந்து நீ என்னைக் கட்டிக்காதே. என் ஃப்ரெண்ட்ஸ் எல்லாரும் நான் உன்னை காதல் பண்ணறேன்னு சொல்லி கேலி பண்ணறாங்க'ன்னு சொன்னான். என்னதான் இவன் சொல்லட்டுமே, எல்லாத்தையும் மறந்துடுவேன். மறுநாளும் ஓடிப் போய் நடுவீதிலே இவனைக் கட்டிப்பேன்.''

ஜெயா என்னைப் பார்த்தாள். காயத்திரியும் அவளும் ஒரு கட்சி போலவும், நான்

**பூண்டுப் பொடி 2**

4 பல் பூண்டு,
ஒரு கரண்டி துருவிய
கொப்பரைத் தேங்காய், தேவையான அளவு
உப்பு,மிளகாய்ப் பொடி சேர்த்து
மிக்ஸியில் பொடி செய்து விடுங்கள்.

- கீதா

நல்ல சிந்தனையில் பிறந்த நாவல்களை
நம் சிந்தையிலே நிலைக்கும் நாவல்களை
தொடர்ந்து மாதம் இருமுறை தரும்

# மேகலா

படிப்பதை வழக்கமாக்கிக் கொள்ளுங்கள்.

*வாங்கிவிட்டீர்களா?*

பிப் (1-15) மேகலா இதழ்

## ரமணிசந்திரன் எழுதும்

# காத்திருக்கிறேன் ராஜகுமாரா...

- பத்திரிகையாசிரியர் தொடரில் 'விக்கிரமன்'
- அனுராதா ரமணனின் அனுபவ அலைகள்
- சிகரங்களைத் தொட்ட சிறுகதை
- பங்கஜம் பாட்டியின் பட புராணம்
- போட்டிகள் - பேட்டிகள் என பல்சுவை பகுதிகளுடன்

*தயாராகிறது!*

பிப் (16-28) மேகலா இதழ்
சவீதா எழுதும்
"என் விழியில் உன் முகம்தான்"



## மேகலா

மாதமிருமுறை விலை ரூ.4
ஆசிரியர்:எம்.ஜி. வல்லபன் எம்.ஏ

96, காம்தார் நகர், சென்னை - 600 034.

இதுவும் ஒரு
பிலிமாலயா
வெளியீடு

GTS. AD VISION

## பூண்டுப் பொடி 3

10 பல் பூண்டு, 1 கரண்டி வேர்க்கடலை, 2 பச்சை மிளகாய், ஒரு துண்டு இஞ்சி வைத்து அரைத்து எடுத்த விழுதை ஒரு ஸ்பூன் எண்ணெய் விட்டு வாணலியில் வதக்கி எடுங்கள்.

– சீதா

எதிர்கட்சி என்பதாகவும் நினைக்கத் தோன்றியது.

"அப்பாவும் அம்மாவும் எப்பவாவது சினிமாவுக்குப் போவாங்க. சினிமாக் கொட்டகை ஆற்றுக்கு அக்கரையில் இருந்தது. மாட்டு வண்டிலே போவாங்க. என்னையும் அழைச்சிட்டுப் போறோம்னு சொல்லுவாங்க. வரல்லேன்னு சொல்வேன். லக்ஷ்மி வீட்டுலே இருக்கேன், சினிமா விட்டதும் வந்து கூட்டிட்டுப் போங்கம்பேன். ராத்திரி பத்து மணிக்கு அப்பாவும் அம்மாவும் வண்டிலே வந்து, என்னை இவன் வீட்டுலேருந்து அழைச்சிட்டுப் போவாங்க. ஆனா, ராம், லக்ஷ்மி வீட்டுலே சினிமாவுக்குப் போவாங்கன்னா, அவங்க கூடப் போவேன். தரை டிக்கெட் வாங்கிட்டு உட்காருவோம். அந்த சந்தோஷம் திரும்பி வராது."

"காயத்திரி, உன்... உங்க..."

"சொல்லு, ராம்!"

"உன் அப்பா, அம்மாவைப் பத்தி விசாரிக்கவே நான் மறந்துட்டேன்."

"அப்பா அம்மா இல்லே. ஒரு ஆக்ஸிடெண்ட்லே போயிட்டாங்க. இன்ஷ்யூரன்ஸ், காம்பன்சேஷன், கிராஜுடி, பிராவிடண்ட் ஃபண்டுனு நிறைய பணம் வந்தது. அதை வச்சுத்தான் இந்த வீட்டைக் கட்டினோம். ஒரே நாள்லே நான் அநாதை ஆயிட்ட மாதிரி தோணிச்சு. இவர்தான் தேறுதல் ரொம்பச் சொன்னார்."

மௌனம் நிலவியது. எதிரே சுவர் கடியாரம் மணி பதினொன்று என்றது.

"அது இருக்கட்டும். இதைக் கேளு" காயத்திரி கணநேர கவலை மூட்டத்திலிருந்து மீண்டு உற்சாகம் அடைந்ததாகக் காணப்பட்டாள். கரும்பச்சை சேலை, சோளி தாமரை இலைகளாகவும், அவளுடைய முகம் தாமரை மலராகவும் தோன்றின. தங்க ஃப்ரேம் மூக்குக் கண்ணாடிக்குப் பின்னே அடர்த்தியாக பூசிய மையுடன் கருவண்டுக் கண்கள்.

"ஒருநாள் என் அப்பாவுக்கு ரொம்பக் கோவம் வந்துடுத்து. அப்படி ஒரு கோபம் வந்து நான் பார்த்தது இல்லே. அந்த கோவத்துலே அப்பா கத்தினார். 'அது என்ன அந்த பையனோட அப்படி குலாவல்? வீட்டுலே இருக்கறதே இல்லே. பாடம் படிக்கிறது இல்லே. இனிமே அவன் வீட்டுக்கு நீ போகக் கூடாது'ன்னு தடுத்தார். வாசல் கதவைத் தாழ்ப்பாள் போட்டுட்டார். இருக்காதா பின்னே? ஒரே பெண். கொஞ்சணும்னு ஆசை இருக்கும். இப்படி வீட்டுலே தங்காமல் இவன் வீட்டுலேயே பழியாக் கிடந்தேன்னா, எந்த அப்பாவுக்குத்தான் கோவம் வராது?

"போகத்தான் போவேன்னு அடம் பிடிச்சேன். அழுது ஆகாத்தியம் பண்ணினேன். ரெண்டு நாள் பள்ளிக்கூடத்துக்குப் போகல்லே. அப்பா ஆபீஸ் போற போது அம்மாகிட்ட கதவைத் தாள் போட்டுக்கச் சொல்லிட்டுப் போனார். நடுவுலே ராம் வந்து கதவைத் தட்டி இருக்கான். என்னை அவன் பார்க்க வேண்டாம்னு சொல்லி அம்மா அனுப்பிச்சுட்டாள். சாப்பிட மாட்டேன்னேன். அப்பா மசியல்லே. எனக்கு ஜுரம் வந்துடுத்து. நூத்தி மூணு, நூத்திநாலு டிகிரி ஏறிடிச்சாம். ஸ்மரணை தப்பி, 'ராம், ராம்'னு அனுமார் மாதிரி ராமஜெபம் பண்ண ஆரம்பிச்சிட்டேனாம். டாக்டர் வந்து பார்த்திருக்கார். மருந்து கொடுத்திருக்கார். ஜுரம் இறங்கல்லே. இறங்கினாலும் திரும்பவும் ஏறிடுத்தாம்..."

"பாக்கியை நான் சொல்றேன்" என்றேன். மகளிர் இருவரும் என் பக்கம் திரும்பினர்.

"அன்னிக்கு ராத்திரி ஒம்பது, ஒம்பதரை மணிக்கு இவள் அப்பாவே எங்க வீட்டுக்கு வந்தார். வந்து, அப்பா கூட ஏதோ பேசினார். நான் உள்ளே படிச்சிட்டு இருந்தேன். அப்பா என்னைக் கூப்பிட்டார். போனேன். இவளோட அப்பாவும் கூட நின்னுட்டு இருந்தார். அப்பா சொன்னார், 'காயத்திரிக்கு உடம்பு சௌகரியமில்லையாம். போய்ப் பார்த்து அவளுக்குத் தேறுதல் சொல்லிட்டு வா''ன்னார். உள்ளே போய் ஒரு காகிதத்துலே விபூதியை வச்சு மடிச்சுக்

கொண்டு வந்து கொடுத்து, 'இதை அ... குழந்தை நெத்தியில் இட்டு, வாயிலேயும் கொஞ்சம் போடு'ன்னார். அந்த பொட்டலத்தை வாங்கிட்டு இவள் அப்பா கூடப் போனேன். அவர் என் கூடப் பேசல்லே. எனக்கும் கோவம். நானும் பேசல்லே. காயத்திரியை என்னிடமிருந்து பிரிச்சவங்களோட எனக்கு என்ன பேச்சுன்னு நான் நடந்தேன். வழி எல்லாம், 'சுவாமி, என் காயத்திரியைக் காப்பாத்து, காப்பாத்து'னு ஜெபம் பண்ணிட்டே போனேன்.

''இவள் கண்ணைத் திறக்காமல் கிழிக்கப் போட்ட வாழை நாரா கட்டில்லே படுத்திட்டு இருந்தாள். எனக்கு துக்கம் தொண்டையை அடைச்சது. இவளோட அம்மா பக்கத்துலே நின்னு, 'காயத்திரி, யாரு வந்திருக்கான், பாரு'ன்னார். இவள் கண்ணைத் திறக்கல்லே. நான் சொன்னேன், 'காயத்திரி, இதோ பாரு. நான் ராம் வந்திருக்கேன். கண்ணைத் திற'ன்னேன். அசங்க கொடுத்தாள். மெள்ள கண்ணிரண்டையும் திறந்தாள். கையை உசத்தப் பார்த்தாள். முடியல்லே. கண் ரெண்டுலேயும் தண்ணி வந்தது. அப்படியே குனிஞ்சு அவளைக் கட்டிணைட்டேன்.''

ஒருவித ஒலி வந்தது. காயத்திரியை நோக்கினேன். சேலைத் தலைப்பால் முகத்தை மூடி இருந்தாள். விம்மல். உடல் குலுங்கியது.

''என்ன, அக்கா, இது? இப்படி உணர்ச்சிவசப்படலாமா? சந்தோஷமா பேசிச் சிரிக்க இருந்துட்டுப் போகலாம்னு வந்திருக்கோம், நீங்க இப்படி அழுதா என்ன பண்ணறது?''

''அழணும், ஜெயா! நான் அழணும். இது துக்கத்துனாலேயோ துன்பத்துனாலேயோ அழற அழுகை இல்லே. ஒருத்தர்கிட்ட நாம் பிரியம் காட்டினால் கூட நம்ம அப்பா அம்மா அந்தப் பிரியத்தை எப்படித் தடுக்கப் பார்க்கறாங்கிறதை எண்ணிப் பார்க்கற போது அழுகை வரது. அன்பு, பிரியம், நட்பு இதெல்லாம் எதுக்கு இருக்கு?''

''நீங்க என்னன்னா, பழசையெல்லாம் கிளறி விட்டுட்டு'' ஜெயா என்னிடம் சொன்னாள்.

''சரி. நான் ஏதும் சொல்லல்லே.''

''ராம்மை நீ ஏன் கோவிச்சுக்கிறே, ஜெயா! அவன் சொல்லட்டும், நீ சொல்லு, ராம்! அழுகை உணர்வும் சந்தோஷம் போல இன்னொரு உணர்ச்சிதான். அதையும் கொட்டித் தீர்த்திட்டால்தான் மனசுக்கு நிம்மதி கிடைக்கும். நீ சொல்லு, ராம்!''

ஜெயாவை நோக்கினேன்.

''சொல்லுங்க'' என்றாள் அவள் புன்னகையுடன். கைகள் காயத்திரியைத் தழுவி இருந்தன.

தொடர்ந்தேன். ''கொஞ்ச நேரம் இவளைக் கட்டிப் பிடிச்சிண்டு இருந்துட்டு நிமிர முயன்றேன். இவள் உடலானா கொதிக்கிறது. என்னால தாங்க முடியல்லே. என் கழுத்தைக் கட்டிட்டு இவள் விட மாட்டேங்கிறாள். 'காயத்திரி, விபூதி கொண்டு வந்திருக்கேன். நெத்திலே இடறேன், விடு'ன்னேன். கையைத் தளர்த்தினாள். நிமிர்ந்து காகிதப் பொட்டலத்தைப் பிரிச்சு, சுவாமி பேரைச் சொல்லி, 'என் செல்வத்தைக் காப்பாத்து'னு நெத்திலே விபூதியை இட்டேன். வாயைத் திறக்கச் சொல்லி சிமிட்டா விபூதியை வாயில் போட்டேன். பாக்கியை இவள் தலையில் தூவினேன்.

''இவள் அம்மா ஹார்லிக்ஸ் கலந்து கொண்டு வந்து கொடுத்தார். டம்ளரை வாங்கி நானே கொஞ்சம் கொஞ்சமா இவளோட வாயிலே விட்டேன். சாப்பிட்டாள். வாயைத் துடைச்சு விட்டேன். என்னைப் பார்த்து லேசாச் சிரிச்சாள். ரெண்டு கையையும் உசத்தி நீட்டினாள். அந்த கைகளுக்குள்ளே அடங்கி அப்படியே படுத்தேன். இவள் உடம்பானா கொதிக்குது. பொறுத்திட்டு படுத்திருந்தேன். என் காயத்திரிக்காக எதையும் தாங்கிப்பேன், இவள் பிழைச்சு எந்திருக்கணும்னு எனக்குள்ளே சொல்லிக்

## புதுத்திரி பட்டென்று பிடித்துக் கொள்ள...



திரைப்பட விழா போன்ற எத்தனையோ திறப்பு விழாக்களில் மேடையில் உள்ள ஆள் உயர பெரிய குத்துவிளக்கை ஏற்றும்போது வி. ஐ. பி. கையில் மெழுகுவர்த்திக்குப் பதில் எண்ணெய்த் திரியுடன் கூடிய அழகிய வேலைப்பாடமைந்த பூஜைக்குப் பயன்படுத்தும் தீபக்கால் ஒன்றைப் பயன்படுத்தி ஏற்றச் செய்யலாமே! மெழுகு வர்த்தி உருகிக் கையில் வழியாமல் தடுக்கலாம். பார்க்கவும் அழகாக இருக்கும். மேலும் புதுத் திரியின் ஏற்றும் நுனியில் சிறிது கற்பூரத்தைப் பொடித்துத் தூவி வைத்திருந்தால் புதுத் திரியும் சட்டென்று பற்றிக் கொள்ளும். வீட்டிலும் பூஜை மற்றும் விசேஷ நாட்களில் புதுத் திரிக்கு இந்த முறையைப் பின்பற்றலாமே!

– விஜயா சுப்ரமணியம்




# தக தக தக ன்னு

# தங்கம்போல நிறம்

# கம கம கம ன்னு

# கும்முனு மணம்







**கிளாசிக்** நல்லெண்ணெய் சமையல் **பிரமாதம்**



தயாரிப்பாளர்: K. வேலாயுதம் செட்டியார் சன்ஸ் & கம்பெனி
280, மெயின் ரோடு
கோவில்பட்டி - 627701. போன்: 3250

மார்கெட்டிங் ஏஜெண்ட்: பரணி அசோசியேட்
36, தாட்சி அருணாசலம் தெரு
மயிலாப்பூர். சென்னை - 600 004
போன்: 74571

கிட்டேன். அப்படியே தூங்கிப் போயிட்டேன்.

''காலையிலே எழுந்திரிக்கப் பார்த்தால், இவள் ஜுரம் டக்குனு இறங்கி இருந்தது.''

ஜெயா கேட்டாள் : ''அந்த ஜுரத்தை நீங்க வாங்கிட்டேளாக்கும்!''

''இல்லே. இதென்ன ராஜகுமாரன், ராஜகுமாரி கதையா? இல்லே, சினிமாவா? எனக்கு ஜுரம் வரல்லே. ஆனா உடம்பு அசதியா இருந்தது. அடிச்சுப் போட்ட மாதிரி இருந்தது. ராத்திரி இவளோட அத்தனை சூட்டைத் தாங்கி இருக்கேனே! இவளோட அப்பா, அம்மா, டாக்டர் எல்லாருக்கும் ரொம்ப சந்தோஷம். இவள் எதுவுமே நடக்கலேங்கிறதைப் போல, படுக்கையிலேருந்து எழுந்து, குதிச்சு, நடமாட ஆரம்பிச்சுட்டாள்.

''அப்புறம் ஒருநாள் திடுதிப்புனு இவள் அப்பா டிரான்ஸ்ஃபர்னு வீட்டைக் காலி பண்ணி, வேறே ஊருக்குப் போயிட்டார்.''

காயத்திரி தொடர்ந்தாள். ''ஆமா. நான் அழுதேன். ஊருக்கு வர மாட்டேன்னேன். 'இங்கேயே ராம் வீட்டுலே இருப்பியா?'ன்னு அம்மா அதட்டிக் கேட்டாள். இருப்பேன்னு சொன்னேன். அசடு, அசடுன்னு சொல்லி கார்லே குண்டுக் கட்டாக் கட்டித் தூக்கிப் போட்டுட்டு போயிட்டாங்க. ராம்கிட்டம் சொல்லிட்டு வந்துடறேன்னு சொன்னேன். அவன் பள்ளிக்கூடம் போயிருப்பான், பார்க்க முடியாதுன்னு சொல்லி கூட்டிட்டு போயிட்டாங்க. அப்புறம்தான் தெரிஞ்சது, அப்பா டிரான்ஸ்ஃபர் வாங்கிட்டதே என்னாலேதான்னு. அம்மா சொன்னாள். அப்படி நான் ராம் பைத்தியமா இருந்தேனாம்.''

நான் சொன்னேன், ''இவளைக் காணோமேன்னு தேடிட்டு இவளோட வீட்டுக்குப் போனேன். வீடு பூட்டி இருந்தது. என்ன ஆச்சுனு எனக்குத் தெரியல்லே. லக்ஷ்மிகிட்டே கேட்டேன். 'ஆமா, அண்ணா! காயத்திரியோட அப்பாவுக்கு டிரான்ஸ்ஃபர் ஆயிடுத்தாம். எனக்கே தெரியாது. இன்னிக்கு அவள் பள்ளிக்கூடத்துக்கு வரல்லே. ஒரு பொண்ணு சொல்லித்து, சாமான் எல்லாம் லாரிலே போட்டு அனுப்பிச்சுட்டு, இவா காருலே போயிட்டாளாம்,' எனக்கு உலகமே ஒரே சூனியமா போயிடுத்து. பைத்தியம் பிடிச்சவன் மாதிரி இருந்தேன். வெளியே என் தாபத்தைக் காட்டிக்காமல் இருக்க ரொம்ப கஷ்டப்பட்டேன்.''

காயத்திரி, ''நானும் கொஞ்ச நாள் அப்படித்தான் இருந்தேன். கொஞ்ச நாள் என்ன, ரொம்ப நாள். புது இடம், புது மனுஷங்க, புதிய தோழின்னு ஆகி பழகிப்புறம் கொஞ்சம் கொஞ்சமா ராம்மை மறக்க ஆரம்பிச்சேன்.''

''என்னாலே அப்படி மறக்க முடியல்லே, காயத்திரி. உனக்கு புது இடம், புது மனுஷாள், புதிய தோழிகள் கிடைச்சாங்க, மறக்க முடிஞ்சது. எனக்கு என் ஊர் பழைய, பழகிய இடம். நீ நின்ன இடம், உட்கார்ந்த இடம், வேடிக்கை பார்த்த இடம் இதெல்லாம் உன் ஞாபகத்தைத் திரும்பத் திரும்ப என் மனசுலே எழுப்பித்து.''

ஜெயா கேட்டாள், ''இதை எல்லாம் எங்கிட்ட நீங்க சொல்லவே இல்லையே!''

''சொல்லல்லே. சொல்றதுனா என் மனசைத் திறந்து அருவியாக் கொட்டணும். மறந்தது எல்லாம் திரும்ப நினைவுக்கு வரும். வேணாம்னுதான் சொல்லல்லே. என்னதான் ஒருத்தி மனைவியாக இருந்தாலும், ஒவ்வொருவன் வாழ்க்கையிலும் இப்படி ஏதாவும் ஒண்ணு நடந்து, அதை எவர்கிட்டேயும் சொல்ல முடியாமல் இறுக்கி மனசுலே பூட்டி வச்சிருக்கிறதாத்தான் இருக்கும். இப்படி நினைச்சுப் பாரேன். கல்யாணத்துக்கு முன்னாலே உன்னை ஒருத்தன் தொட்டு இழுத்து, நீ கூச்சல் போட்டு, ஊரைக் கூட்ட, அது ராபாசமாகி, அந்த நிகழ்ச்சியை நீ என்னிடம் சொல்லி இருக்க முடியுமோ?''

''போறதே மூளை!'' என்றாள் ஜெயா.



## திடீர் சேவை

திடீர் சேவை என்றதும் கடையில் விற்கும் 'ரெடி மிக்ஸ்' என்று நினைத்துவிடாதீர்கள். இதை நாமே வீட்டில் தயார் செய்யலாம். திடீரென விருந்தினர் வந்துவிட்டால் அரை மணியில் சேவை தயார். 4 ஆழாக்கு பச்சரிசிக்கு, ஓர் ஆழாக்கு ஜவ்வரிசி, என்ற விகிதத்தில் கலந்து மிஷினில் கொடுத்து நைஸாக (மாவு) அரைத்து வைத்துக் கொள்ளவும். அதில் 2 ஆழாக்கு மாவை எடுத்துக் கொண்டு, மாவில் கொஞ்சம் பெருங்காயத் தூள், உப்பு கொஞ்சம் தேங்காய் எண்ணெய் போட்டு, தண்ணீர் விட்டு முறுக்கு மாவு பதத்தில் பிசைந்து கொள்ளவும். மாவை சேவை நாழியில் போட்டு, சேவை தட்டு இருந்தால் சேவை தட்டில் பிழிந்து குக்கரில் வைத்து 'வெயிட்' போடாமல் 5 நிமிடம் கழித்து ஸ்டவ்வை நிறுத்தவும். ஆறியவுடன் எடுத்துக் கொட்டவும். சேவை தயார். பிறகு அவரவர் ருசிக்கேற்றபடி தேங்காய் சேவை, எள்ளு சேவை எனக் கலந்து கொள்ளலாம்.

– சி. மாலா

அத்தை வந்து நின்று சாப்பாடு தயார் என்றார். எழுந்தோம்.

## 4

மேஜை மீது இருந்த டெலிஃபோன் மணி அடித்தது. ரிஸீவரை எடுத்தேன்.

''ராம்தானே பேசறது?''

''ஆமா.''

''நான் காயத்ரி பேசறேன்.''

''காயத்ரியா? என்ன சமாச்சாரம், காயத்ரி!''

''சும்மாத்தான். உன் கூடப் பேசணும்னு தோணித்து. ரொம்ப பிஸியா இருக்கியா?''



''அப்படி ஒண்ணும் பிஸின்னு இல்லே. ரொட்டீன் வேலையைப் பார்த்திட்டு இருக்கறேன்.''

''நீ நேற்று வந்துட்டுப் போனதுலே எனக்கு ரொம்ப சந்தோஷம்.''

''ஜெயா கூட உன்னைப் பத்தி ரொம்ப சிலாகிச்சுச் சொன்னாள். எவ்வளவு பெரிய மனுஷி, பணக்காரி, இருந்தாலும் எப்படி இழைஞ்சு பழகறான்னு.''

ரிஸீவரில் காயத்ரி சிரித்தாள்.

''அப்புறம் என்ன?''

''நீதான் சொல்லணும்.''

''முடிஞ்ச போது வாயேன்.''

''வரேன்'' ரிஸீவரை அதன் இடத்தில் வைத்தேன்.

இப்போது எதுக்காக ஃபோன் செய்தாள் என்று இருந்தது. பழைய நட்பை புதுப்பித்துக் கொள்ள எண்ணுகிறாளோ?

ஜெயாவுக்குத் தெரிந்தால் என்ன நினைப்பாள்? சொல்வதா வேண்டாமா?

வீடு திரும்பியதும், காப்பி அருந்திய படி சொன்னேன். சொன்னதும் அதை ஜெயா மிகச் சாதாரணத் தகவலாக ஏற்றுக் கொண்டது எனக்கு வியப்பு ஊட்டுவதாக இருந்தது.

''எதுக்காக ஃபோன் பண்ணினார், அக்கா?'' அவள் கேட்டாள்.

''சும்மாத்தான். நேத்து பேசிக் கொண்டிருந்தோமோல்லியோ? அதை அசை போட்டுட்டு இருந்திருப்பாள். பேசணும்னு தோணியிருக்கும். பேசி இருக்காள்.''

''நம்ம வீட்டிலும் ஒரு ஃபோன் இருந்தால், நானும் அக்கா கூட பேசவேனோல்லியோ?''

''சொல்லாதே. காயத்திரி காதுலே பட்டதுனா, தன் செலவுலே இங்கே ஒரு ஃபோனை வச்சுடுவாள்.''

ஜெயா நகைத்து விட்டு, காலி டம்ளரை வாங்கிச் சென்றாள்.

**ம**றுநாள் மாலை மணி மூணரை இருக்கும். அலுவலகச் சேவகர் வந்து எதிரே நின்று, ''சார், உங்களைப் பார்க்க ஒரு அம்மா வந்திருக்காங்க.''

''யாரு?''

''நான் பேர் கேட்கல்லே. ரிசப்ஷன் அறையிலே உட்காரச் சொல்லிட்டு வந்தேன்.''

முன் அனுமதியின்றி பார்வையாளர்களை அலுவலகத்துள் அனுமதிப்பதில்லை என்பது விதி. அவர்களைக் கூடிய மட்டும் ரிசப்ஷன் அறையில் அமர்த்தி, பேசி, விரைவில் அனுப்பி விட்டு, இருப்பிடத்துக்குத் திரும்பி அலுவலைக் கவனிக்க வேண்டும். அலுவல் காரணமாக வந்திருப்பவர்களை மட்டுமே உட்புறம் கூட்டிக் கொண்டு வந்து, அலுவல் பற்றிப் பேசி விட்டு அனுப்பலாம்.

வந்தது காயத்திரியாகத்தான் இருக்க வேண்டும். அவளுடைய அந்தஸ்தையும், தோரணையையும் கண்டு விட்டு, சேவகர் பேரைக் கேட்காமல் வந்திருக்கிறார். புரிகிறது.

ரிசப்ஷன் அறை நோக்கிச் சென்றேன். மின்விசிறி உயரே சுற்ற, பிரம்பு நாற்காலியில் சாய்ந்து காயத்திரி உட்கார்ந்திருந்தாள். தங்க ஃப்ரேம் மூக்குக் கண்ணாடிக்குப் பின்னே வண்டுக் கண்கள் இமைகளாகிய சிறகடித்துச் சிரித்தன. நீல வர்ண பட்டுச் சேலை கட்டி இருந்தாள். தலைமுடிகளில் அலை அலையான நெளிகள்.

எதிரே அமர்ந்தேன். ''காப்பி சாப்பிடறயா, காயத்திரி?''

''வரவழைவேன்.''

எழுந்து சென்று சேவகரிடம் இரண்டு காப்பி வாங்கி வரச் சொல்லி, பணத்தையும் கொடுத்து விட்டு வந்து மீண்டும் அவள் எதிரே உட்கார்ந்தேன்.

''என்ன விசேஷம், சொல்.''

''உன்னைப் பார்க்க வேணும்னு இருந்தது. வந்தேன். சும்மா வீட்டுலே உட்கார்ந்திட்டு என்ன பண்றது, சொல்லு. நான் வந்தது உன் வேலைக்கு இடைஞ்சல் இல்லையே?''

இடைஞ்சல்தான். அதை சொல்லவா முடியும்? அதுவும் காயத்திரியிடம். ''அதெல்லாம் இல்லை. ஒரு பத்து நிமிஷம் உன்னோட இருக்கறதுனாலே வேலை முழுகிப் போயிடாது.''

அவள் என்னை அளப்பது போலப் பார்த்தாள். ''நீ ரொம்ப மாறிட்டே, ராம்!''

''எப்படிச் சொல்றே?''

''அந்த சின்னப் பையன் ராம் இல்லை நீ!''

''முப்பது, முப்பத்தஞ்சு வருஷத்துக்கு அப்புறம் பார்க்கிறே, இல்லையா? அதான் அப்படிப் படறது.''

''இல்லே. உன்னிடம் ஏதோ பயம் இருக்கு. என்னைக் கண்டு எதுக்காகவோ பயப்படறே. என்னை விட்டு ஒதுங்கி இருக்கணும்னு நினைக்கிறே. இல்லையா, ராம்? நான் சொல்றது சரிதானே?''

எனக்கு அதிர்ச்சியாக இருந்தது. நான் மிகச் சாதாரணமானவன். நடுத்தர வர்க்கத்தினன். இந்த மாதம் வேலை செய்தால், அடுத்த மாதம் வீட்டில் உலை எரியும் என்பதான வாழ்க்கை அமைப்பில் இருப்பவன். எவருடனும் தகராறு இல்லாமல், அமைதி

10 புள்ளி 10 வரிசை



- விஜயலட்சுமி சுப்பிரமணியம்

யாக குடும்பம் நடத்திச் செல்ல வேண்டும் என்று நினைப்பவன். முக்கியமாக மனைவியுடன் பிணக்கு நேர்ந்து விடக் கூடாது என்பதில் எச்சரிக்கையுடன் இருப்பவன்.

நாற்காலியில் சாய்ந்தபடி சிரித்தேன். ''அதெல்லாம் ஒண்ணும் இல்லே, காயத்திரி!''

''இல்லைன்னா, சந்தோஷம். என்னைப் பாரு. உன்னை ஜவுளிக் கடையிலே பார்த்தப்புறம் நான் திடீர்னு ரொம்ப சின்னவளா ஆயிட்ட மாதிரி தெரியறது. உன்னோட சுத்தித் திரிஞ்ச ஆறு மாச காலம் நினைவுலே பளிச்சுனு படமா ஓடறது. நீயும் அப்படி இரு, ராம்! நாம் சிநேகிதாளா இருப்போம். ஒரு ஆணும், ஒரு பெண்ணும் சிநேகிதாளா இருக்கக் கூடாதா? இருபதாவது நூற்றாண்டு முடிஞ்சு, இருபத்தொண்ணாவது நூற்றாண்டு தொடங்க இருக்கு. இப்பவும் நாம் பழைய பஞ்சாங்கமா, ஆண், பெண் வித்தியாசம் பார்த்திட்டு இருக்கலாமா? உனக்கும் கல்யாணம் ஆயிடுத்து, எனக்கும் ஆயிடுத்து. நம்ம ரெண்டு பேருக்குள்ளே செக்ஸ் எண்ணம் எழறதுக்கு இல்லே. நான் என் வீட்டுக்காரருக்கு துரோகம் பண்ண மாட்டேன். நீயும் ஜெயாகிட்ட எத்தனை பிரியமா இருக்கேங்கிறது எனக்குப் புரியறது. அப்படி இருக்க, நாம் சிநேகிதாளா நல்லாவே இருக்கலாம்.''

அடேயப்பா! சொற்பொழிவு அல்லவா ஆற்றுகிறாள்! அவளைப் பார்த்தபடி ஏதும் பேசத் தோன்றாமல் இருந்தேன்.

''என்ன பேசாமல் இருக்கறே?''

''உம்? இத்தனை பேச எங்கே கத்துக்கிட்டேனு யோசிக்கிறேன்.''

''இதுலே கத்துக்கிடறதுக்கு என்ன இருக்கு? உள்ளத்துலே உண்மை ஒளி உண்டாயின் வாக்கினிலே அது பிரதிபலிக்கும்னு பாரதி சொல்லியிருக்கார். நான் நினைக்கிறதைச் சொல்றேன்.''

''நீ சொல்றது ரொம்பச் சரி, காயத்திரி! நாம் சிநேகிதாளா நிச்சயமாக இருக்கலாம். ஆனால் இதை நானும் நீயும் மட்டும் தீர்மானிக்க முடியுமா?''

சேவகர் காப்பி கொண்டு வந்து வைத்து விட்டுச் சென்றான்.

''சொல்லு, ராம்!'' காப்பி டம்ளரைக் கையில் எடுத்துக் கொண்டாள் காயத்ரி.

''உன் வீட்டுக்காரர் இருக்கார். அவர் ஏத்துக்கணும். அவர் பேர் என்ன? நான் கேட்கவே இல்லையே!''

''பூமிநாதன். பங்களா வாசல்லே பேரைப் பார்க்கலியா, நீ?''

''கவனிக்கல்லே. அவர் நம்ம சிநேகத்தை ஒத்துக்கிடணும். அவர் நம்ம நட்பை வித்தியாசமா எண்ணி விடக் கூடாது. அவர் அடிக்கடி ஊர் ஊராப் போறவர்னு சொல்றே. திரும்பி வர போது, நாம் அடிக்கடி சந்திக்கிறதைக் கண்டால், தப்பாப் புரிஞ்சுக்கலாம். அதே போல ஜெயாவும் என்னைத் தப்பா புரிஞ்சுக்கக் கூடாது.''

''ஜெயா நல்ல பொண்ணு சேச்சே! அவள் அப்படியெல்லாம் நினைக்க மாட்டாள்.''

''காயத்திரி, என்ன இது? உனக்கு சாதகமாகவே உலகம் இருக்கும்னு நீ நினைக்கிறே போலிருக்கே! பாம்பும் நல்ல பாம்புதான்; கடிக்காத வரைக்கும். எந்தப் பெண்ணும் தன் புருஷனை எந்தவொரு காரணத்துக்காகவும் இன்னொரு பெண்கிட்ட எந்தவிதமான உறவும் வச்சுக்க சம்மதிக்க மாட்டாள். அது சகோதர உறவு ஆகட்டும், மகன் உறவு ஆகட்டும், நட்பாகட்டும். மாமியார் - மருமகள் தகராறு, நாத்தனார் - அண்ணி தகராறு இதெல்லாம் ஏன் ஏற்படறதுன்னு நினைக்கிறே? மனைவி என்பவள் கணவன் முழுக்க முழுக்க தன் ஆதிக்கத்தில் மட்டுமே இருக்கணும்னு நினைக்கிறாள்.'' காப்பி டம்ளரைக் கையில் எடுத்துக் கொண்டேன்.

''அப்படியா?'' ஏமாற்றம் மிதக்கும் கண்களோடு காயத்திரி நோக்கினாள். பரிதாபமாக இருந்தது எனக்கு. என் நட்புக்

8 புள்ளி 8 வரிசை



- எஸ். உமா நந்தினி

காக ஏங்குகிறாள். சின்ன வயதினளாக இருக்க வேண்டும் என்பதான விருப்பம்.

அவ்விதமான ஓர் உணர்வு தப்பு அல்ல. ஆனால் அந்த நட்பை விகல்பம் இல்லாமல், கோணப் பார்வை இல்லாமல் சமூகம் ஏற்க வேண்டுமே! இவளுடைய கணவரும் என் மனைவியும் ஏற்க வேண்டுமே!

''காயத்ரி, நீ சொன்னியே, ஒரு நாண யத்துக்கு ரெண்டு பக்கம் உண்டுன்னு. அந்த உதாரணம் இதுக்கும் பொருந்தும்.''

என்னை அவள் ஊடுருவிப் பார்த்தாள். எதைக் குறித்துச் சொல்ல வருகிறேன் என்ப தான பார்வை.

''நட்புங்கிறதும் ஒருவித உறவுதான். ஏற்கெனவே நம்மிடையே இருந்த அந்த உறவை நாம் புதுப்பிச்சுக்கிற போது, புதுப் பிச்சிட்டு சந்தோஷம் அடையற போது, இன்னொரு பக்கம் உன் வீட்டுக்காரரிட மிருந்தும், என் வீட்டுக்காரியிடமிருந்தும் எதிர்ப்பு கிளம்பும். இந்த எதிர்ப்பு நம்ம ரெண்டு பேரோட குடும்ப வாழ்க்கையைப் பாதிக்கும். உன் வீட்டுக்காரருக்குக் கோபம் வரும். ஜெயாவுக்கு எரிச்சல் வரும். அதனாலே நம் ரெண்டு பேருக்கும் துயரம் தான். ஒரு பக்கம் நட்புனாலே சந்தோஷம் ஏற்பட அதே சமயத்துலே வீடுகளிலே குழப்பம் ஏற்பட்டு துயரமும் உண்டாகும். இந்த நிலைமை அவசியம்தானா?''

''உம்...?'' காயத்ரியின் கண்களில் நீர் துளித்து, ஒளி நட்சத்திரமாகப் பிரதிபலித் தது.

''யோசிச்சுப் பாரு, காயத்ரி.''

''என்னாலே உன்னைப் போல அப்படி எல்லாம் யோசிக்க முடியல்லே. நான் சந்தோஷத்தைத் தேடி அலையறேன். என் கிட்ட இருக்கிற பணம் மட்டும் சந்தோஷம் தர்றது இல்லே. பணத்தைத் தவிர சந்தோ ஷம் தர பலதும் இருக்கு. அப்படி சந்தோ ஷத்தை அடைய தடைகள் இருக்குன்னு நீ சொல்றதுலேருந்து புரியறது, ராம்!''

மௌனமாக அவளைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

எழுந்தாள். ''சரி, ராம்! உனக்கு வேலை இருக்கும். நான் வரேன்'' நடந்தாள்.

கார் வரை சென்று அவளை விட்டு விட்டுத் திரும்பினேன்.

## போனஸாகக் கொஞ்சம் வெண்ணெய்

**பா**ல் காய்ச்சி வைத்தால் ஆடை புடைக்கிறது. காப்பியில் ஆடை இருந்தால் பல பேருக்குப் பிடிக்காது. தயிரில் ஆடை இருந்தாலும் யாரும் சாப்பிடுவதில்லை. (கொழுப்பு, கொலஸ்ட்ரால் என்ற காரணத்தி னால்). ஒரு லிட்டர் பால் வாங்கினாலும் கொஞ்சம் ஆடை இருக்கத்தான் செய்யும். இவ்வளவு குறைந்த ஆடையை எடுத்து எப்படி வெண்ணெய் எடுப்பது? நாலு நாட் கள் எடுத்து வைத்தாலும் நிறைய சேராது. அதற்கு மேல் இன்னும் நிறைய நாட்கள் சேர்க் கலாம் என்றாலும் பழைய வாசனை வந்து விடும்.

என்ன பண்ணலாம்?



ஒரு லிட்டர் பிடிக்கும்படியான ஒரு எவர்சில்வர் டப்பாவை ஃப்ரீசரில் வைத்துக் கொண்டு, தினமும் ஆடையை எடுத்து அதில் போட்டு வைக்கவும். 20-30 நாட்களில் டப்பா நிறைய சேர்ந்தபின், ஃப்ரீசரில் இருந்து எடுத்து வெளியே வைத்து சுமார் நாலு மணி நேரம் கழித்து, இரண்டு தடவையாக மிக்ஸியில் போட்டுக் கடைந்தால் வெகு சுலப மாக வெண்ணெய் வந்து விடும். ஆடையுடன் சிறிது நீர் சேர்த்துக் கொள்ளவும். இரண்டா வது பாதியை கடையும் பொழுது முதலில் கடைந்ததிலிருந்து வெண்ணெயை எடுத்த மோரையே விடலாம்.

நன்றாக ½ கிலோ, ¾ கிலோ வெண் ணெய் வரும். வெண்ணெய் எடுத்த மோரும் சாப்பிட நன்றாக இருக்கும்.

வெண்ணெய் எடுப்பது, நெய் காய்ச்சு வது மிக்ஸி பாத்திரங்களை அலம்புவது எல்லாமே மாதம் ஒருமுறை செய்தால் போதும்.

வேலைக்குப் போகிறவர்கள், காலை ஒரு லிட்டர், மாலை ஒரு லிட்டர் என்று வாங்காமல் காலையிலேயே இரண்டு லிட்டர் பால் வாங்கிக் காய்ச்சி ஃப்ரிட்ஜில் வைத்து விட்டால் நன்றாக ஆடை புடைக்கும். இரு முறை பால் காய்ச்சும் வேலையும் மிச்சம். பக்கத்து வீட்டுக்காரர்களையும் தொந்தரவு செய்ய வேண்டாம்.

- ஜெயா

# ....அதுக்கு எந்த ஷாம்பூவும் தரமுடியாத ஸ்பெஷல் பராமரிப்பு கொடுக்கணும்னு."

Neelam

## "அதனாலதான் ஸன்ஸில்க் ஸலோன் ட்ரீட்மென்ட்டோட புதிய இன்டென்ஸிவ் கேர் கண்டிஷனரை தேர்ந்தெடுத்தேன்"

"அதுக்கு முன்னால் என்கூந்தலும் ஒரே குழருபடியாத்தான் இருந்தது. சிக்கலா, சொரசொரன்னு . . . ப்பா நெனச்ச பாக்கவே முடியல. என்னென்னமோ போட்டு பாத்தேன் ஒண்ணும் சரி வரல.

அப்புறமாதான் கண்டு பிடிச்சேன் என்கூந்தலுக்கு வேற எந்த ஷாம்பூவும் தரமுடியாத ஸ்பெஷல் கவனிப்பு கொடுக்கணும்னு. அதுக்காக நான் செஞ்சது ப்யூட்டி பார்லர்ல என்ன செய்வாங்களோ அது. ஸன்ஸில்க் ஸலோன் ட்ரீட்மென்ட் இன்டென்ஸிவ் கேர் கண்டிஷனர். இதில் பேந்தனால்ங்கற ஒரு சாதனைக் கண்டுபிடிப்பு இருக்கு. இது கூந்தலுக்குள்ளே ஒவ்வொரு இழையிலேயும் ஊடுருவி உள்ளேயே வேலை செய்யும். அதன் பலன் வெளியில தெரியும். அழகான பளபளப்பான கூந்தல். நிஜமாவே ஸலோன் அழகு.

நான் இந்த இன்டென்ஸிவ் கேர் கண்டிஷனரை வாரம் ஒரு தடவையாவது பயன்படுத்தறேன். நீங்களும் போட்டுப்பாருங்க. அப்புறமா உங்களுக்கும் அழகான கூந்தல் கெடச்சப்புறம் என்ன மறுபடியும் நெனச்சு பாருங்க. என்ன சரியா?"

**ப்யூட்டி பார்லர் பலன் பெற நிபுணர்கள் பயன்படுத்துவது போல் இந்த கண்டிஷனரைப் பயன்படுத்துங்கள்**

1. முதலில் ஷாம்பூ போட்டு தலையைக் கழுவவும்.
2. உள்ளங்கையில் கண்டிஷனரை எடுக்கவும். தண்ணீர் சேர்க்கக்கூடாது.
3. கண்டிஷனரை கொண்டு கூந்தலில் இதமாய்த் தேய்க்கவும். நுனிகளில் அதிகமாக.
4. பேந்தனால், கண்டிஷனர் சேர்ந்து வேலை செய்ய இரண்டு நிமிடம் கூந்தலை அப்படியே விடவும். பேந்தனாலின் டீப் ஆக்ஷன் கூந்தலினுள் ஊடுருவி உள்ளே ஊட்டமளிக்கும்.



5. பிறகு வெதுவெதுப்பான நீரில் கழுவி, தலை ஈரமாக இருக்கும்போதே சீவவும்.



6. பிறகு பாருங்கள். உங்கள் கூந்தல் சேதத்திலிருந்து பாதுகாப்பு பெற்றிருக்கும். வேண்டிய ஊட்டம் பெற்று பளபளக்கும்.

**உங்கள் கூந்தலை ஒரு நிபுணரைப்போல் பராமரியுங்கள்**

| ஷாம்பூ வகை | கூந்தல் வகை | தரும் பலன்கள் |
|---|---|---|
| பிங்க் ஸன்ஸில்க். புரோட்டீன், பேந்தனால் உள்ளது | பிளவுபட்ட நுனிகள் சேதமான கூந்தல் | பிளவுபட்ட நுனிகளை சரிசெய்கிறது |
| பச்சை ஸன்ஸில்க். விட்டமின் ஈ, பேந்தனால் உள்ளது | உறுதியற்ற சாதாரண கூந்தல் | கூந்தலுக்கு உறுதி தருகிறது |
| இன்டென்ஸிவ் கேர் கண்டிஷனர். பேந்தனால் உள்ளது | உலர்ந்த சொரசொரப்பான சிக்கலான கூந்தல் | சேதத்திலிருந்து காத்து கூந்தலை பாதுகாக்கிறது |

# ஸன்ஸில்க்

ஸலோன்
ட்ரீட்மென்ட்

**அழகான கூந்தலுக்கு நிபுணர் பராமரிப்பு.**

தேர்ந்தெடுத்த நகரங்களில் கிடைக்கிறது

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

HTA 1622

இரவு ஜெயாவிடம் காயத்திரி என் அலுவலகம் வந்து பார்த்து விட்டுப் போன விவரத்தைத் தெரிவித்தேன்.

''பாவம், அவர். உங்க நட்புக்காக, பழைய நட்பைத் தொடர்ந்து வச்சுக்கிறதுக் காக ஏங்கித் தவிக்கிறார்.''

''அது சரி, ஜெயா! அவள் குடும்ப நிலை மையையும், நம்ம குடும்ப நிலைமையை யும் நீ கவனிக்கணும். அவளோட வீட்டுக் காரர் இந்த நட்பை, சிநேகத்தை எப்படி எடுத்துக் கொள்வார்ன்னு நினைச்சுப் பார்க் கணும். நானும் ஜாக்கிரதையா இருக்க வேண்டி இருக்கு. நீ என்னைத் தப்பா புரிஞ்சுக்கக் கூடாது.''

''உங்களைத் தப்பா புரிஞ்சுக்கிறதுக்கு இதுலே என்ன இருக்கு?''

''அப்படியா கேட்கிறே?'' நான் கட்டி லில் படுத்திருந்த நிலையில் என் அருகில் உட்கார்ந்திருந்த அவளிடம் வினவினேன். ''நானும் ஜெயாவும் சிநேகமாக இருக் கறதை நீ தப்பா எடுத்துக்க மாட்டியா?''

''உங்க மனசுலே கள்ளம் இருக்கு. அத னாலே நீங்க இப்படி பேசறீங்க'' சட்டென்று யோசிக்காமல் கூட ஜெயா சொன்னாள். என் மனதுள் அவளுடைய சொற்கள் 'ணங்' என இடித்தன. ''அடுத்தாப்பலே அக்கா மன சுலே அப்படி ஒரு கள்ளம் இல்லே. வெளுத் தது எல்லாம் பால்ன்னு நினைக்கிற மனம்.''

நான் பேசவில்லை. இவளால் எப்படி இவ்வாறு சிந்திக்க முடிகிறது? பார்த்த வுடன் மனிதர்களை எப்படி எடை போட முடிகிறது? நானாவது வீட்டை விட்டு வெளியே செல்கிறேன். நான்கு மனிதர் களுடன் நாள்தோறும் பழகுகிறேன். அப் படியான வாய்ப்பு வீட்டுக்குள்ளேயே கிடக் கும் இவளுக்கு இல்லை. பின் எவ்விதம் இவளுக்கு மற்றவர்களை இனம்காணும் அனுபவம் வாய்த்திருக்கிறது?

என் மனதில் கள்ளமாமே! என்னைப் பற்றிய இவளுடைய கணிப்பு சரிதானா? என்னைப் பார்க்கிறேன். காயத்திரியை நான் எவ்வாறு கருதுகிறேன்? தக்காளிப் பழம் போல இருக்கிறாள். படுக்கையில் அவ ளுடன் சரசமாட நான் விரும்புகிறேனா? இல்லையே! அன்று அவளுடைய பங்களா வில் அவளுடன் எதிரே அமர்ந்து உரை யாடிக் கொண்டிருந்த போது, அவளுடைய மார்புச் சேலைப் பகுதி விலகி இருக்க, அதை சரிசெய்யத்தானே என் கை துடித்தது? அவளை நான் அந்தச் சின்னப் பெண் காயத்திரியாகத்தான் கருதுகிறேன். அவ ளுக்கு ஊறு எதுவும் நேர்ந்து விடக் கூடாது, அவள் தூய்மை கெட்டு விடக் கூடாது என்ப தில் நான் ஆர்வமாக இருக்கிறேன். செக்ஸ் பற்றி எண்ணம் அறவே இல்லை. என் கவலை எல்லாம் எங்கள் நட்பு இரு குடும் பத்தாரிடமும் கலகத்தையும், கலக்கத்தை யும் விளைவித்து விடக் கூடாது என்பது தான்.

பின் எப்படி இவள், ஜெயா, என் உள் ளத்தில் கள்ளம் இருக்கிறது என்று சொல் கிறாள்?

''இதோ பார், ஜெயா! என் மனசில் கள்ளம் இருக்குன்னு எதை வச்சுச் சொல்றே?''

''இல்லையா?''

''இல்லை.''

''இல்லைன்னா ரொம்ப நல்லது. அக்கா மனசு எனக்கு நல்லாவே புரியறது.''

''அப்ப நான் உன் அக்கா கூட நட்புரி மையோட பழகினால் அதை நீ தப்பா எடுத் துக்க மாட்டியே?''

''மாட்டேன். அந்த நல்ல மனுஷிக்கு என்னால ஆன உதவி பண்ணணும்னுதான் எனக்கு இருக்கே ஒழிய, அவங்க தப்புப் பண்ணுவாங்கன்னு நான் நினைக்கவே மாட்டேன்.''

## ஒவ்வோர் ஊரிலும் ஒவ்வொரு வழக்கம்!

என் கணவருக்கு அடிக்கடி மாற்றல் ஆகும் வேலை என்றபடியால் நாங்கள் பல மாநிலங்களில் இருக்கும் சந்தர்ப்பம் கிடைத்தது. அந்தச் சமயங்களில் நான் கவனித்த சுவாரஸ்யமான விஷயம் ஒன்று உண்டு —

காலைவேளைகளில் கணவன்மார்களை அலுவலகத்திற்கு அனுப்பிவிட்டு எஞ்சிய வீட்டுக் காரியங்களை முடித்துவிட்டு வெளி வராந்தாவிற்கு வந்தால், பக்கத்து வீட்டுப் பெண்மணிகளுடன் ஏதாவது பேச நேர்ந்தால் கேட்கும் முதல் வார்த்தை, ''என்ன மாமி! சாப்பாடு ஆயிற்றா?'' என்பதாகத்தான் இருக்கும்.

வங்காளத்தில் வங்காளிகளோ, ஒருவரை ஒருவர் பார்க்க நேர்ந்தால் காலை வேளைகளில் ''கீ ஸ்நான் ஹோயே கேச்சே?'' (என்ன, குளியல் முடிந்து விட்டதா?) என்பதாகத்தான் இருக்கும். வங்காளிகள் குளிப்பதற்குக் கொடுக் கும் முக்கியத்துவமே அலாதி. ஞாயிற்றுக்கிழமைகளில் வீட்டில் இருக்கும் ஆண்கள் கடுகெண்ணெயைத் தடவிக் கொண்டு வெயிலில் ஆற அமர உட்கார்ந்து கொண்டு குளிப்பார்கள். பிறந்த குழந்தையைக் கூட அவர்கள் நன்றாகக் கடுகெண்ணெயை 'மாலிஷ்' செய்துவிட்டு ஏதோ வற்றல் வடாம் காயப் போடுவது போல ஒரு மணி நேரம் வெயிலில் போட்டு விட்டுத்தான் நன்றாகக் குளிப் பாட்டுவார்கள்.



தற்போது நாங்கள் நம் தலைநகரத்தில் இருக்கிறோம். இங்கு பஞ்சாபிகள் துணி துவைப்பதற்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். வாசலில் எப்போதாவது வந்தாலே, 'கபடா தோ லியா? (துணி துவைத்தாயிற்றா?) என்றுதான் அருமையாக விசாரிக்கிறார்கள். எந்த ராஜா எந்தப் பட்டணம் போனாலென்ன? காலை வேளை களில் எல்லோர் வீட்டுத் தோட்டப் பக்கம் பார்த்தால் ஏதோ சோப்பு விளம்பரத்திற்குத் தான் துவைத்துப் போட்டிருக்கிறார்களோ என்று அத்தனை அழகாக இருக்கும். அதேபோல வீட்டிற்கு வரும் பால்காரன் கூட இஸ்திரி மடிப்பு இல்லாத சட்டை போடு வதில்லை.

- ஜெயந்தி

15 புள்ளி 8 இல் முடிவு — ஊடுபுள்ளி



- எஸ். உமா நந்தினி

''ஜெயா!''

''என்ன?''

''நீ கோடியிலே ஒருத்தி.''

''உம்?''

எனக்கே என் சொற்களில் ஏதோ அபஸ்வரம் தட்டியது. கோடியில் ஒருத்தி என்றால், ஒரு கோடிப் பெண்களில் நீயும் ஒருத்தி என்று ஆகலாம். அல்லது அந்த ஓரத்தில் ஒருத்தி என்பதாகவும் பொருள் கொள்ளலாம். சிரிப்பு வந்தது எனக்கு.

''ஒரு கோடிப் பெண்களில் நீ ஒருத்தி மட்டுமே ஞானின்னு சொல்ல வந்தேன்.''

''போதும் புகழ்ச்சி.''

''இப்படி வாயேன்!''

''எதுக்கு?''

''உன்னைக் கட்டி அணைத்துத் தழுவறேன்.''

''என்னதான் பேசறதுன்னு விவஸ்தை கிடையாதா?'' விளக்கை அணைத்து விட்டு வந்தாள் ஜெயா.

அடுத்த நாள் காலையில் அலுவலகம் வந்ததும் நானே காயத்திரிக்கு ஃபோன் செய்தேன். ஜெயாவுடன் பேசியதைக் குறித்து விவரமாகச் சொன்னேன்.

காயத்திரி, ''எனக்குத் தெரியும், ராம்! ஜெயா ரொம்ப நல்லவள். அவளை நீ புரிஞ்சுக்கல்லே. நான் புரிஞ்சுக்கிட்டேன். சரி, இன்னிக்கு சாயந்திரம் நான் வரேன். உனக்கு எப்ப ஆபீஸ் மூடறாங்க?''

''அஞ்சு மணிக்கு.''

''சரி. அஞ்சு மணிக்கு நான் வரேன். பீச், பார்க்னு எங்கேயாவது போகலாம்.''

''உம்.....?''

''ஏன், ராம்? உனக்கு இஷ்டமில்லையா?''

''இல்லே, இப்படி எல்லாம் சேர்ந்து சுத்தணுமான்னு இருக்கு.''

''பின்னே என்ன பண்ணறது? உன்னை என் வீட்டுக்கு அழைக்கலாம். இங்கேயே நாம் பேசிட்டு இருக்கலாம். அதைவிட வெளியே எங்கேயாவது போய் உட்கார்ந்து பேசுவோமே?''

''சரி.''

''அரை மனசோட சொல்றியா?''

''இல்லே, காயத்திரி! உனக்கு இருக்கற தைரியம் எனக்கு இல்லே. அதான் தயங்கறேன்.''

''எதனாலே ஆண் பிள்ளையாயிருந்திட்டு உனக்குத் தைரியம் இல்லேங்கிறே?''

''பொருளாதாரம்தான் காரணம். உன்கிட்ட ஏராளமா பணம் இருக்கு. அந்தத் தைரியம் உனக்கு. நான் மாதாந்திரங் காய்ச்சி. கோழைத்தனம் இயல்பா வந்துடறது.''

''அதுவும் உண்மைதான். ராம், உனக்கு பணம் வேணும்னா கேளு. நான் தரேன்.''

''வேணுங்கற போது கேட்கறேன்.''

''சரி. அஞ்சு மணிக்கு வரேன். முன்னே பின்னே பத்து நிமிஷம் ஆனாலும் காத்திட்டு இரு. வந்திடறேன். மறந்துட்டு பஸ் ஏறிப் போயிடாதே.''

''இல்லே'' ரிஸீவரை வைத்தேன்.

காயத்திரி சொன்னது சரிதான். அலுவல் ஆக்ரமிப்பில் அவளுடைய ஃபோன் பேச்சை மறந்தே விட்டேன். மாலையில் மேஜை இழுவையை அடித்துச் செறுத்திப் பூட்டி, சாவியை சட்டைப் பையில் போட்டுக் கொள்ளும் போதுதான் அவளுடைய பேச்சு கவனத்துக்கு வந்தது. அலுவலகப் படிகளில் இறங்கி, காயத்திரியின் கார் வருகைக்காகக் காத்திருந்தேன். அவளே கார்


PRESENTING
USHA GIFT AND GOLD
DOUBLE OFFER
உஷா
FUN 'N' FASHION
அளிக்கும் மகத்தான
முப்பெரும் பரிசுத்திட்டம்
நீங்கள் ஒவ்வொரு உஷா தையல் மெஷின் வாங்கும் பொழுதும்...
1
ரூ 500 வரை சிறப்புப் பரிசுகள் காத்திருக்கின்றன!
2
ரூ 10 லட்சம் பெறுமானமுள்ள தங்க நகைகள் சிறப்பு குலுக்கல் மூலம் வழங்கப்படும்!
3
ஒரு மாத பேஷன் டிசைனிங் கோர்ஸில் இலவசமாக அனுமதி பெறுவீர்!
நீங்கள் வாங்கும் மாடலுக் கேற்ப பரிசுகள் வழங்கப்படும்
நீங்கள் கண்டிராத... கேட்டிராத... பெற்றிடாத ஓர் அரிய வாய்ப்பு
விரைவீர்! வென்றிடுவீர்!
உஷா
ஜார்ஜ் எண்டர்பிரைசஸ்
11, நெல்சன் மாணிக்கம் ரோடு, சூளைமேடு, சென்னை-600 094. ✆ : 427498
விமலா ஏஜென்சீஸ்
14, கிண்டி ரோடு, அடையார், சென்னை-600 020, ✆ : 413197
உஷா ஜங்ஷன்
17-A, ஜங்ஷன் ரோடு, திருச்சி-620 001. ✆ : 44620
ஆல் இந்தியா சீவிங் மெஷின் அண்டு கம்பெனி
45, அல்லிமால் தெரு, திருச்சி-620 008. ✆ : 25960

GEN/ASC/938

ஓட்டுகிறாள். பங்களாவில் டிரைவரும் இருக்கிறார். ஆனால் என்னை சந்திக்க வரும் நேரங்களில் டிரைவரோடு வராது இருப்பது நல்லது என்று அவள் கருதி இருக்கலாம். அநாவசியமான வதந்திகளுக்கு இடம் அளிப்பானேன் என்ற எண்ணமாக இருக்கலாம்.

**கா**ர் வந்தது. வெள்ளை நிற ஃபியட். அவள்தான் ஓட்டி வந்தாள். நான் புகுந்து அருகில் அமரவும், காரைத் திருப்பிச் செலுத்தலானாள்.

அவள் கார் ஓட்டும் லாகவம் எனக்குப் புரிந்தது. என் நண்பர் ஒருவர் தன் காரில் என்னை அழைத்துச் செல்லும் போது எனக்கு மனதுள் புரியாத அச்சம் எழும். எதிரே வரும் வாகனங்கள் எதன் மீதாவது மோதி விடுவாரோ, கார் ப்ளாட்ஃபாரம் மீது ஏறி விடுமோ, மரத்தில், விளக்குக் கம்பம் ஒன்றில் இடித்து விடுமோ என்பதான பயம். பயப்பட்ட மாதிரியே, பெரிய விபத்து ஏதாவது நேராவிடினும், காரின் சக்கரம் குழி, மேடு ஒன்றில் இறங்கி தடால், தடால் என்று எகிறும்.

காயத்திரி ஓட்டும் போது அந்தகைய அச்சம் எதுவும் மனத்தில் எழவில்லை.

''எங்கே போகலாம், ராம்?''

''பீச்சுக்குப் போகலாம்னு சொன்னியே?''

''நீ ஏதும் சாப்பிட வேணாமா? வீட்டுக்குப் போனதும் என்ன சாப்பிடுவே?''

''காப்பி.''

''அப்ப ஏதாவது ஓட்டல்லே நாம் காப்பி சாப்பிடலாம்.''

காரைச் செலுத்தினாள். ட்ரைவ் இன்னில் கார் நுழைந்தது. ஓரமாக நிறுத்தி விட்டு, உள்ளே சென்று அமர்ந்தோம். உயர் மட்டத்தினர் வந்து கொண்டும், சென்று கொண்டும் இருந்தனர். இடம் கறுகறுப்பாக இருந்தது.

''என்ன சாப்பிடுகிறாய், ராம்?''

''காப்பி போதும்.''

''காப்பி போதும்னா ட்ரைவ் இன்னுக்கு வர வேணாமே! அங்கேயே எங்காவது நிறுத்தி சாப்பிட்டிருக்கலாமே!''

''ஏன்? பசியா இருக்கா?''

''பசி ஏது? பணம் இருக்கறவங்களுக்கு பசினா என்னன்னு தெரியாது. நேரத்துக்கு சாப்பிடணுங்கிறது நியதியாப் போனா விட்டு, பசிங்கிற உணர்வே போச்சு.''

சர்வர் வந்தார். இரண்டு ஸ்பெஷல் தோசை, காப்பிக்குச் சொல்லி விட்டுக் காத்திருந்தோம்.

''காயத்திரி, மிஸ்டர் பூமிநாதன் எப்ப ஸ்ஹரிச்பிலிருந்து திரும்பி வரார்?''

''நாளன்னிக்கு வரார். இன்னிக்கு ஃபோன் வந்தது.''

''இப்படி நீ என் கூட சுத்தறதைப் பத்தி அவர் என்ன நினைப்பார்னு நீ எண்ணலே?''

''அவர் பெரிய மனுஷர். என்னைப் புரிஞ்சுப்பார்.''

''எனக்கு என்ன பயம்னா, என்னாலே உனக்கு ஏதும் நேர்ந்துடக் கூடாதுங்கிறது தான்.''

## இப்பொழுதே சேர்க்க ஆரம்பிக்கலாமே!

எங்கள் ஊரில் அடிக்கடி 'கரண்ட் கட்' ஆகும். மெழுகுவர்த்தி நிறைய வாங்குவேன். மெழுகுவர்த்தி எரிந்து ஓர் அங்குலம் வந்தவுடன் அணைத்து விடுவேன். இப்படிப் பண்ணி என்னிடம் ஒரு அங்குலம் மெழுகுவர்த்திகள் 30 சேர்ந்து விட்டன. ஒரு டப்பாவில் அவ்வப்பொழுது போட்டு வந்தேன். பழைய சின்னச் சின்ன அகல் சட்டிகளில்



மெழுகுவர்த்தியை ஒட்டி வைத்தேன். வேண்டும். (திரியைப் பற்ற வைத்து அகலின் நடுவில் பிடித்தால் உருகி சொட்டும். இரண்டு சொட்டு விழுந்ததும் ஒரு அங்குல மெழுகுவர்த்தியை உடனே ஒட்டி விட வேண்டும். கிச்சென்று ஒட்டிக் கொண்டுவிடும்.) கார்த்திகை தீபத்தன்று காம்பவுண்டின் மேல் ஒரே மாதிரியாக வரிசையாக வைத்து எரியவிட்டால் பார்ப்பதற்கு மிகவும் அழகாக இருக்கும். எண்ணெய் செலவும் மிச்சம். சுவர்களும் எண்ணெய்ப் பிசுக்காகாது. இப்பொழுதே நீங்களும் செய்து பார்த்துச் சேர்க்க ஆரம்பிக்கலாமே!

- கடாச நாடன்

பள்ளிக் குழந்தைகள் போடும் 'சாக்ஸ்' வெகு சீக்கி ரத்திலேயே உறுதித் தன்மையை இழந்து லூஸாகி விடுகிறது. மற்றபடி சாக்ஸ் கிழியாமல் இருக்கும் பட்சத்தில் சாக்ஸ் ஓரத்தில் அதன் சுற்றளவுக்கு ஏற்ற படி நல்ல ரப்பர் பேண்டை வைத்து உருட்டித் தைத்துவிடவும். இதனால் சாக்ஸ் ஓரம் தொய்ந்து போகாமல் காலை அழுத்தமாய்ப் பிடித்துக் கொண்டு இருக்கும். இம்முறை மிகப் பயனுள்ள தாய் இருந்ததால் பழைய தூக்கி எறிந்த சாக்ஸ்களை எடுத்து அதில் ரப்பர் பேண்டை ஓரத்தில் வைத்து உருட்டித் தைத்தேன். இதை எல்லோரும் பயன் படுத்தி, அடிக்கடி சாக்ஸ் வாங்கும் செலவைக் கட்டுப்படுத்தலாம். - வி. தனுசு



''என்ன நேரும்னு நினைக்கிறே?''

''பிணக்குதான். அந்தப் பிணக்கும் பெரிசாயிடக் கூடாது.''

''பெரிசாயிடக் கூடாதுன்னா...?''

''சொல்லச் சொல்றியா?''

''சொல்லேன். நெருப்புன்னா வாய் வெந்துடாது.''

''என்ன இருந்தாலும் உனக்குத் தைரியம் ஜாஸ்திதான்.''

காயத்திரி நகைத்தாள். தள்ளி இருந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தவர்களில் சிலர் திரும்பிப் பார்த்தனர்.

''டைவர்ஸ் வரை போயிடுமோன்னு பயப்படறியா?''

தலையசைத்தேன்.

''போகாது. பயப்படாதே.''

திரும்பவும் பழைய நாட்களை கவனப் படுத்திக் கொண்டு பேசினோம். அவளுடைய பெற்றோரின் விபத்து குறித்து விசாரித்து அறிந்து கொண்டேன். சாப்பிட்டு விட்டு நாங்கள் எழுந்த போது மாலை மணி ஆறு ஆகியது.

''ஜெயா காத்திட்டு இருப்பாளா, ராம்?''

''ஆமா. நேரத்துக்கு வீட்டுக்குப் போகாவிட்டால், எனக்கு ஏதோ ஆக்ஸிடெண்ட் ஆயிடுத்துன்னு நினைக்க பதைக்கப் போயிட்டு இருப்பாள்.''

''கொடுத்து வச்சவள்.''

''ஏன் அப்படிச் சொல்றே?'' காரை நோக்கி நடந்தோம்.

''உனக்காக ஒருத்தி காத்திட்டு இருக்காளே! நான் என்னிக்குமே இவருக்காகக் காத்திட்டு இருந்தது இல்லே. இன்னிக்கு ஒரு ஊரு. நாளைக்கு லண்டன், பாரிஸ்னு பறக்கறார். உன்னை விட அவருக்கு விபத்துக்கான சான்ஸ் ஜாஸ்தி. இருந்தாலும் நான் கவலைப்பட்டிட்டு இருக்கேனா?''

''அதான் வித்தியாசம், காயத்திரி!''

''எது?''

காரில் ஏறி அமர்ந்தோம். ஸ்டார்ட் செய்தாள் காயத்திரி.

''நான் நடுத்தரவர்க்கம். பயந்து பயந்து வாழற ஜென்மம். இந்தப் பயம் ஏன்னா, பெரிசா பாசம், அது, இதுங்கறதை நான் நம்பல்லே. பொருளாதாரம்தான் காரணம். எனக்கு ஏதாவது ஆச்சுன்னா, என் குடும்பம் நடுத் தெருவுலே நிற்கும். இந்தப் பயம்தான் மனசுக்குள் இருந்திட்டு, இயக்கு சக்தியா என்னைப் போன்ற நடுத்தரவர்க்கத்தினரை ஆட்டி வைக்குது.''

கார் சென்று திரும்பி மௌண்ட்ரோடில் ஓடியது.

''எனக்கு ஏன் அப்படிப்பட்ட பயம் இல்லே?'' காயத்திரி கவனமாகக் காரை செலுத்தியபடி கேட்டாள். தேர்ந்த ஓட்டுனர்!

''முதலாவது உன் வீட்டுக்காரர் இந்த நேரத்துக்குத்தான் வீடு திரும்பறதுங்கிற நியதி கிடையாது. மற்றது உன்னிடம் பணம் இருக்கு. உன் வீட்டுக்காரருக்கு ஏதாவது ஆனாலும், அப்படி ஏதும் ஆகாது கடவுள் காப்பாராக - உன் வாழ்க்கை அதிகமா பாதிக்கப்படாது. துயரம் இருக்கும்.''

''உன் வீட்டுலே உன்னைக் கொண்டு போய் விட்டுட்டுப் போகவா?''

''வேணாம். நான் இப்படி இறங்கிக்கறேன். பாண்டி பஜாரில் பஸ் பிடிக்கப் போறேன்.''

''ஜெயாவை நான் பார்க்க வேணாமா?''

''உன் இஷ்டம்.''

சிக்னலுக்காகக் காத்திருந்து விட்டு, கார் பாண்டிபஜார் பக்கம் திரும்பியது.

''டிராஃபிக் ரொம்பத்தான் அதிகமாயிடுத்து'' என்றாள் காயத்திரி, ஸ்டியரிங் பிடித்தபடி.

மேற்கு மாம்பலம் போய் வீட்டின் முன் காரை காயத்திரி நிறுத்தினாள். வீட்டு வாயிலில் ஜெயா காத்திருந்தாள்.

''நீ சொன்னது சரிதான், ராம்!''

''என்ன?''

''ஜெயா, நீ வரக் காணோமேன்னு கவலையோட காத்திட்டு இருக்கிறாள் பார். உன்னைக் கண்டதும்தான் அவள் கவலை முகத்தை விட்டு மறையறது தெரியறது.''

''நீ ரொம்ப ஜனங்களை உணர்ந்து பார்க்கிறே!''

ஜெயா ஓட்டமும் நடையுமாகக் கார் அருகில் வந்தாள். ''வாங்க, அக்கா!'' என்றாள் முகத்தில் பூரிப்புடன், வாய் நிறையப் பல்லாக.

''உன் வீட்டுக்காரரைக் கொண்டு வந்து விட்டுட்டேன். என்னைத் திட்டாதே!''

''உள்ளே வாங்க, அக்கா!''

''வரேன்'' காரைப் பூட்டி, சாவியை எடுத்துக் கொண்டு காயத்ரி ஜெயாவின் பின்னே வீட்டினுள் நுழைந்தாள்.

என் மக்களுடன் பேசினாள்; சிரித்தாள். சாப்பிட்டு விட்டுப் போகலாம் என்று சொன்ன போது, ஒரு நாள் சிறப்பாக ஏதாவது பண்ணி வை, சாப்பிடுகிறேன் என்றாள் ஜெயாவிடம். அரை மணி நேரம் இருந்து விட்டுச் சென்றாள்.

அன்றைய நிகழ்ச்சிகளை இரவு ஜெயாவிடம் ஒப்பித்தேன்.

அதற்கு அடுத்த நாள் பீச்சுக்குச் சென்றோம். அதிகமாகப் பேசவில்லை. அருகருகில் இருப்பதே இருவருக்கும் மகிழ்ச்சி அளிப்பதாக இருந்தது.

அப்புறம் மகாபலிபுரம் சென்று வந்தோம். பூமிநாதன் ஸைரிச்சிலிருந்து திரும்பி வந்து விட்டதாக காயத்ரி சொன்னாள்.

''நாளை சினிமாவுக்குப் போகலாமா?'' என்று கேட்டாள்.

''சினிமாவுக்கா?''

''ஏன்?''

''இல்லே....'' இழுத்தேன்.

''மார்னிங் ஷோ, நைட் ஷோ எல்லாம் போக முடியாது. ஆஃபீஸுக்கு அரை நாள் லீவு போடு. மாட்னி ஷோ போகலாம்.''

''சரி.''

சென்றோம். அருகருகே அமர்ந்து படம் பார்த்துக் கொண்ட நேரத்தில் காயத்ரி தன் இடது கையால் என் வலது கையைப் பற்றிக் கொண்டாள். இடைவேளைக்காகப் பிடிப்பை விட்டவள், மீண்டும் பற்றிக் கொண்டாள்.

அடுத்த நாள் ஃபோன் மணி அடித்தது. ரிஸீவரை எடுத்தேன். ''ஹலோ, ராம் பேசறேன்.''

''நான் பூமிநாதன் பேசறேன்.''

''சார்....!''

''உம்... காயத்ரி எல்லாம் சொன்னாள்.''

''குட்மார்னிங், சார்!''

''வெரிகுட்மார்னிங். மிஸ்டர் ராம், நீங்க கொஞ்சம் சாயந்திரம் என் பங்களாவுக்கு வர முடியுமா?''

''வரேன், சார்!''

''உங்க கூட பேசணும்.''

''சரி, சார்!''

''கார் அனுப்பறேன்.''

''வரேன், சார்!''

ரிஸீவர் அந்தப் பக்கம் வைக்கப் பட்டது.

எதுக்காக காயத்ரியின் கணவர் வரச் சொல்கிறார் என்பது புரியவில்லை. காயத்ரி என்ன சொல்லி இருக்கப் போகிறாள்? அன்று முழுதும் அலுவலகத்தில் எனக்கு வேலையே ஓடவில்லை. கீதை படிப்பவர், திருக்குறள் படிப்பவர். எதையும் சிந்தித்துத்

## கவனக் குறைவால் விளையும் சிக்கல்கள்

என் உறவினர் வீட்டில் நடந்த பயங்கரம் இது...

என் உறவினர் வீட்டுக் குழந்தைக்குத் தட்டில் சோறு போட்டுக் கொடுத்துவிட்டு உள்ளே சமையலறையில் வேலையாக இருந்தவர். திடீரென குழந்தை தரையில் துடித்துக் கொண்டு இருக்கவே, என் உறவினர் பதறி விட்டார்.



என்ன செய்வதென்றே தெரியவில்லை. ஏன் இப்படி என்றும் புரியவில்லை. அவசரம் அவசரமாய்க் குழந்தையை டாக்டரிடம் கொண்டு போய் டெஸ்ட் பண்ணியதில் குழந்தையின் தொண்டையில் சிக்கியிருந்த தங்க மோதிரம் கிடைத்தது. நல்லவேளை. உரிய நேரத்தில் டாக்டரிடம் போனதால் உயிர் பிழைத்தது. எனவே, குழந்தைகளுக்கு வலது கரத்தில் மோதிரம் போடாதீர்கள்.

- ரோஸ்லின் ராஜ்குமார்



ஃப்ரேம் போட்ட படங்கள் தவிர, சிறுசிறு படங்கள் 'மேக்னட்' வசதியுடன் பீரோவில் ஒட்ட விற்பார்கள். அது அதிகம் இருந்தால் சுவாமி அறையில் வைத்து மாட்ட முடியவில்லையே என கவலை வேண்டாம். பின்னால் இரண்டு இஞ்ச் அளவிற்கு செல்லோடேப் ஒட்டி அதை வெளிப் புறமாய் மடித்துப் பூஜை அறைச் சுவரில் ஒட்டிவிடலாம். ஒட்டியது போல் தெரியாது. அதுபோல் அட்டைப் படங்களையும் செய்யலாம்.

- கி. மஞ்சுளா

தான் செய்வார் என்று என்னுள் சமாதானப் படுத்திக் கொண்டேன்.

மாலையில் காரில் சென்றேன். அது கேட்டினுள் நுழைந்து போர்ட்டிகோவில் நின்றது. டிரைவர் இறங்கி, சுற்றி வந்து கதவைத் திறந்து விடும் வரைக் காத்திராமல் நானே திறந்து கொண்டு இறங்கினேன். எனக்காக காயத்திரியோ, பூமிநாதனோ வாயிலில் காத்திராதது ஏமாற்றம் அளிப்பதாக இருந்தது.

பங்களாவினுள் சென்றேன்.

இருவரும் ஹாலில் உட்கார்ந்திருந்தனர். என்னைக் கண்டதும் காயத்திரி புன்னகை காட்டினாள். அவளுடைய முகத்திலிருந்து எந்தவித அசம்பாவிதத்தையும் என்னால் உணர முடியவில்லை. சாதாரணமாக இருந்தாள்.

''வா, ராம்!'' என்றாள். ''இவர்தான் என் வீட்டுக்காரர். உன்னைப் பார்க்கணும்னார். ஃபோன் நம்பர் கொடுத்தேன்.''

''உட்காருங்கள்'' என்றார் அவர் ஆங்கிலத்தில்.

அமர்ந்தேன்.

''உங்கள் இருவருடைய இளவயது நட்பைப் பற்றி காயத்திரி விஸ்தாரமாக விவரித்தாள். மிஸ்டர் ராம்! கேட்க மகிழ்ச்சியாக இருந்தது. பாருங்கள், இத்தனை ஆண்டுகள் கழித்து சந்தித்துக் கொண்டிருக்கிறீர்களே, அதுதான் விசேஷம்! ஏதோ ஒரு சக்தி நம்மைப் பகடைக் காய்களாக ஆட்டுவிக்கிறது. நாம் வெறும் பொம்மைகள். இல்லையா, ராம்! என்ன நினைக்கிறீர்கள்?'' பூமிநாதன் கேட்டார்.

''இருக்கலாம், சார்!''

காயத்திரி எழுந்தாள். ''உங்கள் ரெண்டு பேருக்கும் நான் காப்பி கொண்டு வரேன். நீங்க பேசிட்டு இருங்க'' என்று கூறி நகர்ந்தாள்.

அவள் செல்வதை பூமிநாதன் பார்த்துக் கொண்டிருந்தார். மறைந்தவுடன் அவசரமாக, முகத்தை கடுப்பாக்கிக் கொண்டு, ''மிஸ்டர் ராம், நான் இதை விரும்பவில்லை. எந்தவொரு கணவனும் தன் மனைவி இன்னொருவருடன் பழகுவதை விரும்ப மாட்டான். காயத்திரி சொல்லுவாள், 'என் கணவர் பெரிய மனிதர், நம் நட்பை பெருந்தன்மையோடு ஏற்றுக் கொள்வார்' என்று. இல்லை. என்னால் அப்படி ஒரு நட்பை ஏற்றுக் கொள்ள முடியாது. ராம், தயவுசெய்து அமைதியான என் குடும்ப வாழ்க்கையைக் கெடுத்து விடாதீர்கள். உங்களை சந்தித்ததிலிருந்து காயத்திரி வெகுவாக மாறி இருக்கிறாள். எனக்குப் புரிகிறது. அது மகிழ்ச்சிதான். வேண்டாம், மிஸ்டர் ராம்! நீங்கள் என்ன செய்வீர்கள் என்பது எனக்குத் தெரியாது. உங்கள் நட்பை முறித்துக் கொள்ள வேண்டும். நான் காயத்திரியிடம் இதைச் சொல்ல முடியாது. என்னைப் பற்றிக் கேவலமாக எண்ணுவாள் என நான் அச்சமடைகிறேன். நீங்கள்தான் உதவ வேண்டும். இந்த நட்பை முறித்துக் கொள்ளுங்கள். நீங்கள் அறிவாளி என்று நம்புகிறேன். ஒரு நல்ல குடும்பத்தை நாசமாக்கிய பாவம் உங்களைச் சேரக் கூடாது.''

நான் சற்று திடுக்கிட்டுக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

சாத்தியம்தானா? காயத்திரியுடன் நான் கொண்ட நட்பு முறித்துக் கொள்ளக்கூடியது தானா? இவ்வளவு பெரிய மனிதர் என்னிடம் கெஞ்சாத குறையாகக் கேட்டுக் கொள்கிறார்.

உண்மைதான். அழகான இக் குடும்பத்தை நான் கலைத்து விடக் கூடாதுதான். காயத்திரியின் நன்மைக்காகவே நான் அப்படி எதையும் செய்து விடக் கூடாது.

காயத்ரி என் மீது எந்த அளவு பிரியம், அன்பு, நட்பு பாராட்டுகிறாளோ, அந்த அள வுக்கு அவள் பேரிலும் எனக்குப் பிரியம், அன்பு, நட்பு இருக்கிறது. நான் சிறுவன் ராம் ஆகி இருக்கிறேன். கைகோர்த்து அவளுடன் ஓடி ஆடிப் பாடிய நாட்கள் என்னுள் பசுமை யாக மீண்டும் பரந்து விரிந்து எழுந்திருக் கின்றன. இந்த அனுபவம் மனித இனத்தில் அனைவருக்கும் கிடைக்க வாய்ப்பு இல்லை. மனத்தில் இனம்புரியாத அளவு கடந்த மகிழ்ச்சி ஊற்றுப் பெருக்காக எழுந்து வழிகிறது. இந்த உணர்வை அழித்துக் கொள்வது என்றால்... முடியுமா?

முடிந்தாக வேண்டும். காயத்ரியின் நலத்தில் எனக்கு ஆர்வம் உண்டு என்றால் நான் இதைச் செய்தாக வேண்டும். அவ ளுடன் நான் கொண்ட நட்பை முறித்துக் கொள்ள வேண்டும். முறித்துக் கொள்வது என்றால் எப்படி? யோசித்துச் செயலாற்ற வேண்டும்.

''என்ன, மிஸ்டர் ராம்?''

''எனக்கு நீங்கள் சிறிது அவகாசம் தர வேண்டும்.''

''எதுக்கு?''

''நான் யோசிக்க வேண்டும். நீங்கள் சொல்வது எனக்குப் புரிகிறது. உங்களுக்கு நான் உதவுகிறேன். காயத்ரியின் நலன் களைக் கருதியும் நான் அவளுடன் கொண் டுள்ள நட்பை முறித்துக் கொள்ளத்தான் வேண்டும் என்பதை உணர்கிறேன். உங்கள் குடும்பம், தாம்பத்திய வாழ்க்கை சிதறி விட நான் காரணமாக இருந்து விடக் கூடாது.''

பூமிநாதன் என்னைக் கூர்ந்து பார்த்தார். அவருடைய முகத்தில் புன்னகை கண்டது. இவர் அப்படி ஒன்றும் நான் கற்பனை செய்திருந்தபடி காயத்ரியின் அழகுக்கு ஏற்றவாறு அழகானவராக இல்லை. நிறம் மட்டுதான். ஆனால் நல்ல உடல்வாகு. மூளை உள்ளவர். பேச்சின் மூலம் எவரை யும் கவரக்கூடியவர். ஆங்கிலம் சரளமாகப் பேச வருகிறது.

''மிஸ்டர் ராம், நீங்கள் புத்திசாலி. புத்தி சாலி மட்டுமல்லாமல் மனிதாபிமானம் மிக் கவர். உங்களைப் போற்றுகிறேன். விவரங் களை விரைவாகப் புரிந்து கொள்கிறீர்கள். உங்களை என் கவனத்தில் எப்போதும் வைத்திருப்பேன். சிந்தித்து, முடிவு எடுங் கள்.''

**கா**யத்ரி ஒரு ட்ரேயில் மூன்று கோப் பைகள் காப்பியுடன் வந்தாள். உடன் ஒரு தட்டில் உயர்வகை பிஸ்கட்களும் இருந்தன. லாரிச்சிலிருந்து பூமிநாதன் கொண்டு வந்த வைகளாக இருக்க வேண்டும்.

வந்தவள் எங்கள் முகங்களைப் பார்த் தாள். ட்ரேயை டீப்பாய் மீது வைத்து விட்டு, ''என்ன, நட்பு முறையில்தானே பேசிக் கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

பூமிநாதன் சிரித்தபடி, ''ஏன்?''

''கேட்டேன்'' உட்கார்ந்து கொண் டாள்.

காயத்ரியின் முகத்தை நோக்கினேன். பழைய சின்ன காயத்ரியாகத்தான் அவள் தெரிந்தாள். இவளுடன் நட்பை முறித்துக் கொள்ள வேண்டுமாமே? இறைவா!

அன்றைய இரவில் ஜெயாவிடம் விவ ரித்தேன்.

''ஐயோ! என்னது இது? பிள்ளையார் பிடிக்க குரங்காய் முடிந்த விவகாரம் மாதிரி இருக்கே!''

''குரங்காய் முடிவதற்குள் நான் தீவிர மாக ஏதானும் செய்யணும்.''

''என்ன செய்யப் போறீங்க?''

''யோசிக்கணும்.''

''ஏதாவது செய்து, அக்காவின் மனசை நோக அடிச்சுடாதீங்க.''

''யோசிக்கணும்.''

அடிக்கடி ஆட்டோவிலோ, அல்லது ஸ்கூட்டரின் பின்னாலோ அமர்ந்து பயணம் செய்பவர்கள் பயணத்தின் போது வலது காதில் பஞ்சை வைத்துக் கொண்டு பயணம் செய்தால், ஜலதோஷம் பிடிக்காது. தொண்டை கரகரப்பு ஆகாது. காது, கண், கழுத்து வலிகள் நம்மைத் தாக்காது.

- எச். கௌசல்யா




வெல்வெட் ஹங்காமா
5 வெல்வெட் ஷாம்பூ
சேஷே வாங்கினால்
1 சேஷே இலவசம்
New Velvette
JASMINE
1 வெல்வெட் ஷாம்பூ 100ml பாட்டில் வாங்கினால்
5 சேஷே இலவசம்
இந்தியாவில் முதல் முறையாக
ஷாம்பூவை சேஷேயில்
அறிமுகப்படுத்திய
வெல்வெட், இப்போது
உங்களுக்கு அளிக்கிறது இரட்டிப்பு
மகிழ்ச்சி...
மகத்தான ஹங்காமா சலுகை...
காலி சேஷேக்களை சேமிக்க
தேவையில்லை. வெல்வெட் ஷாம்பு
வாங்கினால் கைமேல் பலன் —
உடனடி சலுகை.
ஒப்பற்ற கூந்தல்... வெல்வெட்டின்
பிளாக், எக், ரோஸ், ஜாஸ்மின்,
சாண்டல் மற்றும் பல்வேறு
நறுமணங்களிலிருந்து உங்களுக்கு
விருப்பமானதை வாங்குங்கள்.
உங்கள் கூந்தலில் மென்மை,
பொலிவு, அழகைக் கூட்டிடுங்கள்.
New Velvette
ROSE
இச்சலுகை தென்னிந்தியாவில்
மார்ச் 31, 1994 வரை மட்டுமே.

முகப்பருவைப் போக்கச்
சிறிதளவு ஜாதிக்காயை
இழைத்து தினமும் பருக்களின் மீது
தடவி வர, பருக்கள் இருந்த இடம்
தெரியாமல் மறைந்துவிடும்.
இது என் மாமியார் சொல்லி
நான் அனுபவத்தில்
கண்ட உண்மை.
- அகிலா

''யோசிங்க. உங்க யோசனை நல்ல படியா இருக்கட்டும்'' ஜெயா போர்வையை இழுத்துக் கொண்டு உடனேயே தூங்கி விட்டாள்.

கவனத்துக்கு வந்தது. அது என்ன பாடல்? பாரதியாரின் பாடல்... 'பிள்ளைப் பிராயத்திலே...' உடனேயே அந்த இரவுப் பொழுதில் அப்பாடலைப் படித்துப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் உள்ளத்துள் வெள்ளமாக எழுந்தது. எழுந்தேன். வாசல் அறைக்குச் சென்று, அலமாரியில் 'பாரதியின் கவிதைகள்' நூலைத் தேடினேன். கிடைத்தது. பிரித்தேன்.

'சரஸ்வதி காதல்'

'பிள்ளைப் பிராயத்திலே - அவள்
பெண்மையைக் கண்டு
மயங்கி விட்டேன் அங்கு
பள்ளிப் படிப்பினிலே - மதி
பற்றிட வில்லை எனினும்
தவிப்பட
வெள்ளை மலர் அணை மேல் -
அவள்
வீணையும் கையும் விரிந்த முகமலர்
விள்ளும் பொருள் அமுதும்
- கண்டு என்
வெள்ளை மனம் பறிகொடுத்தேன்,
அம்மா!'

ஓ, படிக்கப் படிக்க என் உள்ளம் கரைகிறது. நெஞ்சு அடைத்தது. அழுதேன். அழுது தீர்த்துக் கொண்டேன்.

காலையில் அலுவலகம் சென்றதும் காயத்திரிக்கு ஃபோன் செய்தேன்.

பூமிநாதன் எடுத்தார்.

''குட்மார்னிங், சார்! நான் காயத்திரியுடன் பேச முடியுமா?''

''பேசுங்கள், மிஸ்டர் ராம்!'' அவர் வேறு எதுவும் கேட்கவில்லை. பெரிய மனிதன்.

காயத்திரி லைனில் வந்தாள்.

''ஹலோ!''

''நான் ராம் பேசறேன், காயத்திரி!''

''சொல்லு, ராம்!''

''இன்னிக்கு சாயந்திரம் என் ஆஃபீஸுக்கு வாயேன். சௌகரியப்படுமா?''

''சௌகரியப்படுமா, என்ன? நிச்சயம் வரேன்''

''ஃபோனை வச்சுடறேன்.''

''சரி.''

என் திட்டம் இதுதான். அவளை லாட்ஜுக்கு அழைப்பது. 'எதுக்கு?' என்று சற்று திடுக்கிட்டுக் கேட்பாள். 'வேறே எதுக்கு, காயத்திரி! உன்னோட படுக்கணும்னுதான்!' வெருண்டு போய் என்னைப் பார்ப்பாள். 'ராம், உன்னை என்னவோ நினைச்சிட்டு இருந்தேன். இத்தனை மோசமானவனா நீ? என்னால் நம்பவே முடியலியே! இது ஜெயாவுக்கு நீ செய்யற துரோகம்னு நினைச்சுப் பார்த்தாயா?' என்று கூறுவாள். 'நமக்குள்ளே என்ன, காயத்திரி? இது யாருக்குத் தெரியப் போறது?' என்று நான் சொல்வேன். அவள் விருட்டென்று எழுவாள். கைப் பையுடன் கோபத்துடன் ரிஸப்ஷன் அறையை விட்டு விரைந்து செல்வாள். எங்கள் நட்புறவு முறியும்.

காத்திருந்தேன். இதயம் மார்புக் கூட்டினுள் குருவிக் குஞ்சாக இறக்கைகளைச் சிலிர்த்து அடித்துக் கொண்டது.

மாலை மணி நாலரை சுமாருக்கு காயத்திரி வந்தாள். சேவகர் வந்து சொல்லி விட்டுச் சென்றார். ரிஸப்ஷன் அறையை நோக்கி நடந்தேன்.

காயத்திரி அமர்ந்திருந்தாள். என்னைக் கண்டதும் வழக்கமான புன்னகையை வாரி வீசினாள்.

''காப்பி சாப்பிடறியா, காயத்திரி?''

''வேணாம்.''

எதிரே உட்கார்ந்து கொண்டேன். ''இன்னிக்கு எங்கே போகலாம் சொல்லு.''

''உம்? நீயே சொல். நீதானே என்னை வரச் சொன்னே? எங்கே போகலாங்கிறதை தீர்மானிக்காமலா வரச் சொல்லியிருப்பே?''

பெருமூச்சு விட்டேன். மார்பு அடித்துக் கொண்டது. ''நான் ஒரு இடம் சொன்னால் கோவிச்சுக்க மாட்டியே?''

''கோவமா? உன் பேரிலா? அப்படி எனக்குக் கோவம் வரும்படியா தப்புப் பண்ணறவன் இல்லை நீ, ராம்!''

''உம்...? அப்படியா நீ நினைக்கிறே?''

''ஏன்?''

''இன்னிக்கு உன்னை லாட்ஜ் எதுக்காவது அழைச்சிட்டுப் போகலாம்னு இருக்கேன்.''

''லாட்ஜுக்கா?''

''ஆமாம். லாட்ஜ்லே அறை எடுத்துத் தங்கலாம்.''

அவள் என்னைக் கூர்ந்து நோக்கினாள். ''அப்படி ஒரு ஆசை உனக்கு இருக்கா, ராம்!''

''ஏன்? இருக்கக் கூடாதா? - நான் ஒரு ஆண். நீ பெண்.''

''சரி. அந்த ஒரு ஆசை உனக்கு இருந்தால், நான் மாட்டேன்னா சொல்வேன்?''

ஓ! இந்த அவளுடைய பதிலை நான் எதிர்பார்க்கவில்லை. நட்புக்காக எதையெல்லாம் தியாகம் செய்ய இருக்கிறாள் இந்த மங்கை!

''காயத்திரி!'' என் குரல் தழுதழுத்தது.

''என்ன, ராம்?''

''என்னை மன்னிச்சுடு.''

''எதுக்கு? நான்தான் சம்மதம்னு சொல்றேனே!''

''வேணாம், காயத்திரி! உன் பெருமையை நான் இன்னும் முழுசாக அறியல்லே.''

''என்ன சொல்றே நீ?''

முந்தைய தினம் மாலை அவளுடைய கணவருக்கும் எனக்கும் இடையே நடந்த உரையாடலை விரிவாக அவளிடம் தெரிவித்தேன். ''காயத்திரி, உன் குடும்ப நன்மைக்காக நாம் நமது சிநேகத்தை துறக்கத்தான் வேணும்'' என்றேன்.

''அவர் உன்கிட்ட அப்படியா சொன்னார்?''

''ஆமா. ஆனால் அவர் பேரில் தப்பு இல்லை, காயத்திரி! உண்மையிலேயே உன் வீட்டுக்காரர் பெரிய மனிதர். எனக்கு உன் சந்தோஷத்தை விட, உன் குடும்ப அமைதி ரொம்ப முக்கியம். உன் குடும்பம் அமைதியா இருந்தால்தான், நீ சந்தோஷமாக இருக்க முடியும்.''

''இதுக்குத்தானா லாட்ஜ், அறை, அது, இதுன்னு நாடகம் ஆடினே?''

''நீ கோவிச்சுக்கிட்டு நம்ம நட்பை முறிச்சுப்பேன்னு நினைச்சேன். உன் நட்புணர்வை நான் தப்பா எடை போட்டுட்டேன், காயத்திரி! என்னை மன்னிச்சுடு. என்னை மன்னிச்சேன்னு நீ சொன்னால்தான் என் மனப் புண் ஆறும். உன்னைப் புரிஞ்சுக்காமல் பேசிட்டேன்.''

''உம்... இனிமே நீயும் நானும் சந்திக்க வேணாம், பேச வேணாம், ஃபோன்லே கூடப் பேச வேணாம். அப்படித்தானே?''

''வேணாம், காயத்திரி!''

''எப்படி உன்னாலே முடியறது, ராம்?''

''முடிஞ்சாகணுமே! உன் நன்மைக்காக நான் விட்டுக் கொடுத்துத்தானே ஆகணும்? நேத்து ராத்திரி அழுது தீர்த்துட்டேன்.''

''நான் பங்களாவுக்குப் போய் அழப் போறேன்.''

''வேணாம், காயத்திரி.''

''பின்னே சிநேகத்தை எப்படித்தான் முறிக்கிறது?''

என்னால் பதில் சொல்ல முடியவில்லை.

''ராம்!''

''உம்?''

''கையைக் கொடு.''

நீட்டினேன். பற்றி முத்தம் அளித்தாள். மூக்குக் கண்ணாடிக்குப் பின்னே மை பூசிய கண்களில் நீர் துளித்தது.

''நான் வரேன், ராம்!'' சென்றாள்.

மரமாகி நின்றேன்.

(முற்றும்)



பழைய ஷேவிங் பிரஷ் வீட்டில் இருந்தால் தூர எறிந்து விடாதீர்கள். ஃபேன், ரெகுலேட்டர், கதவு, ஜன்னல் க்ரில், டி. வி. போன்றவற்றின் இடுக்குகளில் படியும் தூசியைச் சுத்தம் செய்யலாம்.

- அகிலா

# சாதனை புரிந்த மகன்;

சென்னை திருவான்மியூரைச் சேர்ந்த 12 வயது சிறுவன் கிரி 6 மணி நேரத்திற்கு மேல் நீரில் மிதந்து சாதனை புரிந்துள்ளான். இது கின்னஸில் இடம்பெறக்கூடிய சாதனை. இந்தச் செய்தி எல்லா தினத்தாள்களிலும் வந்து எல்லோரையுமே வியக்க வைத்தது உண்மையே.

எந்த ஒரு தாயுமே தன் குழந்தையை 'மழையிலே நனையாதே. தண்ணியிட்டே போகாதே' எனத் நொண நொணவென சொல்லிக் கொண்டிருக்கும் தாய்மார்களிடையே தன் ஒரே மகனை - அதுவும் 12 வயதே ஆன சிறுவனை நீரில் 6 மணி நேரம் மிதக்க எப்படி அனுமதித்தார் என்ற வியப்புடன் கிரியின் தாயார் திருமதி. உஷா முத்து கிருஷ்ணன் அவர்களைச் சந்தித்தோம்.



# சந்தோஷிக்கும் தாய்!

இவர் ஒரு புகழ்பெற்ற மருத்துவர்.

"எனக்கு நீந்தத் தெரியாது. சிறிய வயதில் கற்றுக் கொள்ள முடியவில்லையே என்ற ஆதங்கம் எனக்கு நிரம்ப உண்டு. அவசியமாகத் தெரிந்து கொள்ள வேண்டிய கலைகளில் மிகவும் முக்கியமானது நீச்சல் என்பது என் எண்ணம். கலை, கல்வி, மொழிப் பயிற்சி - இப்படி எதுவானாலும் அதை இளம் வயதிலேயே கற்றுக் கொண்டு விட வேண்டும். வயது கூடிய பின்பு எத்தனையோ வேலைகள் - கவலைகள். இவைகளைக் கற்க நேரமேது? என்னால் இளம் வயதில் கற்றுக் கொள்ள முடியாத நீச்சல் பயிற்சியை என் குழந்தைகளுக்குத் (ஒரு மகன், ஒரு மகள்) தர வேண்டும் என எப்போதோ தீர்மானம் செய்து விட்டேன்.



கடந்த ஏப்ரல் மாதம் விடுமுறையின் போதுதான் ஹரியை நீச்சல் பயிற்சியில் சேர்த்தோம். அவனுக்கு இதில் அதிக விருப்பமும், திறமையும் இருந்தது தெரியவந்தது. இவனுக்குப் பயிற்சி தரும் 'கோச்' திரு. வீரமுத்துவை கடலிலேயே பிறந்து வளர்ந்தவர் என்றே சொல்லலாம். ஆம்! அவர் ஒரு மீனவ குடும்பத்தைச் சேர்ந்தவர். சென்ற மார்ச் மாதம் கோல்டன் பீச்சிலிருந்து கண்ணகி சிலை வரை 25 கிலோ மீட்டர் தூரத்தை நீந்திக் கடந்தவர். இதே போல நீரில் மிதக்கும் கலையிலும் வல்லவர். இடைவிடாமல் நீரில் 10 மணி நேரம் நீரில் மிதந்து சாதனை செய்தவர். ஹரி நீச்சல் பயில ஆரம்பித்த கொஞ்ச காலத்திலேயே அவனுக்கு மிதப்பது வெகு எளிதாக வருகிறது என்று சொல்லி அதிலும் பயிற்சி தர ஆரம்பித்தார். தன் மகனைப் போல எண்ணி என் மகனுக்குப் பயிற்சி தரும் 'கோச்'சின் மீது உள்ள வெகுவான நம்பிக்கையும் - பகவான் பாபா விடம் உள்ள பக்தியும் நம்பிக்கையுமே எனக்கு உறுதியையும், துணிவையும் தந்தது. என் வாழ்க்கையில் பகவானின் அருள் ஒவ்வொரு கட்டத்திலுமே உண்டு. இன்று என் மகன் தன் 'கோச்'சைப் போலவே சாதனைகள் பல செய்ய வேண்டுமென எண்ணுகிறான்.

நீச்சல் உடலுக்கு மிகவும் சிறந்த பயிற்சி என்பது நம் அனைவருக்குமே தெரிந்தது தானே? இதைப் பயில ஆரம்பிக்கு முன்பு என் மகன் சரியாகச் சாப்பிட மாட்டான் - சாப்பிட ரொம்பவுமே அடம்பிடிப்பான். ஆனால் இது துவங்கிய பின்பு நன்கு பசி எடுப்பதால் தொல்லைப்படுத்தாமல் சாப்பிடுகிறான். அவன் படிப்பிலும் கெட்டிக்காரன்தான். அவன் நன்கு படிப்பான் என்ற நம்பிக்கை எப்போதுமே உண்டு. அதனால் அவனை நான் ரொம்பவும் 'படிபடி' என வற்புறுத்துவதில்லை.

வாழ்க்கை நன்கு அமைய கல்வி மிகவும் அவசியமான தேவைதான். ஆனால் எல்லா குழந்தைகளுமே, எப்போதுமே முதல் ரேங்க் வாங்க முடியுமா? யார் யாருக்கு எதில் திறமை இருக்கிறதோ அதில் முன்னணியில் வரட்டுமே? 'எக்ஸ்ட்ரா கரிகுலர்' - பற்றிய எண்ணமே ஏன் பெற்றோர்களில் பலருக்கு நினைவில் வருவதில்லை? குழந்தையின் விருப்பமும், திறமையும் அறிந்து அத் துறையில் தேவையான பயிற்சிகளைத் தர வேண்டியது பெற்றோர்களின் கடமையில்லையா? இதை ஒரு தாயாக மட்டுமல்லாமல் ஒரு மருத்துவராகவும் இருந்து சொல்கிறேன். நீச்சல் பயில ஆரம்பிக்கு முன்பு ஹரிக்கு சளித் தொல்லை அடிக்கடி வரும். ஆனால் இப்போது அது அறவே இல்லை. என் கணவரின் பெரும் ஒத்துழைப்பும், ஆலோசனையும் ஹரியின் இந்தச் சாதனைக்கு முக்கிய காரணம். ஹரி படிக்கும் 'இந்து சீனியர் செகண்டரி' பள்ளியின் முதல்வர் திரு. வெங்கடாசலம் அவர்கள் ஹரியின் பயிற்சிக்குத் தேவையான அளவு விடுமுறை தந்து ஊக்குவிக்கிறார். தேர்வுகள் எழுதுவதிலிருந்து கூட விலக்களித்திருக்கிறார். குழந்தைகளின் திறமைகளைக் கண்டறிந்து அதில் சிறப்புப் பயிற்சி தருவதை தங்களின் புத்தாண்டு தீர்மானமாக பெற்றோர்கள் ஏன் கொள்ளக் கூடாது?

நீச்சல் தெரியாத எனக்கு இன்று தண்ணீரில் ஏதாவது விபத்து நேர்ந்தாலும் கூட என் மகன் நிச்சயம் என்னைக் காப்பாற்றுவான் என்ற நம்பிக்கை உள்ளது'' என்று புன்முறுவல் பூத்தார் அந்தத் தாய். அதில்தான் எத்தனை உறுதி, பெருமை?!

– வைதேகி தேசிகன்

# கண்ணுக்குத் தெரியாத காயங்கள்



ஸ்கூட்டரில் போகிறோம், கீழே விழுந்து அடிபடுகிறோம். 'சின்ன சிராய்ப்புதான், ஒண்ணும் இருக்காது' என்று போய் விடுகிறோம். ஸ்கூட்டர் என்று இல்லை பெரியவர்களோ, குழந்தைகளோ பல இடங்களில் தடுக்கி கீழே வாய்ப்புண்டு. கண்ணுக்குத் தெரிந்த காயத்திற்கு மருந்து போடுவோம், ஆறிவிடும். ஆனால் வெளியில் தெரியாமல் உள்ளே நரம்பு, எலும்புகளிலோ, மூளையிலோ அடிபட்டு இருக்கலாம். இத்தகைய காயங்கள் ஆபத்தானவை. கீழே விழுந்து அடிபட நேர்ந்தால் டாக்டரிடம் காட்டி முறையாக பரிசோதித்துக் கொள்வதுதான் நல்லது. இதைப் பற்றி இரண்டு நிபுணர்கள் கூறுகிறார்கள் :

## டாக்டர். ஜி. கிருஷ்ணமூர்த்தி

(எலும்பு வைத்திய நிபுணர்) :

"சாதாரணமாகக் கீழே விழும் போது பலமாகப் படும் அடிகளையும் எலும்பு முறிவுகளையும், நாம் கண்களால் சுலபமாகப் பார்க்கக் கூடிய காயங்களையும் உடனடியாகக் கவனித்து விடுகிறோம். ஆனால் சில சமயம் கீழே விழும் போது

4 தம்ளர் அரிசி,
3/4 தம்ளர் பயற்றம்பருப்பு,
3/4 தம்ளர் கடலைப்பருப்பு
அனைத்தையும் இலேசாகச்
சூடு பண்ணி மிஷினில் அரைத்து
வைத்துக் கொண்டால் முள்ளு முறுக்கு,
தேன்குழல், ரிப்பன் பக்கோடா, தட்டை,
பஜ்ஜி கூடச் செய்யலாம். (தேவையான
உப்பு காரம் இணைத்து) டால்டாவோ,
எண்ணெயோ ஊற்றிப் பிசைய
வேண்டாம். கரகரவென்றிருக்கும்.
- யோகாம்பாள்

இடுப்பெலும்பிலோ, முதுகெலும்பிலோ (வெளியில் தெரியாத) ஊமைக் காயங்கள் ஏற்படலாம். ஆனால் நாம் அதைக் கவனிக்கத் தவறி விடுகிறோம். அதனால் பல மாதங்கள் கழித்து கூட முன்பு அடிபட்ட இடத்திலேயே பலமான வலி உண்டாகக் கூடும்.

பெரியதாக எலும்பு முறிவு ஏற்பட்டிருந்தால் எலும்புகள்தான் இயல்பாக உள்ள உருவில் சிறிது மாறுபட்டு இருக்கும். வலி பல மாதங்கள் கழித்துத் தொடர்ந்து பல நாட்கள் இருக்க இதுதான் முக்கிய காரணமாகும். இதுபோன்ற வலி தொடர்ந்து இருந்தால் நிச்சயம் எலும்பு வைத்திய நிபுணரை நாட வேண்டியது அவசியம். (இதில் முதுகெலும்பு, மார்புக் கூடு, இடுப்பெலும்பு போன்றவைகள் அடங்கும்) குறிப்பாக வயதானவர்களுக்குக் கீழே விழும் போது நிச்சயம் இடுப்பெலும்பு பாதிக்கப்பட வழி உண்டு. (தொடர்ந்து வலி இருக்க இதுதான் காரணம்) அதை அப்படியே கவனிக்காது விட்டால் வெகு சீக்கிரமே அடிபட்ட இடத்தில் 'ஆர்த்தரைடிஸ்' ஏற்படக்கூடும். இடுப்பெலும்பில் அறுவை சிகிச்சையும் செய்ய நேரிடும். வலியும் குறையாது தொடரும். தக்க வைத்தியம் உடனே செய்து கொள்ள வேண்டும்.

## டாக்டர். பேராசிரியர் கல்யாணராமன்

(நரம்பியல் நிபுணர்) :

ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள் போன்ற வண்டிகளில் இரண்டு பேருக்கு மேல் போகவே கூடாது. நம் சாலைகளைப் பற்றி எதுவுமே சொல்ல வேண்டியதில்லை. போக்குவரத்து நெரிசலும் மிகவும் அதிகம். எதிர்பாராத குறுக்கீடுகளுக்கு அளவே கிடையாது. இந்த நிலையில் இதுபோன்ற வண்டிகளில் மிகவும் அலட்சியமாக, எதையும் பிடித்துக் கொள்ளாமல் கால் மேல் கால் போட்டபடி (சிலர்) குழந்தை ஒன்றையும் மடியில் வைத்து ஒரு கையால் வளைத்தபடி போகிறார்கள். இந்தப் பெண்களைப் பார்க்கும் போது உண்மையிலேயே நிலைமை தெரிந்துதான் இப்படிச் செய்கிறார்களா? இல்லை அறியாமையா? என்று எனக்குச் சந்தேகம் வரும். இரண்டே பேர் மட்டுமே

பண்டிகைக் கோலம்
காவி பூச வாசலே அழகு பெறும்.
17 - 1 வரை; 8 - 1 வரை : இடுக்குப் புள்ளி



- சுலோச்சனா சந்தானம்

தோசை மிளகாய்ப் பொடி நாள் கடந்து போய் மணமில்லாமல் இருக்கிறதா? கவலையை விடுங்கள். சாப்பிடும் போது மிளகாய்ப் பொடிக்கு மேல் சற்று பெருங்காயத் தூளைத் தூவி எண்ணெய் விட்டுக் கலந்து கொண்டு அதைத் தொட்டுச் சாப்பிட்டுப் பாருங்கள். தோசைப் பொடி அன்றே காலியாகிவிடும். பூண்டு மணம்பிடித்தவர்கள் பூண்டை நசுக்கியும் மணம்சேர்க்கலாம்!

- ரமணி ரங்கநாதன்

போகக்கூடிய இந்த வண்டிகளில் கணவன், மனைவி, 2 அல்லது 3 குழந்தைகளையும் சேர்த்துப் பார்க்கும் போது... காலை ஊன்றி, ஊன்றி 'பேலன்ஸ்' செய்யும் அந்த வாகன ஓட்டியான குடும்பத் தலைவன் உண்மையிலேயே ஒரு தலைசிறந்த 'சர்க்கஸ்காரன்'தான்.

மூளையினுள் படும் காயங்களை மூளையால் உணர முடியாது. மூளைக்குள் எந்தவித உணர்ச்சி நரம்புகளும் கிடையாது. அதனால் வலியும், வேதனையும் தெரிவதில்லை. அழுத்தம் அதிகமாகி வெளிப்படும் போதுதான் விளைவுகள் தெரியும். 'டிரோமேடிக் அம்னீஷியா' என்ற ஒருவகை மறதி தலையில் அடிபட்டவுடன் சிலருக்கு ஏற்படும். விபத்து நடப்பதற்கு ஒருசில நிமிடங்களுக்கு முன்பே நடந்தவைகள் கூட மறந்து விடும். சிலருக்கு அரை மணி நேரத்திற்குள் இந்த மறதி மாறி நினைவு திரும்பி விடும். சிலருக்கு இது மாதக் கணக்கிலும் நீடிக்கும். பட்ட காயத்தின் அளவைப் பொறுத்துதான் நினைவு திரும்புவது - ஆனால் மறதி அதிக நாட்கள் நீடித்து பின்பு நினைவு திரும்பினால் ஓரளவு நினைவுதான் திரும்பி வரும்.

தலையில் எலும்பு முறிவு ஏற்பட்டால் தனி சிகிச்சை எதுவுமே தேவையில்லை. அடிபட்ட இடம் தலை எலும்பின் அடி பாகமானால் காது, மூக்கு வழியாக மூளையைச் சுற்றியுள்ள நீர் வெளியே வரும். இதைக் கவனிக்காது விட்டால் (மூக்கை உறிஞ்சும் போது) கிருமிகள் உள்ளே போய் பரவி, சீழ் பிடித்து 'மெனின்ஜைடிஸ்' போன்ற விளைவுகள் ஏற்படலாம். இந்தப் போக்கு அதிகமிருந்தால், மூளையில் அழுத்தம் கொடுத்து பக்கவாதம் போன்ற நோய்களால் பாதிக்கப்படுவதுடன் உயிருக்கும் ஆபத்து ஏற்படும்.

வண்டியிலிருந்து விழுவது மட்டுமல்லாமல் குளியலறை, மாடி போன்ற இடங்களிலிருந்து விழும் போது தலையில் அடிபட்டாலும் உடனடியாக மருத்துவரை அணுக வேண்டும். உடனே தெளியாத மயக்கம், பேச்சு பாதிக்கப்பட்ட நிலை, பக்கவாதம், காது மூக்கு வழியாக நீர், ரத்தம் வெளிவருதல் எதுவானாலும் மருத்துவமனையில் உடனேயே சேர்த்து விட வேண்டும். தேவையான பரிசோதனைகள் செய்யப்பட வேண்டும். வலிப்பு ஏற்பட்டால் EEG எடுக்க வேண்டும். குறைந்தபட்சம் 72 மணி நேரம் பாதிக்கப்பட்டவரைக் கண்காணிக்க வேண்டும். இந் நேரத்திற்குள் மயக்கமோ, வாந்தி, வலிப்பு, விடாத தலைவலி, பேச்சு மாறுதல் என ஏதாவது தொடர்ந்து இருந்தால் நரம்பியல் நிபுணரை நாடி தேவைப்பட்டால் 'ஸ்கேன்' செய்து பார்க்க வேண்டும். விபத்து நடந்த 72 மணி நேரத்திற்குள் மேலே குறிப்பிட்டுள்ள ஏதாவது ஒன்றிரண்டு (விடாத தலைவலி, வாந்தி போன்றவை) இருந்து கவனிக்காது விட்டு விட்டால் பல வாரங்கள் கழித்து ஒரே தூக்கம், மயக்கம், பக்கவாதம் போன்றவை வரலாம். ஆனால் பக்கவாதம் கொஞ்சம், கொஞ்சமாகத்தான் வரும். அதனால் தேவைப்பட்டால் 'ஸ்கேன்' செய்யலாம். அடிபடும் எல்லோருக்குமே ஸ்கேன் செய்வது என்பது தேவை இல்லை.

அடிபட நேரும் சமயம் தண்டுவடம் பாதிக்கப்பட நேருவதும் உண்டு. தண்டுவடத்தின் மேல் பகுதி பாதிக்கப்பட்டால் 2 கால்கள், 2 கைகள் எல்லாமே செயலிழந்து போகும். தண்டுவடத்தின் கீழ்ப்பகுதியில் அடிபட்டால் கால்கள் (இடுப்பிற்குக் கீழ்ப் பகுதி) செயலிழந்து போகும்.

விபத்துக்குப் பிறகு விபத்துக்குட்பட்டவர் மயக்கமாகவோ, பேச்சு மாறி உளறினாலோ அது குடி மயக்கத்தினால் என எண்ணக் கூடாது. மூளையில் அடிபடுவதால் இதுபோன்ற மாறுதல்கள் ஏற்படும். தலையில் படும் எந்த அடியும் உடனடியாகக் கவனிக்கப்பட வேண்டும் என்பதை மனதில் கொள்ள வேண்டும்.

சந்திப்பு : **வைதேகிதேசிகன்**

# நாகியின் தேசசேவை

நன்கு அயர்ந்த தூக்கத்திலிருந்த பாகியைத் தொலைபேசி அழைத்தது. கண் திறந்த பாகி ராமநாதனை நோக்கினாள். 'சே, என்ன மனுஷன், டெலிபோன் அடிப்பது கூடத் தெரியாமல்' என அலுத்த வண்ணம் சின்ன விளக்கின் ஒளியில் மணியைப் பார்த்தாள்.

''யார் இந்த நேரத்தில் உயிரை எடுப்பது'' என சலித்தவாறே 'ஹலோ' எனக் கூற மறுமுனையிலிருந்து, ''ஹாய் பாகி, நான்தான் நாகி பேசறேன். எப்படி இருக்கே தூக்கத்தை கெடுத்து விட்டேனா?'' பாகியின் உடல் தெம்பில் நிமிர்ந்தது. ''ஹலோ' நாகி, நீயா, நூறு ஆயுசு. நீ எப்படி இருக்கே. நான் ஏதோ இருக்கேன். நான் எங்க அதுக்குள்ள தூங்குவது. அது கிடக்கட்டும். என்ன விஷயம் சொல்லு.''

''எப்படி சொல்றதுன்னு தெரியலை பாகி, மனசே ரொம்ப சரியில்லை. அதான் போன் பண்ணினேன், உனக்கு அந்த ரிபெர்காவை ஞாபமிருக்கா?''

''ரிபெர்கா! ஆம்... அந்த ஆறடி அமெரிக்க பொம்பளை. அவளுக்கென்ன இப்போ?''

''அவ என்னை பத்து பேர் முன்னாடி அவமானமா பேசிட்டா.''

''என்ன சொன்னா?''

''அவ சமீபத்தில இந்தியா வந்தா இல்லையா. அவ போகறதுக்கு முன்னாடி நாம் நம்ம இந்திய கலாச்சாரம் புகழ்பெற்ற இடங்கள், உணவு வகைகள் இதையெல்லாம் சொல்லி அனுப்பினேன்.''

''அதற்கென்ன?''

''அவளுக்கு இந்தியாவின் சுகாதாரக் குறைவு பேரதிர்ச்சியை தந்ததாம். உடன் வந்தவர்களுக்கு உடம்புக்கு வந்து விட்டதாம். இவளும் சீக்கிரமே அமெரிக்கா திரும்பி விட்டாளாம். வந்தவள் சும்மா இருக்கக் கூடாதா? எல்லோர் முன்னாலும் இந்தியாவிற்கு சுகாதாரம் தெரிய வேண்டும். அதற்குப் படித்தவர்கள் கொஞ்சம் சமூக சேவை செய்யலாமே என நம் தாய் நாட்டை இவள் குறைகூறுகிறாள்'' என்ற நாகிக்கு வருத்தத்தில் தொண்டை கம்மியது. சற்று தண்ணீர் குடித்துத் தொடர்ந்தாள்.

''நீ அதுக்காக அப்செட் ஆகாதே. நான் நல்லா திருப்பிக் கேட்டு விட்டேன். உலகிலேயே ஆண்கள் திருமணம் செய்து கொள்ள விரும்புவது ஜப்பானிய பெண்களையும், இந்தியப் பெண்களையும்தான். ஏனெனில் அவர்கள் பண்புகள் கூடியவர்கள். சகிப்புத் தன்மை கொண்டவர்கள். வாழ்க்கைக்கு நல்ல குணங்கள் முக்கியம். ஆகவே, எங்களுக்கு அகச் சுத்தம் அதிகம் என்று சொல்லி விட்டேன். இருந்தாலும் ஊர் வாய் நம் நாட்டின் சுகாதாரத்தைக் குறைகூறும் பொழுது என் நெஞ்சு பொறுப்பதில்லை. நான் அங்கு இருந்தாலாவது ஏதாவது என்னால் ஆன முயற்சிகளைச் செய்வேன். இப்பொழுது அதற்கும் வழியில்லை'' என உருக, பாகிக்கு சுரீர் என உரைத்தது.

நாமெல்லாம் இங்கு இருந்து கொண்டு நம் தாய் நாட்டிற்காக உடன்பிறந்த சகோதர சகோதரிகளுக்காக என்ன செய்தோம், இப்படி வாழ்நாட்களை வீணாக்கி விட்டேனே. இனியாவது நம் நாட்டிற்காக நாம் ஏதாவது செய்ய வேண்டும் என்ற எண்ணம் உள்ளத்தில் கொப்பளிக்க,

''நீ எதுக்காக நான் இருக்கும் பொழுது இப்படிப் பேசறே. நீ செய்வதை நான் செய்ய மாட்டேனா. நீ வேற நான் வேறயா. நாளையிலிருந்து நான் நம் வீட்டுக்கு அருகாமையில் இருக்கும் குடிசைவாழ் பகுதிக்குச் சென்று என் சமூக சேவையை உன் சார்பில் செய்வேன். அடுத்த முறை ரிபெர்க்கா வருவதற்குள் நம் நாட்டையே மாற்றி விடுவேன். ஜெய் பாரதமாதா'' என உணர்ச்சிவசத்தில் சூளுரைக்க தூக்கத்தில் ஓட்டு

டாக்டர் கமலிஸ்ரீபால்





கேட்டுக் கொண்டிருந்த ராமதாஸின் காது களில் அபாயச் சங்கு ஒலித்தது.

மறுநாள் மாலை நான்கு மணி அளவில் அவசர கூட்டமாக மாதர் சங்க அங்கத்தினர் கள் பாகியின் வீட்டில் கூடினர். மிக்ஸர், ஸ்வீட், ஜூஸ், காப்பி உபசாரங்களுக்குப் பிறகு நாட்டு மக்க ளின் பெரும் பகுதி யினர் வறுமைக்கோட் டின் கீழ் இருப்ப தனைப் பற்றியும், அத னால் அவர்கள் சுகா தாரக் குறைவும், ஆரோக்கியக் குறைவு மாய்க் காணப்படுவதைப் பற்றியும் காரசார விவாதங்கள் நடந்தன. மாதர் சங்க செக ரட்டரி பேசினார், ''அப்ப நீங்க என்ன செய் யணும்கறீங்க, நம்ம சங்கத்திலிருந்தும் அவ் வப்போது உணவு அளித்தல், புடைவை வழங்குதல் போன்றவற்றைச் செய் வோமே.''

பாகி இடைமறித்தாள். ''அது நூறோடு நூற்றி ஒன்று என்றாகி விடும். நாகியும், பாகியும் ஈடுபடும் செயல் என்றால் அது சாதாரணமாக இருக்கலாமா. வித்தியாசம் தெரிய வேண்டாமா. ஆகவே, வரும் பொங் கலுக்குள் அருகில் இருக்கும் குடிசைவாழ் பகுதி மக்களின் வீடுகளுக்கு வெள்ளை அடிப்போம். முடிந்தவர்கள் ஆளுக்கு ஒரு பெண்ணையோ, பிள்ளையையோ வீட்டில் கொண்டு வந்து வளர்ப்போம். வீட்டுக்கு தென்னை மரம், தேக்கு மரக் கன்றுகள் கொடுப்போம். நோயாளிகளுடன் அமர்ந்து ஆறுதலாகப் பேசுவோம். பாவாடை, கைக் குட்டை தைக்க கற்றுக் கொடுத்து அதன் மூலம் வருமானம் பெறச் செய்வோம்'' என திட்டங்களை நீட்டினாள். சமூக சேவைத் திலகங்கள் ப்ளாரன்ஸ் நைட்டிங்கேலை யும், அன்னை தெரசாவையும் அங்கத்தினர் கள் பாகியின் பேச்சில் கண்டனர்.

இரண்டு பர்லாங் தள்ளியிருந்த குப்பம் பாகி குழு சமூக சேவை செய்யும் இட மாக தேர்ந்தெடுக்கப்பட்டது. ராமதாஸு டன் அவ்விடத்தை தொலைவிலிருந்து காணச் சென்ற பாகி சற்றே அஞ்சினாள். சுற்றும் முற்றுமாக குப்பைகளும், சுகாதார வசதி இன்மையும், அதிக கொசுத் தொல் லையும் பாகியை அச்சுறுத்தின. ரிபெர்க்கா சொன்னது சரியே என உள் மனம் கூறியது. பேசத் தெரியாமல் பேசி சங்க அங்கத்தி



வர்களிடம் மாட்டிக் கொண்டு விட்டோமே எனக் கூடத் தோன்றியது. அருகிலிருந்த ராம தாஸைப் பார்த்து,

''ஏங்க இதெல்லாம் சரிபடும்னு எனக்குத் தோணலை. போய் விடுவோமே'' எனக் கூறினாள்.

ராமதாஸின் உள்மனதிலோ கொள்ளை மகிழ்ச்சி. 'வீட்டில் ஒரு வேலை செய்ய என்ன ஆட்டம். எங்கம்மாவை என்ன பேச்சு பேசியிருப்பாய். அதற்கெல்லாம் பட வேண்டிய காலம் வந்து விட்டது. பெண்ணே!' என நினைத்தவாறே, ''இதெல்லாம் ஒரு பயமா, நாலு பெண்கள் வந்து தினமும் அவர்களே சுத்தம் செய்ய முற்பட்டால் இவர்களெல்லாம் ஒருசில நாட்களில் தானே மாறி விட மாட்டார்களா. அதற்கு முன் மாதிரியாக நாளையிலிருந்து நீ கூட வந்து ஆரம்பிக்கலாமே'' என் விவரிக்க பாகிக்கு தான் பரிவாங்கப்படுகிறோம் எனப் புரிந்தது. இருப்பினும் அதனை

இப்பொழுது காட்டிக் கொண்டால் வழியேது. எனவே, கெஞ்சிய குரலில்,

''என்னங்க நான் யார் பொண்டாட்டி. திரு. ராமதாஸ் மனைவி. நான் செய்யும் சேவை என்றா வெளியில் பேசுவார்கள். உங்கள் பெயரைத்தானே பேசுவார்கள். அப்படியிருக்க இந்த சேவை சிறப்புற நடைபெற உங்களை விட்டால் எனக்கு யாரிருக்கிறார்கள்'' என கண்ணை கசக்க ராமதாஸ் ஐஸாய் உருகினார். 'எப்படி இதனை சுத்தம் ஆக்குவது' என யோசனையில் ஆழ யோசனை பிறந்தது.

''பாகி, உன் மாதர் சங்க அங்கத்தினர்களில் ஒரு இருபது பேராவது கார் வைத்திருப்பாங்களா?''

''மேலவே இருக்கும் ஏன்?''

''இல்லை, ஒரு நாலு நாட்கள் உங்க அங்கத்தினர்கள் காலை, மாலை வேலைகளில் வண்டிகளில் வந்து இங்கு ஒரு ஐந்து. ஐந்து நிமிடங்கள் நின்று போகட்டும், மற்ற விவரங்களை பிறகு சொல்கிறேன்'' என்றார்.

பாகிக்கு எதுவும் புரியவில்லை. இருப்பினும் வாழ்க்கையில் முதல் முறையாக கணவனின் சொல்படி நடக்க முற்பட்டாள். அதன்படி மாதர் சங்க அங்கத்தினர்களில் அநேகர் நேரம் கிடைத்தபொழுதெல்லாம் காரில் சென்று குப்பத்தின் அருகே நின்று திரும்பினர்.

நான்கு நாட்களில் குப்பமே பரபரத்தது. 'யாரு இவுங்க?' 'தேர்தல் வருதா? யாராவது செத்துட்டாங்களா?'. 'புயல், மழைக்கு ஏதாவது உதவி வருமோ என்ற பேச்சுக இடையே திடீரென ஒரு புரளி கிளம்பியது. சுகாதாரமற்ற நிலையில் உள்ள இந்தக் குப்பத்தை அப்புறப்படுத்தப் போகின்றார்கள் என்ற வதந்தி காட்டுத் தீயாக பரவியது. அவ்வளவுதான். இரண்டே நாட்களில் குப்பம் பளிச்சிட்டது. திடீரென தோன்றிய சுகாதாரம் யாரோ ஓர் முக்கிய பிரமுகரின் வருகைக்காக என கருதப்பட்டதால் ப்ளீச்சிங் பவுடர் தூவப்பட்டு, கொசு மருந்துகள் அடிக்கப்பட்டு கூடுதல் சிறப்பு பெற்றது. பொது மக்களும், மற்றோரும் யார் காரணம் என அறியும் ஆவல் கூடிக் கொண்டே செல்ல ராமதாஸ் குப்பத்திற்குச் சென்றார். மக்களை திரட்டினார்.

''நீங்கள் நல்வாழ்வு காண வேண்டுமென ஒரு மனம் உறுதி கொண்டதன் காரணமே இக்குப்பம் ஆரோக்யமடைந்தது. யார், யார் என நீங்கள் அறிய ஆவலாய் இருக்கும் அப் பெண்மணி, சமூக சேவகி இன்று மாலை உங்களை வந்து நேரில் சந்தித்துப் பேசுவார். உங்கள் குறைகளை நீக்கி வைப்பார்'' என முன்னறிவிப்பு செய்தார்.

மாலை ஐந்து மணி, குப்பம் வண்ண காகிதக் கொடிகளாலும், கோலங்களாலும் அழகு செய்யப்பட்டது. மைக் செட்டுகளும் காதைப் பிளக்கும் பாட்டுச் சத்தங்களும் அமர்க்களப்பட்டன. வேகமாய் வந்த பல கார்களில் நடு காரிலிருந்து இறங்கிய பாகி சுற்றுமுற்றும் பார்த்து சற்று ஏமாற்றமடைந்தாள். ஒரு போட்டோகிராபர் இருந்திருக்கலாமே 'வாராயென் தோழி, வாராயோ' என்ற பாடல் கால சம்பந்தமின்றி ஒலிக்க பாகி குப்பத்தினுள் நுழைந்தாள். சோடா, கலர் போன்ற பானக வகைகளால் உபசரிக்கப்பட்டாள். மனத்தில் விரைவில் சமூக சேவைக்கான ஜனாதிபதி பரிசு பெறும் காட்சி கண்முன்னால் ஓடியது.

ராமதாஸ் மக்களுக்கு விவரித்தார். ''ரோபோ புகழ், விண்வெளி புகழ் திருமதி. பாகி அவர்கள் இப்பொழுது தன்னை சமூக சேவைக்காக அர்பணித்துக் கொள்கிறார்கள். உங்களுக்கு பல செயல் திட்டங்களைச் செய்ய முன்வந்துள்ளார்கள். ஆக நாம் அனைவரும் ஒன்றுகூடி திருமதி. பாகி அவர்களின் கைகளை வலுப்படுத்துவோம்'' என சொற்பொழிவாற்றினார்.

பாகி மக்களோடு மக்களாகக் கலந்தாள். மாதர் சங்கமும் மகிழ்ச்சியில் திளைத்தது. தன் முதல் கட்ட அறிவிப்பாக ''எங்கள் சங்க அங்கத்தினர்களின் வீடுகளில் உதவிக்காக பணிபுரிய முன்வருபவர்களை நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம். உங்களை அன்போடும், பாசத்தோடும் நடத்தும்படி பார்த்துக் கொள்வேன். மூன்று வேளை உணவும், கணிசமான மாதச் சம்பளமும் கிடைக்கும்.

---

உங்கள் எதிரிகளைத் தாராளமாக மன்னியுங்கள். உண்மையில் உங்கள் மன்னிப்பை விட அவர்களை உறுத்தக் கூடியது வேறு எதுவும் இல்லை. மிகத் தாராளத்துடன், அன்புடன் மன்னிக்கப்பட்ட எதிரிகள் உங்களுக்கே உண்மையான நண்பர்களாக மாறி விடுகிறார்கள்.

- சுவாமி சின்மயானந்தர்

தகவல் : ஆர். பி.





'டேட் எக்ஸ்பயரி' ஆன மாத்திரைகள் நிறைய சேர்ந்து விட்டால் அவற்றைத் தூக்கி எறிந்துவிட வேண்டாம். அம்மாத்திரைகளை எல்லாம் நன்றாகப் பொடி செய்து தண்ணீரில் கலந்து செடி கொடிகளுக்குத் தெளித்து விடலாம். இதனால் செடிகளுக்குப் பூச்சி, புழு வராமல் செடிகள் செழித்து வளரும்.

- அனுபல்லவி



இச் செயலின் மூலம் குப்பத்தின் வேலை யில்லாத் திண்டாட்டத்தை குறைக்க முற் படுவேன்'' என அறிவித்தாள்.

இதனைத் தொடர்ந்து மக்களிடமிருந்து சரமாரியான கேள்விகள் கேட்கப்பட்டன. நாங்க வேலை செய்யும் வீட்டில் கலர் டீ.வி. இருக்குமா? 'மாவாட்டும் மிஷின் அரைக் கும் மிஷின் வேண்டும். நான்கு பேருக்கு மேல் உள்ள குடும்பத்தில் இரண்டு ஆட் களை வேலைக்குச் சேர்த்துக் கொள்ள வேண்டும். வாரத்தில் இரண்டு நாட்கள் லீவு வேண்டும். 'தீபாவளி பொங்கலுக்குத் துணியும் சிறு சிறு பண்டிகைகளுக்கு ரூ. 50 வேண்டும்' என்ற பல உரிமைக் குரல்கள் ஒலிக்க மக்களின் விழிப்புணர்வும், பொது அறிவும் பளிச்சிட்டது.

மாதர் சங்க அங்கத்தினர்களிடையே எதிர்ப்பு கிளம்பியது. ''என்ன தைரியத்தில் இப்படி பாகி உறுதிகளை அள்ளி வீசுகிறாள். விலைவாசி பற்றி ஏதாவது ஞாபகம் இவ ளுக்கு இருக்கா, இல்லையா, நம் வீட்டுச் செலவை இவளா கொடுக்கப் போகிறாள். சமூக சேவை என்ற பெயரில் நம்மைத் திண்டாட வைத்து விடுவாளோ'' என குரல் கள் எழும்பின. இதனிடையே மாதர் சங்க செகரட்டரி பாகியை நோக்கி ''என்னதான் குப்பத்தை பளிச்சிட செய்தாலும்'' உங்க கையால இரண்டொரு செயல்களைச் செய் தால்தான் மக்களுக்கு பார்க்க திருப்தியாக இருக்கும். உங்க பேரிலும் நம்பிக்கை பிறக் கும்'' என்றாள். ''அதுக்கு என்ன செய்ய ணும்? மனத்தில் இடம்பிடிக்கிற மாதிரி டக்குனு செய்யணும் வராம்... ஒரு ஐடியா. அதோ அந்தக் குழந்தை பாருங்க ஒரே அழுக்கா இருக்கு. நீங்க அதை செல்லமா பேசி சோப்புப் போட்டு குளிக்க வைச்சு, அப்படியே அந்தக் குழந்தை சட்டையை துவைச்சுப் போடுங்க. அப்புறம் பாருங்க இந்த ஜனங்க எல்லாம் உங்க பக்கம்தான். யாரும் அசைக்க முடியாது.''

பாகிக்கு இவையெல்லாம் செயற்கை யாகவும், மிகையாகவும் தோன்றியது. சற்று சங்கடத்தில் நெளிந்தாள். இருப்பினும், வேறு வழியில்லை எனத் தோன்றியது. எனவே, அக்குழந்தையை அன்போடு அழைத்தாள். குழந்தையும் மிரள மிரள அருகே வந்தது. பாகி குழந்தையை ஆதர வாகப் பற்றியவாறு, ''நீ எவ்வளவு அழகா இருக்கே. ஆனா சுத்தமா இருக்க வேண் டாமா? அதனால ஆன்ட்டி உன்னை இப்போ குளிப்பாட்டிவிடப் போறேன்'' என்றவாறு அழைத்துச் செல்ல உடன் வந்த மற்ற அங்கத்தினர்களில் சிலர் வயதான மூதாட்டிகளுக்குத் தலைக்கு எண்ணெய் தடவி, பூச்சி நீக்கி, தலைவாரி முடித்தனர்.

ஒரு வழியாகக் குப்பத்தைவிட்டு விடை பெற்றபோது அங்கிருந்த பெண்கள் பாகியை நோக்கி, ''ஏம்மா, நாளைக்கு எத்தனை மணிக்கு வந்து பிள்ளைங்களைக் குளிப்பாட்டுவீங்க, வெயிலுக்கா வாங்க. இல்லாட்டி தண்ணி சிலுப்புல பிள்ளைங் களுக்கு சளி பிடிக்கக்குமே'' என்றனர்.

பாகிக்குத் திக்கென்றது. தினமும் பகலில் வந்து இப்படிக் குளிக்க வைக்க வேண்டுமா? ஆபீஸுக்கு யார் செல்வது? பிள்ளையார் பிடிக்கக் குரங்கான கதையாகி விடுமோ?' என அஞ்சினாள். வீடு திரும்பிய பாகியைப் பார்த்து அவளின் மாமியார் தோள்பட்டையில் இடித்துக் கொண்டார். 'மூனு நாள் முன்னாடி முழங்காலில் கொஞ்சம் வலி, எண்ணெய் தடவி வெந்நீர் ஊத்தி விடம்மான்னு கேட்டேன். அதற்கு நேரமில்லை. இப்படி அலையறதுக்கு பார்க்க மட்டும் நிறைய நேரம் இருக்காக் கும்!. எல்லாம் கலியுகத்தில தலைகீழாத் தான் நடக்கிறது' என காதில் தெளிவாய் விழும்படி முணுமுணுத்தார்.

சற்று நேரத்தில் தொலைபேசி அழைத் தது. ''ஹலோ, பாகி அம்மாங்களா? வணக் கம் அம்மா, நான் ஒரு பொதுநலத் தொண் டன். என்னைப் பத்திக் குப்பத்துல கேட்டுப் பாருங்க, பெருமையாப் பேசுவாங்க. உங்க ளுக்குத் தேவைப்படும்போது கல் எறிய

# OWNING HOME IN MADRAS IS NOW SIMPLER



## PROPOSED FLATS AT

| AKSHAYA | AISHWARYA | AASHIRWAD | ADITYA |
|---|---|---|---|
| 16 III Main Road, Nanganallur, Madras - 61 | Plot 1 & 2, 7th Main Road, Dhandeeswarar Nagar, Velacheri, Madras - 42 | No. 1, I lane, II Main Road, Trustpuram, Kodambakkam, Madras - 24 | 15/4, Jayammal St. Extn., Aminjikarai, Madras - 29 |

* ***SUITABLE TO YOUR BUDGET WE OFFER DELUXE FLATS AND VILLAS AT VARIOUS DECENT AREAS IN MADRAS***
* ***PAYMENT LINKED WITH THE PROGRESS AT SITE THROUGH INTEREST FREE INSTALMENTS OR CASHDOWN WITH 10% DISCOUNT.***
* ***FINANCE ARRANGED FROM LEADING FINANCIAL INSTITUTIONS***
* ***AESTHETICALLY, TASTEFULLY COMPLETED WITH ALL MODERN AMENITIES***
* ***TIMELY POSSESSION AND QUALITY CONSTRUCTION***

CREATORS

NOT JUST BUILDERS

## ASSOCIATED BUILDERS

II FLOOR, 26, RANGANATHAN STREET,
T. NAGAR, MADRAS - 600 017. INDIA.

✆ OFF : 440210 / 440224

Res : 2345244 Fax : 2344333

ணும், அடிக்கணும், பல்லை நொறுக்கணும், மறியல் செய்யணும்னா சொல்லுங்க. எல்லாத்துக்கும் என்கிட்ட ஆளு இருக்கு. மத்த யாரையும் நம்பாதீங்க. எல்லாம் திருட்டுப் பசங்க. நான் உங்களை கூடிய விரைவில் சந்திக்கிறேன்' போன் துண்டிக்கப்பட்டது.

விஷயம் அறிந்த ராமதாஸ் பாகியை அனுதாபத்துடன் நோக்கினார். ''ஒண்ணும் பதற்றப்படாதே பாகி. உலகம்னா நாலும் இருக்கத்தான் செய்யும். கொஞ்சம் பிரபலமாகி விட்டாலே இப்படித்தான். நீ அமைதியா இரு!'' என ஆசுவாசப்படுத்தினார். மறுநாள் காலையில் வீட்டு முன் ஒரு பெரிய கூட்டமே கூடி இருக்கவே பாகி வெளியே வந்தாள்.

'பாகி அம்மா வாழ்க' எனக் கூவிய கூட்டம் ஒன்றன் பின் ஒன்றாக பாகியை அணுகியது. கோழி திருடு நிகழ்ச்சியிலிருந்து, பலவித சண்டை பூசல்களைக் கேட்டுத் தீர்த்து முடிக்க மணி பதினொன்று ஆகியது. 'நம்மை விட்டால் எங்கு செல்வார்கள். அன்போடு நம்மை நம்பி வருகிறார்கள்' எனத் தேற்றிக் கொண்டாள். விரைவில் மாதர் சங்க அங்கத்தினர்களின் உதவியோடு முதியோர் கல்வி, தையல் கலை போன்ற நல வகுப்புகள் எப்படியோ நடக்க ஆரம்பித்தன. குப்பத்தின் முன்னேற்றத்திற்கே பாகியின் முழுநேர உழைப்பும் செலவாகியது. பாகி நாகிக்குக் கடிதம் எழுதினாள். 'நாகி, இப்பொழுதெல்லாம் நான் ரொம்ப டயர்டாக ஆகிவிடுகிறேன். சமைக்க, வீட்டைக் கவனிக்க எங்கே நேரம் இருக்கு? வீட்டு உதவிக்கு ஆள் தேடறேன். கிடைப்பது குதிரைக் கொம்பாய் இருக்கு. அப்படியே வந்தாலும் அவர்களின் சம்பளமும், தேவைகளும் நமக்குக் கட்டுப்படி ஆவதில்லை. இதற்காக நான் என் கடமைகளில் எந்தவிதக் குறைபாடும் வைப்பதில்லை. வீடு சுத்தம் செய்யும் மிஷின், துணி துவைக்கும் மிஷின் என எல்லாவற்றையும் மாமியாருக்கு வாங்கிக் கொடுத்துவிட்டேன். தேவைப்படும்பொழுது காசு செலவழிவதைப் பொருட்படுத்தாது ஹோட்டலில் வாங்கிக் கொள்கிறேன். நாட்டு முன்னேற்றத்திற்காக கஸ்தூரிபா அன்னை எத்தனையோ தியாகங்களைச் செய்யவில்லையா? அதனால்தான் எந்த ஒரு தொல்லையையும் பெரிதாய்ப் பொருட்படுத்துவதில்லை' என கடிதம் விவரித்தது. பாகியின் நேசப்பற்றினைக் கண்ட நாகி பெருமிதம் கொண்டாள்.

பாகிக்குப் பதில் கடிதம் எழுதினாள். 'நீ செய்யும் சேவைகளை நேரில் காணத்தான் எனக்குக் கொடுத்து வைக்கவில்லை. ஆகவே, ஏதேனும் ஒரு விழாவினைக் குப்பத்தில் நடத்தி அதனை வீடியோ கேசட் மூலம் இங்கு அனுப்பினால் நானும் பார்த்து மகிழ்வேன். ரிபெர்க்காவிற்கும் காண்பிப்பேன். இது என் கௌரவப் பிரச்னை. எனவே, அதிக கவனத்தோடு சிறப்பாய் நிகழ்த்தவும். விரைவில் உன் கேசட்டை ஆவலுடன் எதிர்பார்க்கும் அன்பு நாகி.'

கடிதத்தைக் கண்ட பாகி யோசனையில் ஆழ்ந்தாள். விழா என்றால் சாதாரணமா? நிதி திரட்ட வேண்டாமா? பல பெரிய மனிதர்களைக் கூப்பிட வேண்டாமா? நிகழ்ச்சிகள் நடத்த வேண்டாமா? பாகியின் பங்கு அதில் பளிச்சிட வேண்டாமா? மாதர் சங்க அங்கத்தினர்கள் கூடி விவாதித்தனர். இறுதியில் பொங்கல் தினம் விழா நாளாகக் குறிக்கப்பட்டது. மாதர் சங்க அங்கத்தினர்களும், குப்ப மக்களும் காலை முதல் மாலை வரை ஒன்றுகூடி இருந்து பொங்கலிட்டு விழாக்கள் நடத்துவது என முடிவாயிற்று. விழா நிகழ்ச்சிகளாக சர்வமத பிரார்த்தனை. முதியோர் கல்விக்கான வினாடி வினா போட்டிகள் நிகழ்த்துதல், என நிகழ்ச்சிகளின் பட்டியல் நீண்டு கொண்டே சென்றது.

பாகிக்கு இப்போது அவ்வளவு கடினமாகத் தெரியவில்லை. ஏனெனில் மல்லிகா என்ற நடுத்தர வயதுப் பெண்மணி வீட்டோடு இருந்து பாகிக்கு வீட்டின் கவலையே தெரியாமல் பார்த்துக் கொண்டாள். கிட்டத்தட்ட குடும்ப அங்கத்தினராகவே மாறிவிட்டாள். ஆயிற்று, கடந்த பதினைந்து நாட்களாய் பாகியும் ராமதாஸும் விழாவிற்காக அலையாய் அலைந்தாயிற்று.

---

பால் (BALL) ஐஸ்கிரீம் வாங்கும்போது, அந்த பந்துகளை எல்லாம் குழந்தைகளுக்கு விளையாட்டுச் சாமானாய்ப் போடாமல் அவற்றில் உ. பருப்பு, க. பருப்பு என்று போட்டு வைக்கலாம். டிரான்ஸ்பரண்டாக இருப்பதால் சுலபமாகக் கண்டுபிடிக்கவும் முடியும். (வேறு யாராவது உபயோகப்படுத்தும் போது) மேலும் அவற்றில் உப்பு, ஊறுகாய் என்று போட்டு வைத்து டைனிங் டேபிளில் வைத்தாலும் அழகாய் இருக்கும்.



- அனுபல்லவி

குறிப்பிட்ட நாளும் வந்தது. குப்பம் கல்யாண கோலம் பூண்டது. வீட்டில் பொங்கல் பானை வைக்கக் கூட நேரம் இல்லை பாகிக்கு. நாடு என்ற பரந்த மனப்பான்மை கொண்ட பிறகு வீடு என்ற குறுகிய வட்டத்தில் பொருந்த முடியுமா என மனதினைத் தேற்றிக் கொண்டாள். பல பத்திரிகை நிருபர்களும், சிறப்பு விருந்தினர்களும் பொது மக்களும் கூட, ராமதாஸே பாகியின் திறமையைக் கண்டு மகிழ்ந்து போனார்.

முதல் நிகழ்ச்சியாக சர்வமதப் பிரார்த்தனை ஆரம்பிக்க வேண்டி அதற்கான பாடல் பயிற்சி பெற்ற குப்பத்தைச் சேர்ந்த சிறுவன் ஆறுமுகத்தினை பலமுறை மேடைக்கு வருமாறு மைக்கில் அழைத்தனர். ஆறுமுகத்தினைக் காணவில்லை. பாகியின் அருகில் ஓடோடி வந்தாள் மாதர் சங்க அங்கத்தினர் கௌரி. "பாகி, அந்தப் பையன் மேடைக்கு வர ரொம்ப பயந்து போய் அழுறான். ஸ்டேஜ்-பியர். இதோ இன்னொரு பையன் நான் பாட்டுப் பாடறேன் என அவனாகவே முன்னுக்கு வந்துள்ளான், அவனைக் கூப்பிடவா?"

பாகிக்குக் கோபம். 'இதையெல்லாம் இவர்கள் முதலிலேயே கவனிக்க வேண்டாமா? எல்லாம் என் தலையில்தானா?' என மனத்ினுள் சலித்தவாறே, "சரி, சரி, சீக்கிரமா வரச் சொல்லு" என்றாள். மேடைக்குத் தைரியமாய் வந்த அந்தச் சிறுவன் திடீரென கை, கால்களை உதறியவாறு, 'சிக்கு, புக்கு, சிக்குபுக்கு ரயிலே என பாட ஆரம்பிக்க அவனைத் தொடர்ந்து பல சிறுவர்களும், இளைஞர்களும் மேடையை ஆக்கிரமிக்க விசில் சப்தங்கள் காதைப் பிளக்க பாகி செய்வதறியாது திகைத்தாள். ஒரு வழியாய் அவர்களைக் கட்டுப்படுத்திய பிறகு அடுத்த நிகழ்ச்சியாக முதியோர்க்கான பொது அறிவு விவாதி விவா நிகழச்சி துவங்கியது. ஓய்வுபெற்ற ஆசிரியர் ஒருவர் கேள்விகளைக் கேட்கத் துவங்கினார்.

"உங்களுக்குத் தெரிந்த இந்தியப் பிரதமரின் பெயரைச் சொல்லவும்."

'காந்தி மகான்," "எம். ஜி. ஆர்."

ஆசிரியர் கெட்டிக்காரர். சமாளித்தார். "பரவாயில்லை. நாட்டில் பிரபலமான வங்க பேரைச் சொல்லிட்டீங்க. கொஞ்சம் சரி செய்யணும் அவ்வளவுதான். இனி அடுத்த கேள்வி.

"நீங்க அடிக்கடி திருக்குறள், திருக்குறள் என்ற சொல்லைக் கேள்விப்பட்டிருப்பீங்க. அந்தத் திருக்குறளை எழுதியவர் யார்?

"உங்களுக்குத் தெரியும். தலையில் நீண்ட முடி. தாடியெல்லாம் இருக்கும். படத்தில பார்த்திருப்பீங்க, ஆம் தெரியும் சொல்லுங்க!" என்று எடுத்துக் கொடுத்தார்.

"பாரதியார்" என்றார் ஒரு முதியவர்.

பாகி ஆசிரியரை நோக்கி ஓடினாள். "சார், நீங்க கடினமான கேள்விகளா கேட்டா எப்படி?" என வாதிட்டாள்.

இதனை அடுத்து சிறுவர்களுக்காகப் பேசிய தலைவர் 'மழைநீர் சேமிப்பு நாட்டின் பொருளாதாரம் போன்ற சிறிய தலைப்புகளில் நீண்ட உரை ஆற்ற சிறுவர்கள் மாயமாயினர். எப்படியோ ஒவ்வொரு நிகழ்ச்சியும் இவ்வாறு இனிதே நிறைவுற்றது. சிறப்பு விருந்தினரோ தனது உரையில் காந்தியையும், பாரதியையும் இவர்கள் உச்சரிக்கும் வண்ணம் செய்ததே பாகியின் முயற்சிக்கு வெற்றி எனவும், அனைத்து மக்களும் ஒன்றுகூடி ஆடிப் பாடியதே சர்வமத ஒற்றுமை எனவும் புகழ்ந்து கூறினார்.

எப்படியோ சாதித்த பெருமையுடன் வீடு திரும்பிய பாகிக்குப் பேரதிர்ச்சி காத்திருந்தது. மல்லிகா வீட்டில் உள்ள பொருட்களோடு மாயமாய் மறைந்துவிட, பாகியின் மாமியார் வருவோர் போவோரிடம் பாகியின் வீட்டுச் சேவையை இகழ் பாடிக் கொண்டிருந்தார். பாகிக்கும், நாகிக்கும் ஒன்று புரிந்தது. சமூக சேவை செய்ய முன் வருவோருக்குச் சமூகமும் உண்மையான சேவை செய்ய வேண்டும். மேலும், சமூக சேவை குடும்பத்திலேதான் துவங்குகிறது என்று!

தோசை மாவு குறைவாக
இருக்கிறதே என்று மேல் மாவு
சேர்க்கும்போது தோசை வெள்ளையாக
இருக்கும். மேல் மாவுடன் சிறிது கடலை
மாவும் சேர்த்துக் கொண்டு தோசை
சுட்டால் தோசை நல்ல சிவப்பாக,
முறுகலாக இருக்கும்!
- வி. பி. மகராசி

# அவமானங்களை அவமதிக்காதீர்கள்!



அவமானங்களை அவமதிக்காதீர்கள்...

இதென்ன வேண்டுகோள்...?

புதியதாக இருக்கிறதே... அப்படியென்றால் அவமானங்களை மதிக்க வேண்டுமா?

நாம்பட்ட அவமானத்திற்கு மதிப்பு கொடுக்க வேண்டுமா?

நிச்சயம். நாம் பட்ட அவமானத்திற்கு நிச்சயம் மதிப்பு கொடுக்க வேண்டும்.

ரசாயனத்தில் அதிவேகத்தில் மாற்றம் ஏற்பட 'கிரியா ஊக்கிகள்' (calayst) உதவுவது போல, நமது மனதில் மாற்றம் ஏற்பட இந்த அவமானங்கள் கிரியா ஊக்கிகளைப் போலவே உதவி செய்கின்றன.

வாழ்க்கையின் பல கட்டங்களிலும் பலரும் பலரிடம் அவமானப்பட வேண்டியிருக்கிறது.

அவமானப்படுத்தப்படுகிறார்கள்.

அவமானப்படுத்தப்படுவது என்பது ஒரு சொல்லாக இருக்கலாம், ஒரு செயலாக இருக்கலாம், ஒரு பார்வையாக இருக்கலாம்.

இந்தச் சொல், செயல், பார்வை என்பதன் சக்தியை வெறுமனே படிப்பவர்கள் ஒருக்கால் புரிந்து கொள்ள முடியாமல் இருக்கலாம்.




ஆனால் பாதிக்கப்பட்டவர்களுக்கு நிச்சயமாகத் தெரியும்.

ஒரு சொல் அவர்களை எப்படிப் பாதித்தது...?

ஒரு செய்கை எப்படி அவர்களைப் பாதித்தது?

ஒரு பார்வை அவர்களை எப்படிப் பாதித்தது? என்று.

அவமானப்படுத்தப்பட்டவனின் மனம் கொதிக்கிறது. ஒருசில கோழைகள் அவமானத்தின் வேதனையைத் தாங்க முடியாமல் ஒடுங்கிப் போய் மூலையில் உட்கார்ந்து விடுகிறார்கள். சிலர் தற்கொலை செய்து கொள்கிறார்கள்.

இன்னும் சிலர்...

அந்த அவமானத்தையே வீர சபதமாக ஏற்றுக் கொள்கிறார்கள்.

அவர்களது மனத்தில் வைராக்கியம் பிறக்கிறது.

எந்தச் சக்தியாலும் மாற்ற முடியாத, அழிக்க முடியாத வைராக்கியம். அதாவது மனஉறுதி -

அவமானப்படுத்தப்பட்ட காரணம் மனத்தில் உறுத்திக் கொண்டே இருக்கிறது.

அந்தக் காரணத்திற்காக அவமானப் பட்ட போது அதை அடைந்தே தீருவேன் என்கிற அபாரமான உறுதி.

இந்த அபாரமான உறுதியுடன் அவர்கள் அடைய நினைத்த ஒன்றையே நினைத்து உழைத்துக் கொண்டு வரும் போது எதிர்ப்படும் எதிர்ப்புகள், தோல்விகள் எல்லாம் தூள்... தூள்... தூள்...

குறிப்பிட்ட அந்த லட்சியத்தை அடைய மெய்வருத்தம் பாரார், பசி நோக்கார்... கண் துஞ்சார்... எந்த வேலையைச் செய்ய வேண்டுமானாலும் தயார்... எங்கு போக வேண்டுமானாலும் தயார்... யாரைப் பார்க்க வேண்டுமானாலும் தயார்... எத்தனை மணி நேரம் உழைக்க வேண்டும் என்றாலும் தயார்.

அவர்களது கண்களின் முன்பு நிற்பது லட்சிய வெறி.



லட்சியத்தை நோக்கி நேராகவே ஓடிக் கொண்டிருக்கிறார்கள். இடது பக்கமும் வலது பக்கமும் பார்க்க முடியாமல் கண்கள் மறைக்கப்பட்ட பந்தயக் குதிரையைப் போல...

ஓடுகிறார்கள்... ஓடுகிறார்கள்... தங்கள் லட்சியத்தை நோக்கி ஓடிக் கொண்டே இருக்கிறார்கள்.

வெற்றி நிச்சயம்!

இன்று...

இன்று இல்லாவிட்டால் நாளை...

நாளை இல்லாவிட்டால் அதற்கு மறு நாள்...

அதுவும் இல்லாவிட்டால் இன்னொரு நாள்...

மனத்தளர்ச்சி கிடையவே கிடையாது.

இப்படிப்பட்டவர்களுக்குத் தோல்வி




ஏற்பட்டால் அது அவர்களுடைய மரணத்தினால்தான் இருக்க முடியும். இப்படிப்பட்ட முயற்சி பலனளிக்காமல் போகுமா?

நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்திற்கும் தெய்வத்தை நினைத்துக் கொண்டுதான் - தெய்வத்தின் துணை வேண்டுமென்று கேட்டுக் கொண்டுதான் முயற்சி செய்கிறோம்.

அந்தத் தெய்வம் கூட சில சந்தர்ப்பங்களில், சில காரணங்களால் நம்முடைய முயற்சிக்கு உதவி செய்ய முடியாமல் போகலாம் போலிருக்கிறது...

ஆனால் நாம் செய்த முயற்சி?

அது எப்பவுமே கைவிடாது பலனைத் தரும்.

எவ்வளவு அழகாக, ஆணித்தரமாக, உணர்ச்சி பொங்க, நம்பிக்கையோடு இருவள்ளுவர் சொல்கிறார்.

'தெய்வத்தான் ஆகாதது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்'

அப்பப்பா! ஒரு சந்தர்ப்பத்தில் நான் இந்தக் குறளை நினைத்துப் பார்த்த போது என்னுடைய உடம்பு சிலிர்த்தது.

என்னுடைய கண்களில் நீர் சுரந்தது.

உண்மை. சத்தியம்.

தெய்வத்தினால் முடியாமல் போனால் கூட முயற்சி கைவிடாதாம். நொந்து போன புண்பட்ட நெஞ்சங்களுக்கு இந்த வார்த்தைகள் எவ்வளவு அமிர்தமான வார்த்தைகள். எவ்வளவு ஆறுதலைத் தரக்கூடிய வார்த்தைகள்.

இப்படிப்பட்ட முயற்சி தனிமனிதனை மேன்மையடைச் செய்திருக்கிறது. ஸ்தாபனங்களை உருவாக்கியிருக்கிறது. அரசியலை மாற்றியிருக்கிறது. ஒரு நாட்டையே மாற்றி இருக்கிறது. ஏன்?

சரித்திரத்தையே மாற்றி இருக்கிறது.

இந்த இடைவிடாத - தளராத முயற்சி,

இந்த முயற்சிக்கு - இடைவிடாத - தளராத முயற்சிக்கு, லட்சியவெறிக்கு அடிப்படைக் காரணம் -

அவமானப்படுத்தப்பட்டதே.

அவமானப்படுத்தப்பட்டது,

ஒரு தனிமனிதனாக இருக்கலாம்,

ஒரு ஸ்தாபனமாக இருக்கலாம்,

ஒரு நாடாகக் கூட இருக்கலாம்.

எப்படி அவமானங்கள் வெற்றிக்கு வழிகோலாக ஆகின்றன என்று பார்ப்போமா?

அப்படி வெற்றி பெற்றவர்களைப் பற்றியும் தெரிந்து கொள்வோமா?

## தனிப்பட்டவர்களுடைய அவமானங்கள்

அவமானம் என்கிற வார்த்தைக்கு நிராகரிப்பு என்றும் சில சமயங்களில் அர்த்தம் கொள்ளலாம்.

'உனக்கு கட்டுப் போட்டாலும் நடிப்பு வராது' என்று டைரக்டரால் ஏசப்பட்ட நபர்கள் பிற்காலத்தில் பிரபல நட்சத்திரங்களானதுண்டு. நம்மூர் டைரக்டரால் ஸ்க்ரீன் டெஸ்டில் நிராகரிக்கப்பட்ட ஒரு தமிழ் நடிகை அகில இந்திய நட்சத்திரமாக ஜொலித்ததுண்டு.

''உனக்கு நடனம் நிச்சயமாக வராது'' என்று சொல்லப்பட்ட பெண்கள் நாட்டியராணியாக ஆனதுண்டு.

''உனக்குப் பாட்டு வராது'' என்று சொல்லப்பட்டவர்கள் பிரபல பாடகர்களாக ஆனதுண்டு.

''உன்னுடைய குரல் பின்னணி பாட ஏற்றதில்லை'' என்று சொல்லப்பட்ட பாடகர்கள் பிரபல பாடகர்களாக ஆனதுண்டு.

''நீ தெருவிலேதான் நிற்கப் போறே... பிச்சைதான் எடுக்கப் போறே'' என்று அவமானப்படுத்தப்பட்ட பலர் இன்று கோடீஸ்வரர்களாக இருப்பதைப் பார்க்கிறோம்.

''நாங்கள் சொந்த வீடு கட்டியதற்குக் காரணமே, நாங்கள் வாடகை வீட்டில் இருந்த போது அந்த வீட்டின் சொந்தக்காரர்கள் எங்களை இம்சித்ததே... அவமானப்படுத்தியதே... இனியும் ஒரு வாடகை வீட்டில் இருக்கக் கூடாது என்ற வைராக்கியத்துடன் ஆறே மாதத்தில் சொந்த வீட்டைக் கட்டினேன்'' என்று வீட்டைக் கட்டிய பலரும் ஒத்துக் கொள்வார்கள்.

''ஒருநாள் வசதியான உறவினர் காரில் மற்றவர்களோடு ஏறப் போனேன். அவர்களது செய்கை அவமானமாக இருந்தது. அன்று வைராக்கியம் எடுத்துக் கொண்டேன். அவரிடம் இருக்கும் காரை விட உயர்ந்த கார் வாங்குவது என்று. இன்று வாங்கி விட்டேன்'' - என்று பெருமையுடன் தான் வாங்கிய காரைக் காண்பித்து காரின் பின்னால் இருந்த உண்மையான காரணத்தைச் சொல்பவர் பலர் உண்டு.

இதைப் போலவே வாழ்க்கையில் நாம் உபயோகிக்கும் உயர்ந்த சாதனங்களின் வசதிகளின் பின்னால் ஒரு அவமானப்படுத்தப்பட்ட - அலட்சியப்படுத்தப்பட்ட - ஒரு பின்னணி சோகக் கதை இருக்கலாம்..

பணக்கார உறவினர்களால், நண்பர்களால் உதாசீனப்படுத்தப்பட்டவர்கள் குடும்பத்தில் பொருளாதார ஏற்றத் தாழ்வின் காரணமாக உதாசீனப்படுத்தப்படுபவர்கள் - பொருளாதாரம் ஒன்றையே அடிப்படையாகக் கொண்டு மனித உறவுகள் எல்லாம் மதிக்கப்படும் போது, எடை போடப்படும் போது, தங்களது தாழ்வுக்குக் காரணமாக இருக்கும் அந்தப் பொருளாதார மேம்பாட்டை எப்படியும் அடைந்தே தீருவது என்கிற லட்சியவெறியை அவர்களுக்கு ஏற்படுத்தி அவர்களை வாழ்க்கையில் முன்னேறச் செய்வது இந்த உதாசீனங்களே. அவமானங்களே!

## ஸ்தாபனங்களை உருவாக்கியதும் அவமானங்களே

''நீ எல்லாம் ஏண்டா உதவி டைரக்டரா வந்து என் பிராணனை வாங்குறே'' என்று பல உதவி நடிகைகள் முன்னணியில் அன்றைய பிரபல டைரக்டரிடம் இருந்து திட்டு வாங்கி அவமானப்பட்டவர்கள், சொந்தப் படம் எடுத்து டைரக்ட் செய்ய வேண்டும் என்ற விடாமுயற்சியுடன் ஈடுபட்டு வெற்றி பெற்ற பல உதவி டைரக்டர்கள் உண்டு.

தான் வேலை செய்த பத்திரிகையாசிரியர் தன்னுடைய திறமைக்கு மதிப்பு கொடுக்கவில்லை.. தனக்குக் கிடைக்க வேண்டிய நியாயமான மதிப்பு கிடைக்கவில்லை... தன்னை ஒருவிதத்தில் அவமானப்படுத்துகிறார் என்று மனம் நொந்து போன உதவி ஆசிரியர்கள் அந்தப் பத்திரிகையை விட்டு விலகி புதிய பத்திரிகையைத் தொடங்கி வெற்றிகரமாக நடத்தி வருவதைப் பார்க்கலாம்.

## அரசியலில் மாற்றங்களைச் செய்தது அவமானம்

தனிப்பட்ட மனிதன் அவமானப்படுத்தப்பட்ட போது வெகுண்டெழுந்து வீராவேசமாக சபதம் எடுத்து, ''புதிய கட்சியை உருவாக்கிக் காண்பிப்பேன்'' என்று சூளு

நான் 1981 - 82 ஆண்டுகளில் பாட்னாவில் இருந்தேன். எங்கள் குடியிருப்பு நாலு விசாலமான விடுதிகள் கொண்ட ''சியாமா மந்திர்'' என்ற பங்களா. கீழே இரண்டு விடுதிகளிலும் ஒரு கூட்டுக் குடும்பத்தினர் குடியிருந்தார்கள். எங்கள் அடுத்த விடுதியிலும் வேறொரு குடும்பம் குடியிருந்தது. எல்லோரும் நன்றாகத்தான் பழகிக் கொண்டிருந்தோம். அவர்களில் ஒரு குடும்பத்தில் இரண்டு மருமகள்களும் கருவுற்றிருந்தார்கள்.

இரண்டாம் மருமகளுக் குப் பிள்ளை பிறந்த போது மிகவும் விமரிசையாகக் கொண்டாடினார்கள். மருமகளின் பெற்றோர் ஏராளமான புடவைகள் பரிசாக அளித் தார்கள்.

பேறு காலம் நெருங்க நெருங்க மூத்த மருமகள் கலவரமாகக் காணப்பட்டாள். பாட்னாவிலேயே பெரிய ஆஸ்பத்திரிகள் இருக்க, வெகு தொலைவில் தானாப்பூர் என்ற ஊரில் பிரசவத்திற்கு ஏற்பாடு செய்திருந்தது எனக்கு வியப்பை அளித்தது.

மருமகளுக்குப் பிரசவம் ஆகியது. மருமகள் ஆஸ்பத்திரியில் இருக்க, மாமியார் - மாமனார் சுரத்தேயில்லாமல் காணப்பட்டார்கள். குழந்தைக்கு உடம்பு சரியில்லை என்றார்கள். பெண் குழந்தை என்றார்கள். ஒரு வாரத்திற்கெல்லாம் மருமகள் வீட்டிற்கு வந்து விட்டாள். அழுது கொண்டேயிருந்தாள். பின்னர்தான் மற்றொரு குடும்பம் மூலம் எனக்கு விஷயம் தெரிய வந்தது. குழந்தையை.... கதை முடிந்தது.

இவர்கள் அகர்வாலர்கள் என்று ஒரு முறை இவர்கள் வழிபடும் ராணி சதி அம்மன் கோயிலுக்குச் சென்றேன். பிறகுதான் தெரிந்தது (அதுவும் கீழ்வீட்டுக்காரர்கள் மூலம்) இவர்கள் ''சதி பிரதா'' கடைப்பிடிக்கும் குடும்பத்தினர் என்று. அந்தக் கோயில் ''சதி'' தேவி நாராயணியின் கோயில் என்று தெரிந்தது! ஏன் போனோம் என்று கூட வருந்தினேன்!

பெண் குழந்தையைக் கொல்வதற்கு என்று கூடச் சில கோயில்கள் இருக்கின்றன என்று இவர்கள் மூலம் கேள்விப்பட்டபோது எனக்குத் தலைசுற்றியது!

- லலிதா பரமேஸ்வரன்



ரைத்து வெற்றிகரமாக ஆட்சியில் உட்கார்ந்து ஆள்வதை உலகத்தின் பல நாடுகளிலும் பார்க்கலாம்.

## நாடு முன்னேறியதற்கும் அவமானம் ஒரு காரணம்

இரண்டாம் உலக மகா யுத்தத்தின் போது ஜப்பானில் குண்டுவீச அமெரிக்கர்களும் ஒரு காரணமாக இருந்தார்கள்.

ஜப்பானில் ஹிரோஷிமா, நாகசாகி விளைவித்த நாசங்கள் மக்களின் மனத்தில் இருந்து மாறவில்லை.

உழைப்பு, உழைப்பு - மன உறுதி.

அந்த அமெரிக்காவை பொருளாதாரத்தில் முறியடிக்க வேண்டும் என்கிற மன உறுதி.

இந்த மனஉறுதி இன்று ஜப்பானிய மக்களுக்கு வெற்றியைத் தந்து இருக்கிறது.

இன்று ஜப்பானிய பொருட்கள் அமெரிக்க நாட்டில் அதிக அளவு விற்பனையாகின்றன.

ஜப்பான் அமெரிக்க நாட்டின் பொருளாதாரத்தோடு தோளோடு தோள் மோதிக் கொண்டு வருகிறது.

நமது நாட்டையே எடுத்துக் கொள்வோம்...

அடிமையாய் இருந்தது. 'பிச்சைக்காரர்கள் நிறைந்த நாடு' என்று மேலைநாட்டினரால் இகழப்பட்ட நாடு.

இந்த நாட்டில் இன்று பொருளாதாரம் செழித்து வருகிறது. தங்கள் நாட்டுப் பொருட்களை விற்பனை செய்ய 'வாங்குபவர்கள்' நிறைய உள்ள நாடு இது என்று மேலைநாட்டினர் இந்திய நாட்டின் மீது படையெடுத்து வருகிறார்கள்...

ஆக -

ஒருவிதத்தில் பார்த்தால் தனிப்பட்ட மனிதனுக்கு, ஒரு ஸ்தாபனத்திற்கு, ஒரு நாட்டிற்கு ஒரு காலகட்டத்தில் கிடைத்த அவச் சொற்கள் - அவமானங்கள், இன்னொரு காலகட்டத்தில் அந்த தனிமனிதனுக்கு, ஸ்தாபனத்திற்கு, நாட்டிற்கு முன்னேற - லட்சியத்தை அடைய - உதவி செய்திருக்கின்றன என்பது புரியும்.

ஆகவேதான் -

மறுபடியும் கேட்டுக் கொள்கிறேன்.

அவமானங்களை அவமதிக்காதீர்கள். உங்களுக்குக் கிடைக்கும் அவமானம் காரணமாக நீங்கள் முன்னேற ஒரு வாய்ப்பு என்று எடுத்துக் கொள்ளுங்கள். நிச்சயம் முன்னேறுவீர்கள்!

- கமலநாதன்

## இதற்கு என்ன செய்வது?

சிறு குழந்தையாக இருக்கும் பொழுது என் சகோதரிக்கு இடது கன்னம், கண் உள்பட உப்பி, வீக்கத் தோன்றி, அதில் பெரிய பெரிய கொப்புளங்கள் உருவாகி, ஒரே எரிச்சல்! ஒரே நாளில் முகத்தின் அழகையே கெடுத்து விட்டது! 'அக்னி மாரி' என்று வேலைக்காரி சொல்லி அம்மனுக்குப் பிரார்த்தனை பண்ணிக் கொள்ளச் சொல்லி, எங்கள் வீட்டின் சார்பில் பொங்கல் போட்டாள்!

டாக்டரிடம் காட்டி, ஒரு வார சிகிச்சைக்குப் பின்னும் ஏதும் பயனில்லை. ஒரே ஜுரம்! தாங்கொணா வேதனை!



'அக்கியாக இருக்குமோ'வென்று எதிர் வீட்டு மாமி தட்டானைக் கூப்பிட்டு காவி கொண்டு சிங்க உரு மூன்று நாளைக்கு வரையச் சொன்னார்கள். எதற்கும் மசியவில்லை. நோயின் தீக்ஷண்யத்தால் குழந்தை துவண்டு, 'ஐயோ எரிகிறதே! ஐயோ எரிகிறதே!' என்று கூப்பாடு போட, வீட்டில் அனைவருக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. குழந்தையின் வேதனையைக் கண்டு, அன்றுதான் ஊரிலிருந்து வந்த எங்கள் வீட்டுப் பால்காரி, "பதினைந்து நாட்களாகவா அம்மா, இந்த அவஸ்தை! நான் ஊரிலில்லாமல் போய்விட்டேனே! பசலைக் கீரையை நன்றாக அம்மியில் நீர் தெளித்து அரைத்து, வெண்ணெயில் குழைத்து மூன்று நாட்கள் போட்டுப் பாருங்கள்! தானாக உதிர்ந்து விடும்!" என்றாள்.

அவள் சொன்னபடி மூன்று நாட்கள் சிகிச்சை அளிப்பதற்குள் கொப்புளங்கள் பொலபொலவென்று உதிர்ந்து எரிச்சல் தணிந்து, ஜுரம் இறங்கி, வீக்கம் வடிந்து, வந்த சுவடு தெரியாமல் தணிந்து விட்டது! எதற்கும் கேட்காத 'அக்னி மாரி' பசலைக் கீரைக்குப் பயந்து ஓடிவிட்டது!

- ஸீதா ராகவன்

# இந்த மாதம் எப்படி? பிப்ரவரி '94



## மேஷ ராசி :

அசுவனி, பரணி, கிருத்திகை 1 - ஆம் பாதம்.

சிறந்ததொரு மாதமாக இருக்கும். வாய்ப்புக்கள் தேடி வரும். அது கூடநிகழ்ச்சிக்கானதாகவும் இருக்கலாம். அல்லது தொழில், உத்தியோக ரீதியிலும் கூட அமையலாம். பயன்படுத்திக் கொள்வது உங்களுக்கு நல்லது. நீதித் துறையில் நீண்ட காலமாகத் தேங்கிக் கிடந்த வழக்கொன்றில் உங்களுக்குச் சாதகமான தீர்ப்பு கிடைக்கும். அது நில சம்பந்தமாகவும் இருக்கலாம் அல்லது தொழிற் பிரச்னையாகக் கூட இருக்கலாம். ஐயனாரப்பன் போன்ற காவல் தெய்வங்களைக் குலதெய்வமாகக் கொண்டுள்ளவர்களுக்கு அத் தெய்வங்களின் அருள் இம் மாதத்தில் பரிபூரணமாகக் கிடைக்கும். ஆராதிக்க வேண்டியவிதத்தில் ஆராதித்துப் பெற வேண்டியவற்றை அவர்களருளால் பெற்றுக் கொள்ளலாம். எருமை மாடு வைத்திருப்பவர்கள், கலைப் பொருள் கலைஞர்கள், அரசியல் தலைவர்கள் ஆகிய அனைவரும் கூடுதலான ஆதாயம் பெறுவர். எழுதும் எழுத்தில், சொல்லும் சொற்களில் பணிவும் பண்பும் இருத்தல் அவசியம். கன்னிப் பெண்களுக்குத் திருமணம் கைகூடி வரும். கனவுகள் வரும். கலைந்து விடும். ஆனால் அவற்றை எண்ணியே மனதை அலைய விடாதீர்கள். மாதத்தின் கடைசி இரண்டு நாட்களில் எதிர்பார்க்கும் இலக்கில் வெற்றி உண்டு. இந்த மாதத்தில் வரும் செவ்வாய்க் கிழமைகளில் இராகு காலத்தில் துர்க்கைக்கு அர்ச்சனை செய்வது மிகவும் நல்லது.

## ரிஷப ராசி :

கிருத்திகை 2, 3, 4 - ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 - ஆம் பாதங்கள்.

மாதத்தின் முற்பகுதியை விட பிற்பகுதியில் பலன் கூடுதலாக நடக்கும். வேள்வியைச் செய்யும் வேதவித்தகர்கள், கடனுதவி செய்யும் நிதி நிறுவனங்கள் வங்கிகளில் பணிபுரிபவர்கள் ஆகியவர்களுக்கு எதிர்பார்த்த நன்மைகள் கிடைக்கும். அரசு உதவியும் உண்டு. தகாத முறையில் இதுவரை உங்களுடன் பழகிய ஒருவரால், நீங்கள் அவமானம் அடைய வேண்டி வரலாம். இந்த நிலை தகாத காதல் காரணமாகவோ, அல்லது உங்கள் தகுதிக்குத் தாழ்ந்த நிலையில் இருந்த ஒருவருடன் பழகியதாலோ ஏற்பட வாய்ப்பு உண்டு. எனினும் விபரீதம் ஏதும் ஏற்படுவதற்கு முன்பே நீங்களாகவே விலக, குருபகவான் வாய்ப்பளிக்க இருக்கிறார்.

10க்கு வரும் சுக்கிரனை, அவரது வீட்டிலிருந்தே ஐந்தாம் பார்வையால் குரு பார்ப்பது விசேஷம்தான். எனவே இந்த ராசிக்காரர்கள் எத்துறையைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் அவர்களுக்கு தருமகருமாதிபதியான சனியினால் சகலமும் நல்ல நிலையிலேயே முடியும். குருபலம் இல்லை என்றாலும் இருவரில் ஒருவருக்குக் குருபலம் இருந்தால் போதும் என்ற கொள்கைக்கு ஏற்பத் திருமணம் நடக்கும். இசை மேதைகள், நடிப்புத் துறையினர் மற்றும் இரசாயனத் துறையில் பணிபுரிபவர் ஆகியவர்களுக்குச் சிறப்பான நிலை உருவாகும். மாதத்தில் 12, 13, 14 தேதிகள் மற்றும் 25, 26, 27, 28 தேதிகள் இந்த இராசிக்காரர்களுக்குப் பஞ்சக்கிரக யோகம் ஏற்பட்டு எதிர்பாராத தனலாபத்தைத் தரலாம்.

## மிதுன ராசி :

மிருகசீரிஷம் 3, 4 - ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

நல்லதொரு மாதமாகும். உங்கள் இராசியை குரு பார்க்கிறார். அது மட்டுமல்ல மாதத்தின் கடைசி இரண்டு நாட்களில் பொன்காரகன், மண்காரகனாகிய செவ்வாயைப் பார்க்கிறார். அத்துடன் சுக்கிர, புத சம்பந்தம் பெற்ற சனீஸ்வரனையும் குரு பார்ப்பது விசேஷம். இசை மேதைகள், வாத்தியம் வாசிப்பவர்கள், நடன நாரிமணிகள், எழுத்துலகமேதைகள், எரிபொருள் துறையினர் ஆகிய அனைவருக்கும் ஏற்ற சூழ்நிலை உருவாகியுள்ளது. எதை எதிர்பார்த்திருந்தீர்களோ அது நடக்கும். பதவி உயர்வா, புதுப்பட ஒப்பந்தமா, அல்லது புத்தக வெளியீடா எதுவானாலும் என்ன, தயக்கமின்றிப் பெற இருக்கிறீர்கள். வீடு, வாகன அமைப்பு நன்றாக உள்ளது. எனவே அதற்கான முயற்சியைச் செய்யும் வாய்ப்பு அமையும். உஷ்ண சம்பந்தமான நோய் ஒன்று வந்து சரியாகும். ஆதித்ய ஹிருதயம் அல்லது தூர்க்காஸ்தோத்திரம் படிப்பது நல்லது. வெளிநாட்டுப் பிரயாணம் ஒரு சிலருக்கு ஏற்படலாம். கேது கெடுக்கலாம். ஆனால் ராகுவோ கொடுக்கலாம்.

## கடக ராசி :

புனர்பூசம் 4 - ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

ஆயில்ய நட்சத்திரக்காரர்கள் சற்று கவனமுடன் செயல்பட வேண்டும். எல்லோரிடமும் சுமுகமாகப் பழகும் பெண்கள் கூடிய மட்டும் எவருக்கும், எதற்காகவும், எந்த வாக்கும் தர வேண்டாம். ஏழிலும், எட்டிலும் சஞ்சரிக்கும் கிரகங்கள் சஞ்சலத்தைத் தரக் கூடியதாகத்தான் உள்ளன. அங்காரகன் உச்சமடைந்திருப்பினும் இராசியைப் பார்ப்பது சரியல்ல. மாதத்தின் பிற்பகுதியில் சுக்கிர புத சேர்க்கை குடும்பத்தின் அமைதிக்கு உத்திரவாதம் அளிக்கின்றனர். மாதத்தின் கடைசி இரண்டு நாட்களில் ஐந்து கிரகங்கள் அஷ்டமத்தில் இருந்தாலும் கேதார யோகம் என்பது பலமான நிலையில் சஞ்சரிப்பதால் ஒருசிலருக்கு விபரீத ராஜ யோகம் ஒன்றைத் தரலாம். அது எதிர்பாராத தனலாபத்தின் மூலமும் ஏற்படலாம். அல்லது அரசியலில் செல்வாக்கையும் சேர்க்கலாம். அதனால் பதவியும், பெருமையும் சேரும். எனினும் பூச நட்சத்திரத்தில் பிறந்தவர்களில் நான்காம் பாதத்தைச் சேர்ந்தவர்களுக்குச் சில சில்லறைத் தொந்திரவுகள் ஏற்படலாம். அது தொழில்ரீதியாகவும் ஏற்படலாம். அல்லது குடும்பத்தில் உள்ளவர்களாலும் கூட ஏற்படலாம். அமைதியுடனும், எச்சரிக்கையுடனும் சொற்களை உபயோகிப்பது நல்லது. கேதுவால் தனலாபம் உண்டு. ஆனால் ராகுவோ அதற்குச் செலவினைத் தருவார். எனவே ஏற்றத் தாழ்வு உள்ள மாதம் என்றே கூற வேண்டும். துர்க்கையைத் துதியுங்கள். துணிந்து செயல்பட்டு வெற்றி காண்பீர்கள்.

## சிம்ம ராசி :

மகம், பூரம், உத்திரம் 1 - ஆம் பாதம்.

பாம்புக் கிரகங்களால் சில தொல்லைகள் ஏற்பட்டு நீங்கும். உடல்நிலை பாதிப்போ, அல்லது மறைமுக எதிர்ப்புகளோ ஏற்படலாம். ஆறிலிருந்து பார்க்கும் அங்காரகன் சில விஷயங்களில் அனுகூலத்தை உண்டாக்குவார். படத்துறையினரும், கலைஞர்களும் சுகிரவனால் கூடுதல் ஆதாயம் பெறுவர். ஏழில் உள்ள கிரகங்கள் குருவின் பார்வையால் பாவபலன்களைத் தடுத்து, எதிர்பாராத நன்மைகளையே தரும். எழுத்துலக மேதைகளுக்கு ஏற்றமானதொரு நல்ல கட்டம் ஆரம்பம். நீங்கள் எழுத்தாளரானால் உங்களுக்கு இந்த மாதத்தில் ஏதே



பச்சை மிளகாய் நிறைய பிருந்து விட்டால் அடுப்பில் வாணலியைப் போட்டு, கடுகு, பெருங்காயம் தாளித்து எண்ணெயைச் சற்றுக் கூடுதலாக விட்டு மிளகாயை வதக்குங்கள். நன்கு வதக்கியபின் தேவையான அளவு புளியைக் கரைத்துக் கெட்டியாக விட்டு உப்பு வெல்லம் போட்டு மிளகாய்ப் பச்சடியாக்கி விடுங்கள். இந்த வெல்ல மிளகாய்ப் பச்சடி தோசை, சப்பாத்தி எதற்கும் ஏற்றது. தனிச்சுவை கொண்டது!

- ரமணி ரங்கநாதன்

குழந்தைகளுக்குக் கொடுக்கும் ஆகார வகைகளில் இனிப்புச் சுவை சேர்க்க வெல்லத்தைப் பயன்படுத்தலாம். பலகார வகைகளுக்கும் வெல்லத்தைப் பயன் படுத்தினால் குழந்தைகளுக்கு அதிக இரும்புச் சத்து அதிலிருந்து கிடைக்கிறது.

- ஆர். அஜிதா



னும் பரிசோ, பட்டமோ, பதவி உயர்வோ கூட கிடைக்கும். அரசியலில் உள்ளவர்கள் அரசுத் துறையினர் ஆகியவர்களுக்கு சோதனைகள் பல ஏற்பட்டாலும் குருவின் பார்வையாலும், அங்காரகனின் பலத்தாலும், தங்களுக்கு ஏற்படும் எந்தச் சோதனைகளிலிருந்தும், வேதனைகளிலிருந்தும் விடுபட்டு, சாதனை பல புரியக்கூடிய நிலை மாதத்தின் முற்பகுதியிலேயே ஏற்பட்டு விடும். அலுவலகத்துக்கு செல்லும் பெண்கள் விலைமதிப்புள்ள பொருள்களை எடுத்துச் செல்லாமலிருப்பது நல்லது. திருப்பதிக்கும் சென்று வாருங்கள். திருப்தியான நிலை ஏற்படும். மாதத்தின் பிற்பகுதியில் ஆதித்ய ஹிருதயத்தைப் படியுங்கள். அல்லது பிறர் கூறக் கேளுங்கள். மக நட்சத்திரத்தில் பிறந்துள்ளவர்களின் எழுத்தும் பேச்சும் பிறர் பாராட்டைப் பெற்றுத் தரும்.

## கன்னி ராசி :

உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 - ஆம் பாதங்கள்.

ஏற்கெனவே எழுதிக் கொண்டு வருவது போல கன்னி ராசிக்காரர்களுக்கு நல்லதொரு காலகட்டம் ஆரம்பமாகியுள்ளது. அதேசமயம் தனிப்பட்டவர்களின் கிரக அமைப்பும், தசாபுத்தியும் அனுகூலமான நிலையில் இருந்தால் எதையும் சாதிப்பீர்கள். எப்படியும் சாதிப்பீர்கள். இது எத்துறையினர்க்கும், எப்பாலருக்கும் பொருந்தும். குறிப்பாகக் கன்னிப் பெண்களுக்குத் திருமணம் கைகூடி வரும். மாதத்தின் முற்பகுதியில் திருமணமே கூட நடந்து விடும். பிற்பகுதியில் திருமணத்திற்கும், அல்ல அது சம்பந்தமாகப் பேசுவதற்கும் ஏற்ற சூழ்நிலை இல்லை. தடைகள் அதிகம் ஏற்பட்டு விடும். மண்காரகனாகிய செவ்வாய் உச்சம் பெற்றும், கட்டிடக்காரனாகிய சுக்கிரனுடன் சம்பந்தம் பெற்றும் இருப்பதால் வீடு ஒன்று வாங்க அல்லது மாற்ற ஏற்ற சூழ்நிலை தெரிகிறது. பயன்படுத்திக் கொள்ளுங்கள். ராகுவால் பொன் பொருள் சேர்க்கக்கூடிய நிலை இருப்பினும், கேதுவால் அது தடைபடலாம். உடல், மனநிலை இரண்டுமே சற்று பாதிக்கப்படலாம். என்றாலும் குருவால் அவை சரியாகும். எனவே கேது கிரகத்திற்கும், சுக்கிரனுக்கும் அர்ச்சனை செய்வது நல்லது. மாதத்தின் கடைசி இரண்டு நாட்களில் எதிர்பாராத தனலாபமோ, வெளியூர்ப் பிரயாணமோ ஏற்பட்டு மனத்திற்கு மகிழ்ச்சியைத் தரும் நிலை உண்டு.

## துலா ராசி :

சித்திரை 3, 4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

சந்திரன் சஞ்சாரத்தைப் பொருத்து அன்றாடப் பணிகளில் சற்று மாற்றம் ஏற்படுமே தவிர, மற்றபடி மாதம் பூராவும் ஒரே சீரான நிலைதான் நீடிக்கும். இராசிநாதனை மாதத்தின் பிற்பகுதியில் குரு பார்ப்பதால் குடும்ப சுகத்திற்குத் தடை இராது. மகிழ்ச்சியுடனேயே கழியும். புத்திரர்களின் முயற்சியைக் குரு தனது பார்வையில் அருள் பாலிக்கிறார். நெடுந்தூரப் பிரயாணத்திற்கு வாய்ப்பு உண்டு. தசாபுத்திகளுக்கு ஏற்ப இதில் மாறுதலும் ஏற்படலாம். மாதத்தின் முற்பகுதியில் வீட்டுமனை ஒன்று வாங்கும் யோகம் உண்டு. தொழில்ரீதியாகக் கெடுபிடி இருக்காது. ஐந்தில் சனிபகவான் இருந்தாலும் அஞ்சத் தேவையில்லை. எனினும் ஒரு பெண், அல்லது நெருங்கி உள்ளவரால் உங்கள் மனநிலை பாதிக்கப்படலாம். ஒருவரை ஒருவர் விரும்பும் இளங்காதலர்கள் அளவோடு பழகி, முறையாகப் பெற்றோரை அணுகி தம் விருப்பத்தைத் தெரிவித்தால் வசந்த கால ஆரம்பத்தில் திருமணம் கைகூடி வந்து உங்கள் வாழ்விலும் வசந்தம் வீசும். துர்க்கையையும், ஸ்ரீசுப்ரமணியரையும் ஆராதியுங்கள். சும்மா சொல்லக் கூடாது. நிஜமாகவே பொருளாதாரம் சற்று உங்களை அலைக்கழிக்கத்தான் செய்யும்!

## பாலகுமாரன்

போராடும் பெண்மணிகள் (புதிய வெளியீடு) .................... 22.00
சிநேகமுள்ள சிங்கம் .......... 40.00
காதல் வெண்ணிலா ............ 22.00
நானே எனக்கொரு போதிமரம் (மறுபதிப்பு) ................ 30.00
இனி என் முறை .............. 30.00
ஆசை என்னும் வேதம் ........ 40.00
என் கண்மணி ................. 22.00
அகல்யா .................... 24.00
மெர்க்குரிப் பூக்கள் ........... 42.00
கரையோர முதலைகள் ......... 38.00
என்றென்றும் அன்புடன் ....... 27.00
காவல் தாகம் ................ 22.00
எட்ட நின்று சுட்ட நிலா ....... 24.00
விசிறி சாமியார் ............. 22.00
சுந்தரி கண்ணால் ஒரு சேதி .... 24.00
ஆசைக் கடல் ................ 44.00
அடுக்கு மல்லி ............... 23.00
நெல்லுச் சோறு .............. 38.00
வல்லிமரத்தாலி .............. 30.00
இரவல் கவிதை .............. 28.00
அன்புக்குப் பஞ்சமில்லை ..... 26.00
ஆனந்த வயல் ............... 40.00
ஒரு வழிப் பாதை ........... 27.00
கிருஷ்ண அர்ஜுனன் ......... 22.00
தாயுமானவன் ................ 38.00
முன்கதைச் சுருக்கம் ..........30.00
சின்ன சின்ன வட்டங்கள் ......25.00
திருமணத் தீவு ...............24.00
உறவில் கலந்து உணர்வில் நனைந்து (புதிய நாவல்) ...............23.00
பந்தயப் புறா ..................46.00
வர்ண வியாபாரம் .............36.00
இனியெல்லாம் சுகமே ...........50.00
தலையணைப் பூக்கள் ..........38.00
வில்வமரம் ....................20.00
பலாமரம் .....................24.00
கனவுகள் விற்பவன் ............48.00

## சுஜாதா

ஸ்ரீரங்கத்து தேவதைகள் ........20.00
வைரங்கள் ....................16.00
என்றாவது ஒரு நாள் ..........19.00
வசந்தகால குற்றங்கள் ..........28.00
அடுத்த நூற்றாண்டு ...........24.00
கனவு தொழிற்சாலை ..........47.00
கரையெல்லாம் செண்பகப்பூ ....30.00
ஒரு பிரயாணம் ஒரு கொலை ...15.00
ஆதலினால் காதல் செய்வீர் ....19.00
நிஜத்தைத் தேடி ..............20.00
இரயில் புன்னகை .............14.00
தங்க முடிச்சு ..................24.00
பிரிவோம் சந்திப்போம் - I .....26.00
பிரிவோம் சந்திப்போம் - II ....40.00
அப்பா அன்புள்ள அப்பா ......13.00

## விருச்சிக ராசி :

விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை.

இராசிநாதனாகிய அங்காரகன் உச்சமடைந்து, மூன்றாமிடத்தில் கதிரவனுடன் இணைந்து இருப்பதால் கடந்த இரண்டு மாதங்களில் இருந்த மனக்குழப்பமோ, பணக் கஷ்டமோ ஓரளவுக்கு நீங்கி வீடு கட்ட நிலமோ, அல்லது வீடோ வாங்கக் கூடிய வாய்ப்பினைப் பெற இருக்கிறீர்கள். இதர கிரகங்களால் ஏற்படுகின்ற இன்னல் களைக் குரு கண்காணித்து, நீங்கள் சமயோசிதமாக நடந்து எந்தவகைய முயற்சியிலும் வெற்றியடையும்வண்ணம், உங்களுக்கு உற்ற சமயத்தில் உரிய ஞானத்தையும், ஆற்றலையும் தந்து உதவுவார். எனவே தக்ஷிணா மூர்த்திக்குரிய ஸ்தோத்திரத்தைக் கூறலாம். ஸ்ரீ வ்ருஷப தேவர் அருளியுள்ள மேற்படி ஸ்தோத்திரத்தால் அனைத்தும் நலமாக முடியும். மற்றபடி தாயாரின் உடல்நிலையைப் பற்றி மருத்துவரைக் கலந்தாலோசிக்கும் நிலை ஏற்படலாம். இந்த மாதத்தில் உங்களிடமிருந்து இதற்கு முன் உதவி பெற்றவர்களால், உங்களுக்கு உரிய நேரத்தில் உதவி கிடைக்கும். அது பணமாகவோ, பரிசாகவோ இருக்கும். சகோதரகாரகனாகிய செவ்வாயால், உங்கள் உடன் பிறப்புக்களுக்கு உங்களுடைய உதவி உண்டு. அவர்களாலும் நீங்கள் உதவி பெறலாம். சுப நிகழ்ச்சியாகக் கூட அது அமையலாம்.

## தனுசு ராசி :

மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.

மாதத்தின் பிற்பகுதியில் பொருளாதாரச் செழிப்பு ஏற்படும். பதவி உயர்வு, புது ஒப்பந்தங்கள், தொழிலொன்றை ஆரம்பித்தல் போன்ற நற்பலன்கள் நடக்கும். 11ல் உள்ள குரு, கும்பத்தைப் பார்ப்பதால், கும்பத்தில் இருந்த விளக்காக இருந்த உங்கள் நிலை மாறி, குன்றின் மேலிட்ட தீபமாகச் சுடர்விட இருக்கிறீர்கள். அதாவது உங்கள் திறன் வெளிப்படும். ஆற்றல் பாராட்டப்படும். இந்த ராசியைச் சேர்ந்த மூல நட்சத்திரத்தில் பிறந்த ஆண்களுக்கு ஆண் மூலம் அரசாளும் என்பதற்கேற்ப நல்லதொரு பதவியைப் பெறுவீர்கள். நீண்ட காலத்து அபிலாஷை ஒன்று நிறைவேறும். அது வீடு வாங்கும் விஷயமாகவும் இருக்கலாம். அல்லது திருமண விஷயமாகவும் அமையலாம். நடிப்புத் துறையினர், எரிபொருள் ஏற்றுமதியாளர்கள் மற்றும் பொறியியல் துறையினர் எதிர்பார்த்த இலங்களில் இலாபம் பெறுவர். ராகுவைத் தவிர மற்ற அனைவருமே நன்கு உதவும் நிலையில்தான் உள்ளனர். நல்லதொரு மாதம் எனலாம். இராசியில் ராகு உள்ளவர்கள் செவ்வாய்க் கிழமை இராகு காலத்தில் அம்மனுக்கு விளக்கேற்றி தியானம் செய்யுங்கள். சிரமங்கள் அகலும். செய்யுந்தொழில் கிரமமாக நடக்கும். மகான் ஒருவரை சந்திக்க இருக்கிறீர்கள். அவரது ஆசிகளால் உங்கள் வாழ்க்கை நல்ல நிலையில் இருக்கும். இந்த மாதத்தில் இந்த ராசியில் பிறக்கும் குழந்தைகள் கிரக மாலிகா யோகத்தைப் பெற்றுப் புகழுடன் விளங்குவார்கள்.

## மகர ராசி :

உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 - ஆம் பாதங்கள்.

இராசிநாதன் ஜீவனஸ்தானத்தில் ஆட்சியில் இருப்பதும், செவ்வாய் இந்த ராசியில் உச்சம் பெற்றிருப்பதும், இதற்கு முன் செவ்வாய், சனி பரஸ்பர பார்வை மூலம் பல சங்கடங்களை அனுபவித்திருந்தால் அதற்கும் தற்போது நிவர்த்தி கிடைக்கும். எந்தக் காரணத்தாலோ அரசியலிலோ, அரசுத் துறையிலோ, நடிப்புத் துறையிலோ ஓரங்




அவியல் செய்யும்போது அரைத்த தேங்காய் விழுதைத் தயிரில் கலக்காமல் வேக வைத்த கறிகாய்களுடன் சேர்த்துப் பிறகு தயிர் சேர்க்கவும். இதனால் அவியல் நீர்த்துப் போவதைத் தவிர்க்கலாம்.

- ஆர். அஜிதா



பலவித க்ரீம்களை வாங்கி உபயோகித்து முகவசீகரம் திருப்தியான பலனை அளிக்கா விட்டால் க்ரீம்களுக்கு 'குட்பை' சொல்லி விட்டு வீட்டிலேயே சுலபமான முறையிலேயே க்ரீம் தயார் செய்து உபயோகித்துத் திருப்திப்படுங்கள்!

பால் ஏடு - இதுதான் முக்கியமான பொருள். இல்லையா, ஆலிவ் எண்ணெய் இவற்றுடன் சிறிதளவு கிளிசரின் கலந்து பூசிக் கொள்ளுங்கள்.

- விஜயகீதா

கட்டப்பட்டவர்கள் தற்காலிகப் பணிநீக்கம் செய்யப்பட்டவர்கள் ஆகியவர்களுக்கு நற் காலம் பிறந்துள்ளது எனலாம். கட்டிடக் கலைஞர்கள், ரியல் எஸ்டேட் வகையில் தொழில் செய்பவர்கள் ஏற்றம் பெறுவார் கள். இரசாயனத் துறை வல்லுனர்கள், அது சம்பந்தப்பட்ட நிர்வாகத் துறையினர் ஆகிய வர்களுக்கு நல்லதொரு காலகட்டம் ஆரம் பம். எனவே பார்க்க வேண்டியவர்களைப் பார்ப்பதற்கும், கேட்க வேண்டியதைக் கேட்பதற்கும் ஏற்ற சூழ்நிலை. எனவே பயன்படுத்திக் கொள்ளுங்கள். அலுவலகப் பணியாளர்கள், வாகனங்கள் மூலம் வாழ்க்கை நடத்துபவர்களுக்கு ஆதாயம் உடனடியாகக் கிடைக்கும். எனினும் உங்கள் சுயகௌரவத்தை விட்டுத்தான், உங்கள் சிக்கல்களைத் தீர்த்துக் கொள் மேலதிகாரிகளைப் பார்த்தே ஆக வே டும். செவ்வாய் உச்சம் அடைந்திருப் லும், நீதிதேவன் ஆட்சியில் இருப்பதாலு வழக்குகளில் மற்றும் அரசு விவகாரங்களில் வெற்றி உங்கள் பக்கம் என்பதை நினைவில் கொள்ளவும்.

## கும்ப ராசி :

அவிட்டம் 3, 4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

இந்த ராசியில் பிறந்துள்ள சதய நட்சத் திரக்காரர்களுக்கு மாதத்தின் பிற்பகுதியில் ஏற்படும் ஆதித்தாய யோகத்தின் மூலம், சுபநிகழ்ச்சி ஒன்றினைச் செய்து முடிப்பீர் கள். அல்லது ஏற்பாடு செய்வீர்கள். சுக்கிர சம்பந்தம் ஏற்படுவது இதற்கு ஒரு காரண மாகும். இது சனியின் மத்திய கால கட்டம். எனவே அதன் பாதிப்பு இருந்தாலும், குரு வின் பார்வை இராசியில் உள்ள சனீஸ்வர னுக்கு இருப்பதால் கவலைப்படாதவாறு சூழ்நிலை தானாகவே உருவாகி வரும். குறிப்பாக இந்த இராசிக்காரர்கள் சனிக் கிழமைதோறும் சனியின் தோஷம் நீங்க நல்லெண்ணெய் ஸ்நானம் தவறாமல் செய் வது நல்லது. சனி நீராடு என்பதின் பொருள் இதுவேயாகும். மற்றபடி இரும்பு வியாபாரி கள், கட்டிடம் கட்டி விற்பவர்கள், வீட்டு மனை விற்பவர்கள் பட உரிமையாளர்கள், கூடுதலான இலாபம் அடையலாம். சனீஸ் வர ஸ்தோத்திரமும், கோளறு பதிகமும் படிப்பது நல்லது.

## மீன ராசி :

பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட் டாதி, ரேவதி.

அங்காரகன் உச்சத்தில் இலாப ஸ்தானத் தில் அமர்ந்துள்ளதால் இந்த ராசிக்காரர் களுக்கு மனோதைரியமும், எதையும் எற்று சாதிக்கும் ஆற்றலும் ஏற்படும். பழனி முரு கனை ஆராதிப்பவர்களுக்கு அனைத்து நல னும் உண்டு. ஆனால் பிற்பகுதியில் சுடும் பத்தில் உள்ள கிரகச் சேர்க்கை, இந்த இராசிக்காரர்களுக்கு ஏற்ற சூழ்நிலையில் அமையவில்லை. எனினும், எச்சரிக்கையும், கவனமும் தேவை. கூடிய மட்டும் உங்கள் கடமையை மட்டும் சரிவர செய்து முடியுங் கள். அடுத்தவர் விஷயத்தில் தலையிட்டால் அரிசிப் பெட்டியில் கையை நுழைத்த குரங் கின் நிலைதான் ஏற்படும். எனவே அஷ்ட மத்துக் குருவும் உங்களுக்கு உறுதுணையாக இல்லை. தசாபுக்தி சரியாக இருப்பவர்கள் இது பற்றிய கவலையை விடுங்கள். எனி னும் முருகனை மனம் உருக நினைந்து ஆராதிப்பவர்களுக்கு நல்லதொரு மாறுத லும், மனதுக்கு ஆறுதலும் கிடைக்கும். மற்றபடி பொருளாதார நிலை சற்று மந்த மாக அமையலாம். மூன்றாமிடத்து கேது உங்களுக்குரிய முறையில் தேவையான பொழுது எக்காரியத்திலும், எத்துறையி னர்க்கும் வெற்றி தேடித் தருவார். ஆக அண்ணனையும், தம்பியையும் நம்புங்கள். நல்லது நடக்கும்.

# நல்லவையே நடக்கும்

“இதுவரை நடந்தவை அனைத்தும் நன்றாகவே நடந்து முடிந்துள்ளன. இப்போது நடப்பவையும் நன்றாகவே நடந்து கொண்டிருக்கின்றன. இனி நடக்கப் போவதும் நன்றாகவே நடக்கும். அதனால் ஏன் கவலைப்படுகிறாய்?''

என அன்று பாரதப் போரின் பொழுது பார்த்தனைப் பார்த்து, அவனது சாரதியாக அமர்ந்த கண்ணன் கேட்டதாகப் பாரதம் கூறுவதை நாம் அறிவோம். கடந்த காலத்தில் நடந்தவைகளையும், தற்போது நடப்பவைகளையும் நாம் நேரில் பார்த்தோ அனுபவித்தோ இருக்கிறோம். ஆனால் எதிர்காலத்தில் எப்படி இருக்கும்? கீதாசாரியன் சொன்னது போல நன்றாக இருக்குமா? அல்லது வேறு விதமாக அமையுமா எனத் தெரிந்து கொள்ளும் ஆர்வம் எவர்க்கும் இருப்பது இயற்கையே. அவ்வாறு அறிவதற்கு சோதிடம் ஒரு வழிகாட்டி. அந்த முறையில் தனி மனிதன் ஒருவனது வாழ்க்கையைப் பற்றி, அவனது உள்ளங்கையில் உள்ள ரேகைகளைக் கொண்டே அறியலாம்.

ஜோதிடக் கலைகளில் ஒன்றான கை ரேகைக் கலை எல்லா காலத்திலும், எல்லா நாட்டிலும் பின்பற்றப்படும் கலையாகும். குறிப்பாக நமது கைகளில் காணப்படும் ரேகைகளுக்கும் நமது வாழ்க்கையில் நடக்கின்ற சம்பவங்களுக்கும் தொடர்பு உள்ளது என்பதை ஜோதிடக் கலை வல்லுனர்கள் ஆராய்ந்து எழுதியுள்ளனர். ஒரு சிறு குழந்தையின் கைரேகையைக் கொண்டு, எதிர்காலத்தில் அக்குழந்தை எத்துறையில் சிறந்து விளங்கும் என்பதைத் துல்லியமாகக் கூறலாம். நமது வாழ்க்கையில் எக்காலத்திலும் நல்லவையே நடக்கும் வண்ணம் நமக்கு அருள்பாலிக்கும் தெய்வம் நமது குலதெய்வமே. ஒரு சிலருக்கு ஆண் தெய்வமாகவும் அமையலாம். அல்லது பெண் தெய்வமாகவும் இருக்கலாம். அந்தத் தெய்வத்தின் அருள் நமக்கு இருக்க வேண்டுமானால் நமது உள்ளங்கையில் தேவி பத்மரேகை (R) படத்தில் உள்ளது போல் அமைந்திருக்க வேண்டும். அத்துடன் புதன் மேட்டிலிருந்து, சந்திர மேடு வரை (s-t) வளைந்ததொரு ரேகை இருக்க வேண்டும். இதற்கு அருள் ரேகை, அல்லது தெய்வீக ரேகை என்று பெயர். இப்படிப்பட்டவர்களுக்கு தெய்வத்தின் அருள் உண்டு எனவும், இவர்கள் முறைப்படி தங்களது இஷ்ட தெய்வத்தையோ, குலதெய்வத்தையோ உபாசித்து வந்தால், அவர்களுக்கு முறைப்படி உபாசனா தெய்வத்தின் அருள் கிடைக்கும் எனவும் கூறுவர்.

மேற்குறித்த ரேகைகளுடன், நல்லதொரு விதி ரேகையும் (f-g) குருமேட்டில் சாலமன் ரேகையும் (m-n) அமைந்திருக்க வேண்டும். அத்துடன் கீர்த்திக்கும், புகழுக்கும், செல்வத்திற்கும் காரணமான சூரிய ரேகையும் (c-d) அமைய வேண்டும். இவ்வாறு சிறந்த ரேகைகள் அப்பழுக்கின்றி அமைந்தால் அவர்களது வாழ்க்கையில் எல்லாமே நல்லனவாகவே நடக்கும். அதற்கு மாறாக, ரேகைகளின் இடையில் குறுக்கு வெட்டு (w-y) மற்றும் தீவுகள் (I) இருந்தால், அவை அமைந்துள்ள இடத்தைக் கொண்டு, அந்தந்த காலகட்டத்தில் அவர்களுக்குச் சோதனைகள் ஏற்படும் வாய்ப்பு உள்ளது என்பதை அறியலாம். உதாரணமாக ஆயுள் ரேகையில் ஒரு வெட்டும், சனி மேட்டில் ஒரு நக்ஷத்திரமும் இருந்தால் சிறு விபத்துக்கள், கண்டங்கள் ஏற்படும் எனலாம். சந்திரமேட்டில் நக்ஷத்திரக் குறி இருப்பின் தண்ணீரால் கண்டம், அல்லது மின்சார தாக்குதல் ஏற்படும் எனலாம்.

எது எப்படி இருப்பினும் நாம் நமது குலதெய்வத்தினை அறிந்து, முறைப்படி ஆராதனை செய்வதுடன், முழு முதற் கடவுள் எனப்படும் கணபதியையும், ஆஞ்சநேயர், முருகக் கடவுள் ஆகியவர்களையும் உள் மனதோடு வணங்கி வந்தால் கண்ணன் கூறியது போல எக்காலத்திலும் நல்லதே நடக்கும்.

– ஜெயலட்சுமி கிருஷ்ணன்



# மங்கையர் மலர்

ஆண்டுமலர்
இணைப்பு

பிப்ரவரி '94



அமைதி
வேண்டிய
பெண்மணிகள்!

''சொட்டு நீலத்துடன்''
வழங்கப்படும் இலவசப் பரிசுகள்
என்றுமே என்னைக் கவர்ந்தது இல்லை.



பொதுவாக ஒரு பொருளை நுகர்வோர் நிராகரிக்கும்போது, அதன்
தயாரிப்பாளர் தனது விற்பனைக்கு கைகொடுக்க, பயன்படுபவையே
இந்த இலவசப் பரிசுகள் :

ஆனால் 'உஜாலா'வின் சிறப்பே தனி

நமக்கு தேக்கரண்டி அளவுகள் தேவை யில்லை ?

உஜாலாவின் நான்கு ''துளிகளே'' போதும் ஒரு லிட்டர் நீருக்கு.

உபயோகிப்பவர்களுக்கு

உஜாலாவின் ஒவ்வொரு துளியும் துணிகளில் நிரந்தரமான வெண்மையை உண்டாக்கி மனதில்
நிறைந்த திருப்தியை தருகிறது. நீரில் எளிதாக கரைந்து துணிகளின் இழைகளில் உடனடியாக
உறிஞ்சப்பட்டு இன்ஸ்டண்ட் ஆக்ஷன் மூலம் ஒரே சீராக பரவும் தன்மையை உடையது
உடைகளின் அழுக்கை நீக்கி துணிகளுக்கு பளபளப்பான வெண்மையை தருகிறது
ORAL TOXICITY TEST சோதனை மற்றும் SKIN IRITATION TEST
சோதனையில் சருமத்திற்கு எந்த கெடுதலையும் உண்டாக்காது என்று சான்றிதழ் பெற்றது
உஜாலா. இது ஜோதி லேபரட்டரியின் ஒரு சிறந்த தயாரிப்பு ஆகும்.




**JYOTHY LABORATORIES**

Marketing Office:
44, Shivshakthi Ind. Estate, Marol,
Bombay-400 059.

Regd. Office: Sreekrishna Nagar
Bombay-400 066.

# உஜாலா




Cocoa Butter. It's the preferred choice of leading beauticians the world over. Cocoa Butter is nature's finest moisturiser and the world's best known skin softener and conditioner. Cocoa Butter penetrates into every pore of the skin, providing rich oils while maintaining the correct moisture levels. Keeping your skinhealthy, soft and supple. This goodness is now available to you in Tips and Toes Zero Dryness Lotion. Zero Dryness Lotion. The international way to look good. Feel good.

ero Dryness Lotion. Diet for healthy skin.

FOLKLORE-TT-148/93

Mangayar Malar February – '94
REGISTERED NO. TN MS (E) 221
Registered as Newspaper in Srilanka

# கென்ஸ் ஒன்றே போதும் பேன்களே வராது எப்போதும்



கென்ஸ் — பேன்களின் முழுமையான எதிரி.
கென்ஸ், பேன்களை ஒழிக்கும். ஈறுகளை அழிக்கும்.
மல்லிகை மணம் கமழும் எண்ணெயில் உருவாகும் கென்ஸ், கேசத்திற்கு நறுமணம் நல்கும். எனவே சக்தி வாய்ந்த கென்ஸைப் பயன்படுத்தி பேன் உங்கள் குழந்தையை பாதிக்காத வண்ணம் பேணுங்கள்.

பெரியவர்களும் உபயோகிக்கலாம்.

கேசத்திற்குத் தேவையான அளவு எடுத்துத் தலையிலும், மயிர்கால்களிலும் நன்கு தடவி 20 நிமிடங்கள் ஊற வைக்கவும். பின்னர் தலையை நன்கு அலசிக் குளிக்கவும். இவ்வாறு வாரம் ஒரு முறை செய்தால் போதும். அப்புறம் பாருங்கள் பேன்களின் எல்லையில்லாத தொல்லை இனி இல்லவே இல்லை.

கென்ஸ் — பேன்களை வானுலகு அனுப்பும்.
கென்ஸ் 15, 55 மி.லி. அளவுகளில் கிடைக்கும்.




கென்ஸ்

PHARM PRODUCTS

தஞ்சாவூர் 613 007.

# அன்னைக்கு ஏற்ற மிகச்சிறந்த பாப்பா உணவு.



ஆரோக்கியமாகவும், மகிழ்ச்சியாகவும் உள்ள அன்னையால்தான், ஆரோக்கியமான மகிழ்ச்சியான குழந்தையை உருவாக்க முடியும். ஆகையால்தான் கர்ப்பமாக உள்ளபோது நீங்கள் முட்டை உண்ண வேண்டியது அவசியமாகிறது.

முட்டையிலே செறிந்துள்ள உன்னத தரமுள்ள புரதச்சத்து உங்கள் குழந்தைக்கு மனோபலத்தையும், உடல்பலத்தையும் அளிக்கவல்லது. தவிர முட்டையிலே, நல்ல கண்பார்வைக்கு அவசியமான வைட்டமின் 'ஏ' நிறைந்துள்ளது. நல்ல ஜீரண சக்தியை



முட்டை குருமா: இலவச வண்ணச்சித்திர வழிகாட்டி மற்றும் 30-க்கும் மேலான முட்டை சமையல் குறிப்புகள் அடங்கிய சிறு புத்தகத்திற்கு எழுதவும்: NECC, அஞ்சல் பெட்டி எண் 833, புனே-411 004

அளிக்கவல்ல வைட்டமின் 'பி' சத்துக்களின் அனைத்து வகைகளும் உள்ளன. வலுவான எலும்புகளுக்காக வைட்டமின் 'டி' உள்ளது.

ஆரோக்கியமான இரத்தத்திற்கென இரும்புச் சத்தும், நல்ல சுறுசுறுப்பைத் தரவல்ல ஃபாஸ்ஃபரஸும் உள்ளது.

அன்றாடம் ஒரு முட்டை அன்னையிடமிருந்து அருமைக் குழந்தைக்கு கிடைக்கும் விலையுயர்ந்த பரிசு.

## நித்தம் ஒரு முட்டை.

NECC

நேஷனல் எக்
கோ- ஆர்டினேஷன் கமிட்டி

Enterprise/NECC/183/Tm

இதயத்திற்கு இதமானது

Mangayar Malar February – '94
REGISTERED NO. TN MS (S) 231
Registered as Newspaper in Srilanka

திருமதி ஷீலா பால், BSc., D.N.D.,
உணவியல் வல்லுநர் கூறுகிறார்.

"நல்லெண்ணெய், இரத்தத்தில் கொலஸ்ட்ரால் அளவைக் குறைக்கின்றது. ஆகவே தான் நமது முன்னோர்கள் அதை "நல்ல எண்ணெய்" (தமிழ்) "மஞ்ச்சி நூனெ" (தெலுங்கு) என்று அழைத்தனர். இது உடல் ஆரோக்கியத்திற்கு பாதுகாப்பானது என்பதால்தான் தென்னிந்தியர்கள் சமையல் எண்ணெய்யாகப் பயன்படுத்துகின்றனர்."

Sheila Paul



Mrs. Sheila Paul B.Sc.,
Diploma in Nutrition & Dietetic
Senior Dietition
Madras



இதயம் நல்லெண்ணெய் தயாரிப்பில் தரத்தில் சிறந்த எள் மட்டுமே உபயோகிக்கப்படுகின்றது. பிஞ்சு எள் மற்றும் பொக்கு முழுவதுமாக நீக்கப்படுகின்றது. ஆகவே இதயம் நல்லெண்ணெய் பொங்குவதில்லை. பூரி, வடை, பஜ்ஜி எது வேண்டுமானாலும் தயார் செய்யலாம்.



இதயம் சுகமாக்கும் எதையும் சுவையாக்கும்

*Bombay Distributor*

**M/s. P.R. OIL DEPOT (P. Ramalingam)**
MATUNGA (C.R) Bombay – 400 019.
Phone : 4372077 & 4376874

**இதயம்**
**நல்லெண்ணெ**